# உட்பொதிவு

# முகவுரை

ஜே. கிருஷ்ணமூர்த்தி, இன்றைய சமுதாயம் பெருமளவில் பயனடையும் விதத்தில், மனித சிந்தனையில் ஆழ்ந்த பாதிப்பையும், மாற்றத்தையும் ஏற்படுத்தியவராகப் பலராலும் கருதப்படுகிறார். அவரது வாழ்க்கையும் போதனைகளும் இருபதாம் நூற்றாண்டின் பெரும்பகுதிக்கு வியாபித்திருந்தது. அவர், ஒரு ஞானியாக, ஒரு தத்துவ மேதையாக, ஒரு சிந்தனையாளராக இருந்து, அறிஞர்கள் - பாமரர்கள், இளைஞர்கள் - வயோதிகர்கள் என்று பலதரப்பட்ட இலட்சக்கணக்கான மக்களின் வாழ்வில் ஒளியேற்றி யிருக்கிறார். சமயங்களைக் கடந்த வித்தியாசமான வாழ்க்கைமுறை இருக்கிறது என்பதைச் சுட்டிக் காட்டியதன் மூலம், சமயம் என்பதற்கே ஒரு புதிய அர்த்தத்தை அளித்துள்ளார். தற்காலச் சமுதாயப் பிரச்சனைகளை எடுத்துக் கொண்டு, அவற்றைத் துணிவுடன் ஆராய்ந்துள்ளார். மற்றும், பிரச்சனைகளால் அல்லல்படும் மனம் செயல்படும்விதத்தை, ஒரு விஞ்ஞானியைப் போல, நுணுக்கமாகவும், துல்லிய மாகவும் அவர் ஆய்வு செய்துள்ளார். ''முழுவதுமான, நிபந்தனைகளற்ற விடுதலையை'' மனிதன் பெறுவதில்தான், தன் கவனம், அக்கறை எல்லாம் இருக்கின்றது என்று கிருஷ்ணமூர்த்தி அறுதியிட்டு கூறினார். பயம், வன்முறை, சுயநலம் மற்றும் துக்கம் ஆகியவற்றால் தளைபட்டிருக்கும் மனிதனை, அவைகளிலிருந்து விடுவிப்பதில் அவர் தன்னை முழுவதுமாக ஈடுபடுத்திக் கொள்ளவும் செய்தார்.

ஜிட்டு கிருஷ்ணமூர்த்தி [11.05.1895 - 17.02.1986] ஆந்திர மாநிலத்திலுள்ள மதனபள்ளி என்ற ஊரில் நடுத்தர வகுப்பைச் சார்ந்த, பக்தி சிரத்தையுடைய குடும்பத்தில் பிறந்தவர். பிரம்மஞான சபையின் (Theosophical Society) தலைவர்களால், அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் 'உலக ஆசான்', சிறுவன் கிருஷ்ணமூர்த்திதான் என்று 'கண்டெடுக்கப்' பட்டு, உலக ஆசானாக பிரகடனப்படுத்தப்படுகிறார். இளமைப் பருவத்தில், மெய்யுணர்வு அனுபவங்கள் சில அவருக்கு ஏற்பட்டது. அந்த அனுபவங்கள், அவருள் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தி, வாழ்க்கையைப் பற்றிய புதிய பார்வையை அவருக்கு அளித்தது. பிறகு, அவர் தனித்த வழியில் செயல்பட தலைப்பட்டார். குரு என்ற முறையில் இல்லாமல், ஒரு நண்பனாக, மக்களைச் சந்தித்து உரையாடினார்.

1920 ஆம் ஆண்டிலிருந்து 1986 ஆம் ஆண்டு வரை, அதாவது, தமது முதிர்ந்த தொண்ணூற்றி யோராம் வயது வரை, கிருஷ்ணமூர்த்தி, உலகம் முழுவதும் பயணம் மேற்கொண்டு, மக்களுடன் கலந்துரையாடினார், சொற்பொழிவுகள் நிகழ்த்தினார், புத்தகங்கள் எழுதினார், அறிஞர்கள், சன்னியாசிகள் என்று பல தரப்பட்டவர்களுடனும் கலந்துரையாடினார். தவிர, அவருடைய கருணைமிக்க, நிவாரணம் அளிக்கவல்ல சமூகத்தை நாடி வரும் ஆண், பெண் இருபாலருடனும் ஆறுதலாக மௌனத்தில் அமர்ந்திருக்கவும் செய்தார். அவரது போதனைகள், படிப்பறிவு, பாண்டித்தியம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டதல்ல. மாறாக, மனிதனின் நிலைமையைப் பற்றிய அவரது ஆழ்ந்த நுண்ணறிவையும், புனிதத்தைப் பற்றிய அவருடைய சீரிய பார்வையையும் அது

அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. 'தத்துவங்கள்' எதையும் அவர் விமர்சிக்கவில்லை. நமது அன்றாட வாழ்க்கைக்குத் தொடர்புடைய விஷயங்களைப் பற்றியே கலந்துரையாடினார். ஊழலும் வன்முறையும் நிறைந்த இந்த நவீன சமுதாயத்தில் வாழ்க்கை நடத்துவதில் உள்ள பிரச்சனைகள் பற்றியும், பாதுகாப்பையும் சந்தோஷத்தையும் தேடி அலையும் தனி மனிதனின் செயல்பாடுகள் பற்றியும், கோபம், பேராசை, பயம், துக்கம் போன்ற மனச்சுமைகளிலிருந்து மனிதன் விடுபட வேண்டியதன் அவசியத்தைப் பற்றியும் பேசினார்.

சென்ற நூற்றாண்டில், இரண்டு உலகப் போர்கள் நடந்தது, அணு பிளக்கப்பட்டது, கொள்கை கோட்பாடுகள் வீழ்ச்சி அடைந்தது, பூமி, காட்டு மிராண்டித்தனமாக நாசம் செய்யப்பட்டது. மற்றும், மனித வாழ்க்கையின் அனைத்து அம்சங்களிலும் சீர்கேடுகள் நேர்ந்தது. அத்தகைய கொந்தளிப்பான காலகட்டத்தில் வாழ்ந்தவர் கிருஷ்ணமூர்த்தி. பல்வேறு தொழில்நுட்பத் துறையிலும் குறிப்பிடத்தக்க வளர்ச்சியைக் கண்டதும் அந்தக் கால கட்டத்தில்தான் வரப்போகும் நிகழ்வுகளைப் பற்றிக் கிருஷ்ணமூர்த்தியின் தீர்க்க தரிசனமான தொலைநோக்குப் பார்வை, நமக்கு முன்னெச்சரிக்கை விடுத்திருக்கிறது. பூமிக் கோளத்திற்கு ஏற்பட்டுள்ள நெருக்கடியான நிலைமையைப் பற்றி நாம் விழிப்புணர்வு பெறுவதற்கு பல ஆண்டுகளுக்கு முன்பாகவே, பள்ளிச்சிறுவர்களைப் பூமியைப் பராமரிப்பதில் அக்கறை காட்டும்படியும் அதைப் பயன்படுத்துவதில் மென்மையோடு இருக்கும் படியும் அறிவுரை கூறினார். ''மூளையின் வேலைகள் அனைத்தையும் கணினி எடுத்துக்கொள்ளும் பட்சத்தில்,

மனிதனின் நிலைமை என்னவாகும்?'' என்று 1970-களிலேயே அவர் வினவினார்.

தற்காலச் சமூக, பொருளாதார, அரசியல் பிரச்சனைகளைப் பற்றி உரையாடும்போதுகூட, கிருஷ்ணமூர்த்தியின் பதில்களும் அவரது அணுகு முறையும், வாழ்க்கை, சத்தியம் பற்றிய கால வரம்பற்ற தீர்க்க தரிசனத்தில் வேரூன்றி இருப்பது மிகத் தெளிவாகவும் கருத்தை ஈர்க்கும்விதமாகவும் உள்ளது. பிரச்சனைகள் எதுவானாலும் அவைகளுக்குப் பின்னால், பிரச்சனையைத் தோற்றுவித்தவர் இருக்கிறார் என்பதை அவர் சுட்டிக் காட்டினார். சச்சரவுகளுக்கும் வன்முறைகளுக்கும் பிறப்பிடம் மனித மனதிற்குள்தான் இருக்கிறது என்பதையும் விளக்கினார். பிரச்சனைகளின் தீர்வாக, அவர் எந்த வழிமுறையையும் வகுத்துத் தரவில்லை. ஏனென்றால், ஒவ்வொரு மனிதனின் மனதிலும் ஆழமாகப் பதிந்துள்ள குறைபாட்டின் அறிகுறியாகவே, அவர், பிரச்சனை களைப் பார்த்தார்.

மேலை நாடுகள், கீழை நாடுகள் இரண்டிலுமே, புகழ் பெற்ற மிகச்சிறந்த சமய போதகர்களில் ஒருவராக கிருஷ்ணமூர்த்தி கருதப்பட்டார். இருப்பினும், அவர், குறிப்பிட்ட எந்தவொரு மதத்தினையோ சமயப் பிரிவையோ தேசத்தையோ சார்ந்தவராக இருக்க வில்லை. எந்தவொரு குறிப்பிட்ட அரசியல் சித்தாந்தத்தையோ கொள்கை சித்தாந்தத்தையோ அவர் ஏற்றுக் கொள்ளவில்லை. மாறாக, இந்த சித்தாந்தங்கள் தான் மனிதர்களிடையே பிளவுகளை உண்டாக்கி, சண்டைகளுக்கும் போர்களுக்கும் காரணமாக இருக்கின்றன என உறுதிபடக் கூறினார். நாம்

மற்றவர்களிலிருந்து வேறுபட்டவர்கள் அல்ல, ஒவ்வொருவரும் மனித குலத்தின் ஏனையோரைப் போன்றவர்களே என்பதையும் 'நாம் மனிதர்கள்' என்ற உண்மை தான் முதன்மையானதும் முக்கியமானதும் ஆகும் என்பதையும் அடிக்கடி வலியுறுத்தி கூறினார். தியானம், மற்றும் மெய்யறிவு மிகுந்திருக்கும் இயல்பை, நம் அன்றாட வாழ்க்கையில் கொண்டுவர வேண்டியதன் அவசியத்தை அவர் எடுத்துரைத்தார். அத்தகைய அடிப்படை மாற்றத்தால்தான், புதிய மனதை, புதியதொரு நாகரீகத்தைத் தோற்றுவிக்க முடியும் என்றுரைத்தார். ஆக, மனிதர்களால் உருவாக்கப்பட்ட மத நம்பிக்கைகள், தேசப்பற்று, குறுகிய மனப்பான்மை போன்ற எல்லைகளைத் தாண்டிச் செல்வதாக, கிருஷ்ணமூர்த்தியின் போதனைகள் உள்ளன. அதேசமயம், தற்காலத்திய மனிதனின் உண்மையைத் தேடும் முயற்சிக்கு ஒரு புதிய அர்த்தத்தையும் வழிகாட்டுதலையும் அவருடைய போதனைகள் அளிக்கின்றன. தற்கால நவீனயுகத்திற்கு ஏற்றதாகவும் உள்ள அவரது போதனைகள், காலத்திற்கு அப்பாற்பட்டது, அனைவருக்கும் பொதுவானது.

வரலாற்றுப் பதிவுகளின்படி, வேறு எவரையும் விட, மக்களை அதிக எண்ணிக்கையில் சந்தித்து உரையாடியவர் கிருஷ்ணமூர்த்தி என்று கணக்கிடப் பட்டுள்ளது. பெரும்பாலும் திறந்தவெளி மைதானங் களில் நடைபெற்ற அவருடைய சொற்பொழிவு களுக்கு, ஆயிரக்கணக்கில் மக்கள் கூடினர். அறுபது ஆண்டுகளுக்கும் மேல், அவர் ஆற்றிய சொற்பொழிவு களுக்கு, மக்கள், அதுவும் இந்தியாவிலிருக்கும் பெருநகரங்களான சென்னை, மும்பை, தில்லி போன்ற நகரங்களிலும், கலிபோர்னியாவிலிருக்கும் ஓஹாய்

பள்ளத்தாக்கிலும், சுவிட்சர்லாந்திலுள்ள சானனிலும் இங்கிலாந்தின் தென்பகுதியிலுள்ள ப்ராக்வுட்டிலும் பெருந்திரளாக வந்து கேட்டனர்.

கிருஷ்ணமூர்த்தியின் போதனைகள், வயது முதிர்ந்தவர்கள் அல்லது அறிவு ஜீவிகளுக்காக மட்டுமே உள்ளது என்று கற்பனை செய்துகொள்வது, மிகவும் வருந்தத்தக்க பிழையாகும். இளைஞர்களை மிகவும் எளிதாக ஈர்ப்பதாக அவருடைய சிந்தனைகள் இருப்பதை, இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் அவரால் நிறுவப்பட்ட பள்ளிகளில் பயிலும் மாணவர்களிடையே அவர் நிகழ்த்திய எண்ணற்ற உரையாடல்களே சான்று பகரும். பயமோ, போட்டியோ இல்லாமல், தன்னைப் பற்றிய ஆழ்ந்த புரிதலோடு, மாணவர்கள் வளர்வதற்கான சூழலை, இப்பள்ளிகளில் தோற்றுவிக்க அவர் பெரிதும் முயன்றார். மிகச் சிறந்த ஆசானாகிய கிருஷ்ணமூர்த்தி, இளைஞர்களின் நுண்ணுணர்வைத் தட்டியெழுப்பி, அவர்களுக்கு இப்புவியின் அழகையும் உணர்த்தினார், அது மட்டுமல்லாமல், மனிதர்கள் படும் இன்னல்களையும் உணர்த்தினார். மிகவும் சிக்கலான மனித மனத்தின் செயல்பாடுகளைப் பற்றி, இளைஞர்களுடன் சுவாரஸ்யமாக உரையாடி, அவர்கள் கவனத்தை அதன்பால் ஈர்த்தார்.

கிருஷ்ணமூர்த்தி, ஆங்கிலத்தில் மட்டுமே பேசியும் எழுதியும் இருந்தாலும், அவருடைய நூல்கள், ஏறக்குறைய ஐம்பது மொழிகளில் மொழிபெயர்ப்பு செய்யப்பட்டுள்ளது. சர்வாதிபத்திய ஆட்சியிலிருந்த நாடுகளில், பல ஆண்டுகளுக்கு, அவருடைய நூல்கள் இரகசியமாகப் புழக்கத்திலிருந்தது. உலகம் பூராவும் பல லட்சக்கணக்கில் அவர் நூல்கள் விற்பனையாகின்றன.

அவர் எழுதியது ஒரு இலட்சம் பக்கங்களுக்கு வரும். இரண்டாயிரத்து ஐந்நூறு ஒலி நாடாக்களும், நூற்றி ஐம்பது ஒளிநாடாக்களும் [1960–1986] கிருஷ்ணமூர்த்தி ஆற்றிய உரைகளின் தொகுப்பாக உள்ளது.

மேற்கூறியவை அவர் நமக்கு விட்டுச் சென்ற பொருட்சொத்து. வாழ்க்கையைப் பற்றிய ஆழ்ந்த புரிதலும், மனதில் அளப்பரிய கருணையும் கொண்டிருந்த கிருஷ்ணமூர்த்தி, பலருடைய வாழ்க்கையில் பரிபூரண மாற்றம் கொண்டு வந்தார். மாற்றம் அடைந்த எண்ணற்ற மக்களின் இதயத்தில் அவரின் உயிர்த்துடிப்புள்ள போதனைகள் வாழ்ந்து கொண்டிருக்கிறது.

அவருடைய இறுதிநாட்களில், அவருடைய சிந்தனையின் சாரத்தைக் கூறும்படி கேட்டுக் கொண்டதற்கு, அவருடைய அழகான இரத்தினச் சுருக்கமான பதில் இதோ : '' 'தான்' இருக்குமிடத்தில் 'அது' இல்லை''. புனிதத்தை 'அது' என்று அவர் குறிப்பிடுவது வழக்கம். 'அது', கிருஷ்ணமூர்த்தியின் வாழ்விலும் போதனைகளிலும் ஊடுருவி நின்றிருந்தது.



# 1

# நமது பிரச்சனை

**ப**த்து சொற்பொழிவுகளைக் கொண்ட தொடர் நிகழ்ச்சி ஒன்றை நடத்த உள்ளோம். தவறான அபிப்பி ராயங்கள், கருத்து வேறுபாடுகள் தோன்றாமலிருக்க, பேச்சாளருக்கும் உங்களுக்கும் இடையே தெளிவான தொடர்பை ஏற்படுத்திக் கொள்வது மிகவும் அவசியம் என்று நினைக்கிறேன். ஐயா, இச் சொற்பொழிவுகள் எந்தவொரு விதத்திலும் பிரச்சார நோக்குடையதல்ல. உங்களில் யாரையும் எந்தவொரு கோட்பாட்டிற்கோ, குறிப்பிட்ட நடைமுறைக்கோ, கருத்துகளுக்கோ இணங்க வைப்பதற்காக நான் இங்குப் பேசவில்லை. பிரச்சாரம், கேட்பவரின் மனோபாவத்தைக் குறிப்பிட்ட விதத்தில் கட்டுப்படுத்தும் நோக்கம் கொண்டவையாக இருக்கும். என் நோக்கம் அத்தகையதே அல்ல. உங்கள் கருத்து சரியானது என்ற வகையில் என் பேச்சு அமையும் என்று எதிர்பார்த்து நீங்கள் வந்திருந்தாலோ, நீங்கள் பின்பற்றி வாழ புதிய கருத்தை என்னிடமிருந்து எதிர்பார்த்தாலோ, குறிக்கோளை அடைய நிச்சயமான வழிமுறைகளை என்னிடமிருந்து எதிர்பார்த்தாலோ அல்லது உங்கள் எண்ணப்போக்கில் புரட்சி ஏற்படுத்திக் கொள்ள விழைந்து இங்கு வந்திருந்தாலோ, உங்கள் எதிர் பார்ப்புகள் நிறைவேறாது. அவ்வாறான உங்கள்

எதிர்பார்ப்புகள் தவறானவை என்று அஞ்சுகிறேன். அடிப்படையில் மிகவும் முக்கியம் வாய்ந்ததாக நான் கருதுவது உள்மனதின் புரட்சியைத் (revolution in the unconscious) தானே தவிர, மேலோட்டமான புரட்சியை அல்ல. இதைப் பற்றி விரிவாகப் பேச உள்ளேன்.

நான் முதலில் குறிப்பிட்டபடி, நாம் ஒருவரை யொருவர் ஆழமாகப் புரிந்து கொள்ள வேண்டும். என்னுடைய நோக்கம் என்னவென்பதையும், உங்கள் நோக்கம் என்னவென்பதையும் நாம் இருவருமே தெரிந்து கொண்டால் நமது பிரச்சனைகளைப் பற்றிக் கலந்துரை யாடத் தகுந்த சூழல் ஏற்படக்கூடும். மாறாக, நீங்கள், உங்கள் வரையறுக்கப்பட்ட கருத்துகளுடனும், நான் அதற்கு மாறான கருத்துகளுடனும் இருந்துகொண்டு, நம்மிடையே தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளாமல் பேசத் தொடங்கினால் இணைந்து செயல்படுவதற்கு உரிய சூழ்நிலை ஏற்படாது. ஆகவே, நம் உரையாடலின் துவக்கத்திலேயே சரியான தொடர்பை ஏற்படுத்திக் கொள்வது மிகவும் முக்கியமானது என்று நான் எண்ணுகிறேன். நான் உங்கள் குருவோ தலைவரோ இல்லை. என்னிடமிருந்து எதையும் எதிர்பார்க்காதீர்கள்.

நாம் சிக்கிக் கொண்டிருக்கும் இப்போதைய பிரச்சனைகளை, எந்தவொரு அரசியல் தலைவரையோ, மதத் தலைவரையோ, குருவையோ நாம் பின்பற்றுவதால் முடிவிற்குக் கொண்டுவர முடியுமென்று எனக்குத் தோன்றவில்லை. நான் முன்பு கூறியதுபோல, இன்னல் களை முடிவிற்குக் கொண்டு வருவதற்கு உள்ளாழ் மனதில் புரட்சி தோன்ற வேண்டியது அவசியமாகிறது. கருத்துகளில், எண்ணங்களில் மேலெழுந்தவாரியாக மாற்றம் ஏற்பட்டால் மட்டும் போதாது.

ஆக, நான் எதைப் பற்றிப் பேச உள்ளேன் என்பதைத் தெரிந்து கொள்வது முக்கியமல்லவா? இது பிரச்சாரக் கூட்டம் அல்ல. உங்களை நம்ப வைக்கும் எண்ணத்துடன் நான் எதையும் பேசவில்லை. முயற்சிப்பதெல்லாம் பிரச்சனைகளுக்கு உண்மையான தீர்வு காண இயலுமா என்று கண்டுபிடிப்பதே. பிறர் சொல்வதை அப்படியே ஏற்றுக் கொள்ளாமலும், தான் சொல்வது மட்டுமே மிகவும் சரியானது என்று வலியுறுத்தாமலும் கருத்துகளை ஒதுக்கித் தள்ளாமலும் தெளிவாக இருக்கும்போதுதான் தீர்வு காண முடியும். எண்ணம் எப்படிச் செயல்படுகிறது, சிந்தனையின் இயல்பு என்ன என்பதைப் பற்றி முழுமையாக அறிவதில்தான் நாம் தீவிரமாக இருக்க வேண்டும்.

எதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும் என்ற ஆராய்ச்சி தேவையில்லை. எதைச் சிந்தித்தாலும், சரியான முறையில் சிந்திக்கத் தவறினால், நம் செயல்கள் அனைத்தும் மேலும் குழப்பத்தில் நம்மை ஆழ்த்தி விடும் என்பது வெளிப்படை. ஆகையால், நம் கவனம் எல்லாம் ஒரு கருத்தினை ஏற்றுக் கொள்வதா இல்லையா என்பதில் இல்லாமல், சரியான முறையில் ஒன்றுபட்டுச் சிந்திப்பது எப்படி என்பதில்தான் இருக்க வேண்டும். அதாவது, நம்மை எதிர்நோக்கும் பிரச்சனைகளைப் பற்றி சரியான முறையில் எவ்வாறு சிந்திப்பது என்பதில் நம்மிடையே தொடர்பு இருக்க வேண்டும். 'சரியான' என்ற வார்த்தையை நான் 'தவறானது' என்பதற்கு எதிர்மறையாக உபயோகிக்கவில்லை. சிந்திப்பதில் ஒரே ஒரு முறை தான் உள்ளது - சரியாக சிந்தித்தல், தவறாக சிந்தித்தல் என்று அது முரண்பட்டு இரண்டாக இல்லை. மனதில் தோன்றும் எண்ணத்தைப் பின்தொடர்ந்து சென்று அதில் பொதிந்திருக்கும் உண்மையைப் பற்றிக் கண்டுபிடிக்க

இயலுமா, குறிப்பிட்ட ஒரு பிரச்சனையைப் பற்றிய எண்ணத்தின் உண்மையை அறிய முடியுமா என்பதைப் பற்றி நாம் அறிந்து கொள்ள முற்படுவோம்.

கேட்பது, உன்னிப்பாகக் கேட்பது (hearing and listening) என்ற இரண்டிற்கும் உள்ள வித்தியாசத்தைப் பார்ப்பது முக்கியமானதல்லவா? வழக்கமாக ஒலிக்கும் குறிப்பிட்ட ஓசைகள் நமக்குப் பழக்கப்பட்டதாகி விடுகின்றன. அவற்றை எவ்வித கவனமுமின்றி காதில் போட்டுக் கொண்டு கடந்து செல்கிறோம். பிறர் சொல்வதைக் கூட நம்மில் பலர் அம்முறையிலேயே சிறிதும் அக்கறையில்லாமல் கேட்கிறோம். கவனத்துடன் கேட்பதில் ஒப்புக் கொள்ளுதலோ மறுத்தலோ இல்லை, உங்களிடம் பேசுபவர் எதைச் சொல்ல விழைகிறார் என்பதைப் பேச்சளவில் மட்டுமின்றி ஆழமாகப் புரிந்து கொள்ளவே நீங்கள் கவனத்துடன் கேட்கிறீர்கள். அவர் சொல்வதை எதிர்த்துப் பேசினாலோ, உங்கள் தனிப்பட்ட கருத்தை திணிக்கப் பார்த்தாலோ கவனமாகக் கேட்பது என்பது இல்லாமல் போகிறது. விமர்சனங்களோ, மொழிபெயர்ப்புகளோ செய்யாமல், சொல்லப்படும் விஷயத்தை கவனத்துடன் கேட்பதால் அடிப்படை மாற்றம் பெற்ற முழுமையான புரட்சி, உள்ளாழ் மனதில் ஏற்பட வாய்ப்புகள் உள்ளது. அத்தகையதோர் புரட்சி மட்டுமே மதிப்பிற்குரியது, அடையத்தக்கது.

எண்ணிலடங்கா நம் பிரச்சனைகளுக்குத் தீர்வு காண்பதற்காக ஓயாது யோசிக்கிறோம். சிக்கல்கள் அதிகரிக்கின்றனவே தவிர தீர்ந்தபாடில்லை. உள்ளாழ் மனதின் போராட்டங்கள், சச்சரவுகள், அடையத் துடிக்கும் இலக்குகள் போன்றவற்றின் விளைவாக எழும் பிரச்சனைகளை, மேலெழுந்தவாரியாக சிந்தித்துத் தீர்வு

காண முடியாது. உள்ளாழ் மனதின் அடிப்படை மாற்றம் முற்றிலுமாக ஏற்பட்டாலொழிய பலன் கிட்டாது. மேலோட்டமாகப் பொருளாதாரம், சமூகம், அரசியல் போன்ற மற்ற துறைகளில் செய்யப்படும் அரைகுறை யான ஒட்டுப்போடும் மாற்றங்களுக்கு மிகக் குறைந்த அளவிலேயே பலன் இருக்கும். இதுவரை நாம் கண்ட எந்த புரட்சியும் நம் வாழ்க்கையை முற்றிலுமாக மாற்றி விடவில்லை என்பதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். மேலோட்டமாக ஏற்படும் மாற்றங்கள் என்பது சிறிய அளவில் திருத்தி அமைக்கப்பட்ட பழைய நிலையின் தொடர்ச்சிதானே தவிர, பூரண மாற்றம் இல்லை. மனம், மேலெழுந்தவாரியாக கணக்கிடுகிறது, சீர்தூக்கிப் பார்க்கிறது, மதிப்பீடு செய்கிறது - இத்தகைய மதிப்பீடு கள் பிறப்பது, தளைகளில் கட்டுண்ட மனதின் எண்ணத் தொடர்ச்சியாக இருப்பதால், உங்களால் பிரச்சனை களுக்கு முடிவு காண முடிவதில்லை; நீங்கள் நடப்பில் இருப்பதை சற்றே திருத்தி அமைத்துள்ளீர்கள், அதன் போக்கைத் திசை திருப்பியிருக்கிறீர்களே தவிர, குழப்பம் நீடித்துக் கொண்டுதான் இருக்கிறது.

ஒரு கருத்திற்கு எதிரான மற்றொரு கருத்து, வாதத்திற்குப் பிரதிவாதம், வஞ்சகத்திற்குப் பதில் வஞ்சகம் என்ற முறையில் எதிர்தாக்கம் பெற்று செயல்படும் தளைபடுத்தப்பட்ட மனம், மேலோட்ட மாகப் பிரச்சனைகளை எண்ணிப் பார்த்து காணும் தீர்வு, ஆழமானதாகவோ, மனதின் தன்மையை அடிப்படையில் பூரணமாக மாற்றுவதாகவோ இருப்பதில்லை. மேலோட்ட மாக ஏற்படும் மாற்றங்கள் நமக்கு முக்கியமில்லை. நம் வாழ்வில் ,பெரும் பங்காக இருப்பதும், உயிர்ப்புடன் இருப்பது மான, ஆழமான சிந்தனைகளற்ற உள்ளாழ் மன தில் ஏற்படும் புரட்சியே, மிகவும் முக்கியமானதாகும்.

பேசப்படும் விஷயம், உணர்வு நிலையை மட்டும் தொடுவதாக அமையாமல் உள்ளாழ் மனம் ஈர்த்துக் கொள்ளும் விதத்தில் இருக்க வேண்டுமென்றால், கூர்ந்து கேட்பது அவசியமானதல்லவா? உள்ளாழ் மனதில் மாற்றம் ஏற்பட வேண்டும். அப்போதுதான் வாழ்க்கையைப் பற்றிய நமது கண்ணோட்டத்தில் புரட்சி ஏற்படும். அப்புரட்சி, உணர்வு நிலை மாற்றமாக மட்டும் இல்லாமல், அடிப்படை மாற்றம் பெற்ற முழுமையானதாக இருக்கும்.

பொருளாதாரப் பிரச்சனைகள், சமூகப் பிரச்சனைகள், மதப்பிரச்சனைகள், உறவுகளில் உண்டாகும் சிக்கல்கள், மரணம், அன்பு, பட்டினி, கடவுள் என்றால் என்ன, மறுபிறவி உண்டென்றால் 'இறத்தல்' என்பது என்ன, காலம் கடந்த நிலை என்றால் என்ன, படைப்பாற்றல் என்றால் என்ன என்பது போன்ற பல்வேறு பிரச்சனைகள், பல்வேறு தளங்களில் நமக்கிருக்கிறது. அவற்றிற்கு முடிவு கட்டும் நோக்கத்தோடு மனம் பிரச்சனைகளை அணுகு கிறது. தீர்வு காணப் புறப்படும் மனம், எப்படிப்பட்டது, அது இருக்கும் நிலைமை என்ன என்று பார்ப்போம். மனம், எண்ணங்களைச் சுமந்து கொண்டு அன்றாட வாழ்க்கையில் உழலுகிறது; அது காலத்தின் விளைவாக வும், மரபுகளின் விளைவாகவும் உள்ளது; 'கல்வி' என்றழைக்கப்படும் ஒன்றின் விளைவாகவும் இருக்கிறது. பொதுவுடைமைவாதி, கம்யூனிஸ்ட், கத்தோலிக்கர் என்பது போன்ற வகைகளில் ஏதோ ஒரு குறிப்பிட்ட கருத்திற்கு, குறிப்பிட்ட செயலுக்கு, குறிப்பிட்ட வழி வகையில் கற்போரைக் கட்டுப்படுத்துவதையே 'கல்வி' என்ற பெயரில் அழைக்கிறார்கள். இவ்வாறாகத் தளை படுத்தப்பட்ட மனதினால், பிரச்சனையை முடிவிற்குக் கொண்டு வருவது என்பது எக்காலத்திலும் முடியாத ஒன்று என்பது வெளிப்படையான உண்மை.

மனோரீதியாக, உள்முகமாக, முற்றிலும் மாறுபட்ட அடிப்படை மாற்றம், மாறுபட்ட அணுகுமுறை நமக்குத் தேவைப்படுகிறது. அது எப்படிச் சாத்தியமாகும் என்றால் எல்லாவற்றையும் உன்னிப்பாகக் கேட்கத் தெரிந்து கொண்டால் மட்டுமே முடியும் என்று நான் நினைக்கி றேன். நான் பேசுவதை மட்டுமல்ல, மற்ற உரையாடல் களையும், நீங்கள், உங்கள் வாழ்க்கைத் துணையுடன் நிகழ்த்தியது, குழந்தைகளிடம் குலாவியது. அதிகாரி யிடம் உரையாடியது, இரயிலில் நடந்த உரையாடல், பிச்சைக்காரரின் பேச்சு, பாடல்களைக் கேட்பது, பறவை களின் ஒலி, கடலின் ஆரவாரம் - இவற்றையெல்லாம் கூட உன்னிப்புடன் கேட்கத் தெரிந்து கொள்ள வேண்டும். கேட்பதை விமர்சிக்காமல், விளக்கங்கள் கூறி மொழி பெயர்ப்பு செய்யாமல் செவிமடுக்கத் தெரிந்து கொண்டீர் களானால், ஆழ்மனப்புரட்சி ஏற்பட வாய்ப்பு இருக் கிறது. இக்காலகட்டத்தில், அத்தகைய புரட்சியே மிகவும் தேவைப்படும் ஒன்றாக நான் கருதுகிறேன். தலைவர் களின் பட்டியலோ, பின்பற்ற வேண்டிய அரசியல்முறை என்னவென்பதோ முக்கியமானதல்ல. ஏனென்றால், பிரச்சனைகளைத் தீர்ப்பதில் தலைவர்களும் வெற்றி பெறவில்லை, அவர்கள் வகுத்த வழிமுறைகளும் வெற்றி பெறவில்லை. தளைபடுத்தப்பட்ட மனம் வகுத்த திட்டங்களின் பலனும் கட்டுப்பட்டேயிருக்கும்; நீங்களும் முடிவுறா பிரச்சனைகளின் வலையில் சிக்கித் தவிப்பீர்கள்; கட்டுண்ட மனம் தீட்டிய திட்டங்கள், மனித குல சந்தோஷத்திற்கோ, படைப்பாற்றலுக்கோ, உண்மையைக் கண்டறிவதற்கோ வழி வகுக்காது.

பிரக்ஞை நிலையில் முயற்சி மேற்கொண்டு எடுக்கப் படும் தேடுதலின் மூலமாகச் சத்தியம் என்றால் என்ன வென்பது வெளிப்படுவது இல்லை. இந்த உண்மையை

நாம் நன்றாக உணர்ந்து கொள்ளும் விதமாக, இந்த சொற்பொழிவின்போது, உணர்வு நிலையைப் பற்றிப் பல்வேறு கோணங்களிலும் அணுகி ஆராய்ந்து பார்ப்பதே என் முக்கிய நோக்கமாக உள்ளது. உணர்வு நிலையிலிருக்கும் மனம், பிரச்சனைகளைத் தீர்க்கத் தனக்கு வலிமை இல்லை, தன்னால் இயலாது என்று அறியும் நிலை ஏற்படும். அந்த நிலையில் வேறு மாதிரியான செயல்பாட்டு வழிமுறைகள் உதிக்கக்கூடும். அந்த மாறுபட்ட முறையாலோ, அதன் மூலமாகவோ, ஒரு புதிய வழி, நம் எண்ணவோட்டத்திலும், உணர்ச்சிகளிலும், வாழ்க்கை முறையிலும் வாழ்விலும் தோன்றக் கூடும்.

'தனிப்பட்ட நபர்' என்றெல்லாம் உண்மையில் எதுவுமில்லையென்பதால் நமது பிரச்சனைகளும் பொதுவானதே, தனிப்பட்டதல்ல. பெயர், வீடு, தோற்றம் என்று உங்களுக்கே உரியதாகச் சில விசேஷங்கள் இருக்கலாம். ஆனால், உங்கள் மனதின் செறிவு, என் மனதின் செறிவாகவும் உள்ளது. நீங்கள் நினைப்பதை நானும் நினைக்கிறேன். உங்களைப் போன்றே நானும் முன்னேறத் துடிக்கிறேன். உங்களைப் போலவே நானும், உங்கள் பக்கத்து வீட்டுக்காரரும் இருக்கிறோம். பிரச்சனைகள் எதுவும் தனிப்பட்டவை அல்ல, கூட்டுப் பிரச்சனைகளே. குறிப்பிட்ட ஒரு கருத்திற்குக் கட்டுப் பட்டுள்ள உங்களால், வாழ்வின் பிரச்சனையை முடிவிற்குக் கொண்டு வர முடியாது. பிரச்சார கூட்டங்கள், கல்வி போதனைகள், கட்டுப்பாட்டு முறைகள், சித்ரவதை கூடங்கள் போன்றவற்றின் நோக்கம், உங்களை அவர்களின் கோட்பாடுகளுக்கு இணங்க வைப்பதே. பழைய மரபு சிந்தனைகளையோ, புதிய மரபு சிந்தனைகளையோ குறிப்பிட்ட வழியில் நீங்கள் கூட்டமாக

ஏற்றுக் கொள்கிறீர்கள். உங்கள் கூட்டம், தன் கூட்டுச் சிந்தனை மூலம் செயல்பட்டு பிரச்சனைகளைத் தீர்க்க முயல்கிறது. ஆனால் அவ்வகை சிந்தனை, தளைபட்ட, கட்டுண்ட, கட்டுப்படுத்தப்பட்ட சிந்தனை. அதன் மூலம், கூட்டுச் செயல்புரிய வாய்ப்பில்லை.

தளைபடுத்தப்பட்ட நிலையைத் தவிர்த்து, வேறு வகையில் செயல்புரிய வாய்ப்புண்டா என்பதை இந்த சொற்பொழிவில் மேலும் ஆராய்வோம். என்னுடையதோ, உங்களுடையதோ, பொதுவுடைமைவாதி, கிருத்துவர், பௌத்தர், இந்து என்பன போன்ற பல தரப்பட்ட பிரிவுகளைச் சார்ந்தவர்களுடையதோ அல்லாத, ஒருவரை, ஒரு சாராரைச் சாராத, செயல்பாட்டு முறை நிச்சயமாக இருக்கிறது. சத்தியத்தைக் கண்டறிதலின் மூலம் பிறக்கும் செயல்பாடு, எவரையும் சார்ந்ததில்லை. மரபு, கொள்கை, பாரம்பரியம், கல்வி முறை ஆகியவற்றால் தளைபடுத்தப்பட்டு கட்டுண்டு சுதந்திரமற்று இருப்பது நமது மனம் என்பதை நீங்களும் நானும் புரிந்து கொண்டுவிட்டால் மட்டுமே, சத்தியத்தை நாம் கண்டறிதல் சாத்தியமாகும்.

நான் உங்களை வழிநடத்திச் செல்லவில்லை - நீங்களும் என்னை பின்பற்றி வரவில்லை. ஆனால், நாம் நண்பர்களைப் போல ஒன்றுபட்டு, நம் எண்ணவோட்டத்தை, நம் சிந்தனையின் போக்கை வெளிக் கொணர முடிந்தால், நம்மால் உண்மையைக் கண்டறியக் கூடும். நீங்கள் அறிந்துகொள்வதற்காச் சிந்தனையின் போக்கை நான் வெளிக் கொணர முடியாது. நீங்களும் நான் கூறியதை ஆமோதித்தோ அல்லது மறுத்தோ சொல்வதால் மட்டும் அறிந்து கொண்டுவிட முடியாது. அவரவர் முயற்சியால் அறிய முற்பட வேண்டும். எல்லா

நேரமும் எல்லாவித உறவுகளிலும் உணர்வு நிலையில் மட்டுமின்றி உள்ளாழ் மனநிலையிலும் உங்கள் மனதின் செறிவை நீங்கள் உற்று நோக்க வேண்டும். நீங்களும் நானும் உண்மையை அறிந்து கொள்ள முடிந்தால், அந்த நிலையிலிருந்து மட்டுமே பிரச்சனைகளைத் தீர்க்கவல்ல கூட்டுச் செயல்பாட்டுமுறை தோன்றும். சித்தாந்தம், கொள்கை போன்ற மக்கள்மீது திணிக்கப்பட்டு கூட்டமாக ஏற்றுக் கொள்ளப்பட்ட எண்ணங்கள் மூலம், ஒன்றுபட்ட செயல் வெளிப்படுவதில்லை. அவற்றால் பிரச்சனைகள் மேலும் சிக்கலாகி, துயரங்கள் தொடர்வதை இன்றைய நிலையில் கண்கூடாகக் காண்கிறோம்.

எண்ணுதல் என்பது சேகரிக்கப்பட்ட செய்திகளின் தொகுப்பின் மூலம் இயங்குகிறது. தனிப்பட்ட எண்ணுதல் என்று எதுவுமில்லை; நீங்கள் தனி வழியில் சிந்திப்ப தில்லை. உங்கள் சிந்தனை, குழுமச் சிந்தனை (collective thinking) வழி வந்ததே. இதற்குக் காரணம் என்னவெனில், ஹிந்து, கிருத்துவர், முஸ்லீம் என்பது போன்ற வரம்பு களுக்குள், மரபுகளுக்குள், குழுமச் சிந்தனைகளுக்குள் உங்களை நீங்கள் அடையாளம் காட்டிக் கொள்கிறீர்கள். நீங்கள் தனி நபராகச் சிந்தித்தாலும் அது உங்கள் குழுமச் சிந்தனைக்கு உட்பட்டதாகவே இருக்கும். குழுமச் சிந்தனையின் மூலம் உண்மையைக் கண்டறிய முடியாது. கட்டுண்ட மனம் சிந்திப்பதெல்லாம் குழுமச் சிந்தனை யின் வரம்பிற்குட்பட்டதே.

தயவு செய்து நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். அவற்றை ஒதுக்கித் தள்ளாதீர்கள். நான் கூறுவதிலிருக்கும் உண்மையைக் கண்டு கொள்ளுங்கள். பயன்படுத்தும் வார்த்தைகள், வெளியிடும் கருத்துகள், சிந்தனையின் போக்கு எல்லாமே குழுமச் சிந்தனையின்

விளைவாகத் தோன்றுபவையே. நான், என்னைத் தனி நபர் என்று கூறிக் கொள்ளலாம், எனக்கென்று ஒரு பெயர் சூட்டிக் கொள்ளலாம். குடிசையிலோ அல்லது மாளிகை யிலோ வாழலாம். ஆனாலும் 'நான்' என்ற இந்த இயக்கமே, குழுமச் சிந்தனையின் பாற்பட்டதே. குழுமச் சிந்தனையால் சத்தியம் என்றால் என்ன என்பதைக் கண்டறிய முடியுமா? மரபு வழிகளுக்கும், அதிகாரங் களுக்கும், பயங்களுக்கும் கட்டுப்பட்டு பாதுகாப்பைத் தேடி அலையும் இந்த மனதால் சத்தியத்தைக் கண்டறிய முடியுமா? எது களங்கப்படாததாக இருக்கிறதோ, எது எண்ணங்களைக் கடந்ததோ, எது கற்பனைக்கு அப்பாற் பட்டதோ, எதற்கு உத்தரவிட முடியாதோ, எது நூல்களி லிருந்து படித்தறிந்து கொண்டு விட முடியாததோ, எது பிறரால் உங்களுக்கு அளிக்க முடியாததோ, அது தான் சத்தியம். சத்தியத்தை அறிந்து கொள்வது ஒன்று மட்டுமே நமது பிரச்சனைகளைத் தீர்க்கவல்லது. சத்தியத்தை யறிதல் ஒன்று மட்டுமே உண்மையான புரட்சி. அந்தப் புரட்சி மட்டுமே நம் வாழ்க்கையை முற்றிலுமாக மாற்றி அமைக்க வல்லது. நமது அன்றாட வாழ்விலும் உறவு முறைகளிலும் அடிப்படை மாற்றத்தை ஏற்படுத்தக் கூடியது.

சத்தியம், உண்மை என்றால் என்ன என்று கண்டறிவதே மிகவும் அர்த்தமுள்ளது, முக்கியத்துவம் வாய்ந்தது என்பதாக இருக்கும்போது, இன்னும் ஐந்து வாரங் களுக்கும் மேலாக நடக்கவிருக்கும் இப்பேச்சுத் தொடரின்போது, தான் கட்டுண்டு இருக்கும் தளைகளை யெல்லாம் உரித்தெறிந்து விடுவதற்கு மனதிற்கு வலிமை இருக்கிறதா என்பதைப் பற்றி தீவிரத்துடன் ஆராய்வது அவசியமல்லவா? அந்த ஆராய்ச்சியின் பலனாய், ஒருவேளை, சத்தியம் என்றால் என்ன என்பதை நாம்

கண்டறியக் கூடுமல்லவா? திட்டமிட்டு, எண்ணிப் பார்த்து, உணர்வு நிலையில் எடுக்கப்படும் முயற்சிகளால் உண்மையைக் கண்டறிய முடியாது. உங்கள் முயற்சி களால் நீங்கள் சத்தியத்தைச் சென்றடைய முடியாது. நீங்கள் சற்றும் எதிர்பார்க்காத நேரத்தில் நீங்கள் அறியாமலேயே சத்தியம் வந்து சேரும். எல்லா வகை எதிர்பார்ப்புகளும், எல்லாவகை நம்பிக்கைகளும் 'நான்' என்னும் உணர்வின் வெளிப்பாடே. 'நான்' என்பதோ மரபுவழி குழுமச் சிந்தனையின் விளைவு. அதனால், முரண்பாடுகள், மனப்போராட்டங்கள், உறவுமுறைகள், தீவிர விருப்பம், முன்னேறத் துடிக்கும் அவா, வேட்கை, முயற்சிகள், கபடவேடங்கள், ஊழல்கள், இருள், உள்முகமாகச் சீர்கெட்டு அழியும் பரிதாப நிலை, நிழலாகத் தொடரும் சாவு போன்றவற்றைப் புரிந்து கொள்ள முயற்சிப்பதுடன் மனதின் எல்லையைத் தாண்டியிருக்கும் சத்தியத்தைப் பற்றி அறிய வேண்டி யிருக்கிறது. சத்தியத்தை, அது இப்படித்தானிருக்கும் என்று நாம் செய்யும் கற்பனைகளினாலோ, சங்கேதங் களினாலோ கண்டறிய முடியாது. நம் மனதின் எண்ண வோட்டத்தை, தளைபட்டிருக்கும் அதன் நிலையை நாம் புரிந்து கொண்டால்தான் சத்தியத்தைப் பற்றி அறியக் கூடிய நிலை உருவாகும். சத்தியம் மட்டுமே பிரச்சனை களிலிருந்து நம்மை விடுவிக்கும்.

சொற்பொழிவின் இறுதியில் உங்களிடமிருந்து கேள்விகளை வரவேற்கிறேன். கேள்விக்கான பதிலை எதிர்பார்த்தீர்களென்றால் நீங்கள் ஏமாற்றமடைவீர்கள் என்று நான் அஞ்சுகிறேன். பதிலை எதிர்பார்க்கும் மனம், பள்ளி மாணவனின் மனம் போன்றது. மாணவன், கேள்வியைச் சரியாகப் படித்துப் புரிந்துகொள்ளாம லேயே, புத்தகத்தின் கடைசி பகுதியில் கொடுக்கப்பட்

டுள்ள அதற்கான விடையைத் தேடி உடனே பக்கங் களைத் திருப்புவது போல, விடையைத் தெரிந்து கொள்வதில் மட்டும் உங்கள் அக்கறை இருந்தால், மாணவனின் மனப்பாங்கே உங்களுக்கும் இருக்கிறது என்றாகிறது. நீங்கள் வினாவைத் தொடுக்கும்போது, பதிலை எதிர்பார்க்கிறீர்கள்; கேள்விகளில், உங்களில் பலருக்கு ஆர்வம் இல்லை. உங்களுக்குத் தேவைப்படுவ தெல்லாம் ஒரு விளக்கம் அல்லது பல தரப்பட்ட விளக் கங்கள். ஆக, பதிலைத் தேடும் நீங்கள், உண்மையில் பிரச்சனைகளில் அக்கறை இல்லாதவராக இருக்கிறீர்கள்.

தயவு செய்து, இப்போது புகைப்படங்கள் எடுக்காதீர் கள். ஐயா! நான் உங்களுக்கொன்று சொல்லட்டுமா? இது ஆழமான விஷயங்களைப் பற்றித் தீவிரமான முறையில் விவாதிக்க வேண்டி கூடியுள்ள முக்கியமான கூட்டம். நான் இதை, ஆன்மீகக் கூட்டமாகக் கருதுகிறேன். 'ஆன்மீகம்' என்று நான் குறிப்பிட்டது அந்தச் சொல்லின் ஆழமான பொருளில் தானே தவிர, மதங்கள் அதற்குத் தரும் மூடத்தனமான பொருளில் அல்ல. இக்கூட்டங் கள், மதிப்பு, கண்ணியம், கௌரவம் கொண்டிருக்க வேண்டும். நீங்கள் புகைப்படங்கள் எடுத்துக் கொண்டும், ஆட்டோகிராப் கையெழுத்து போட வேண்டிக் கொண்டும், கொட்டாவி விட்டுக் கொண்டுமிருந்தால், கூட்டத்தின் மாண்பு கெடும். இந்தக் கூட்டம் சிறப்புற, தீவிரத்தன்மை மற்றும் கவனம் நம்மிடம் இருக்க வேண்டும். நீங்கள் கவனமாய் இருக்கும்போது, மௌனமாக இருக்கிறீர்கள்; அமைதியில்லாமல் இங்கு மங்கும் அலைவதில்லை; ஒருமுகப்பட்டு ஊன்றிக் கவனிக்கிறீர்கள். ஆகவே, தயவுசெய்து, புகைப்படம் எடுக்காதீர்கள், குறிப்புகள் எடுத்துக் கொண்டிருக்கா தீர்கள். அப்படிச் செய்து கொண்டிருந்தால், நீங்கள்

பேச்சில் கவனம் செலுத்த மாட்டீர்கள். இது சிரத்தை யுடன் நடக்கும் பொதுக்கூட்டமாக இருப்பதாலும், நீங்களும் தீவிர நோக்கத்துடன் வந்திருப்பதாலும் இந்த ஒரு மணி நேரத்தை நல்ல முறையில் செலவிடுவோம். நம் பிரச்சனைகளோ ஏராளம், நாம் சண்டையிட்டு அழிகிறோம் - இக்கூட்டத்தில் இவைகளைப் பற்றி விவாதித்து புரிந்து கொள்ள முற்படுவோம்.

நான் முன்பு கூறியதுபோல, பதில்களில் மட்டும் அக்கறை காட்டும் மனம், வாய்ச்சொல்லால் திருப்தி யடைந்து விடுகிறது. பிரச்சனை என்ன என்பதை அத்தகைய மனம் புரிந்து கொள்ளாது. நான் பிரச்சனையைப் பற்றி மட்டும் கவனம் செலுத்துவதால், பதிலுக்காக நீங்கள் காத்திருந்தால், அது கிடைக்கப் பெறாமல் ஏமாற்றமடை வீர்கள். 'பிரச்சனையை அலச என்னால் முடியாது' என்று நீங்கள் சொல்லலாம். ஆனால், பிரச்சனைக்கான விடை, பிரச்சனையிலேயே இருப்பதைக் காண முடியும். பிரச்சனையின் உண்மையை, உண்மைக் காரணத்தைப் புரிந்து கொள்வதே, பிரச்சனையைத் தீர்ப்பதற்கான பதிலாகும். ஆனால், உண்மையைக் கண்டுபிடிப்ப தென்பது மிகவும் கடினமான காரியமே. அவ்வாறு கண்டு பிடிப்பதற்கு முதிர்ந்த தீர்க்கமான சிந்தனை வேண்டும். இடதுசாரி கருத்துகளோ, வலதுசாரி கருத்துகளோ, நூலறிவோ, அனுபவ அறிவோ உண்மையைக் கண்டறி வதற்கு உதவுவதில்லை. நம் எண்ணங்களின் செயல் பாட்டு முறையை வெளிக்கொணர்வதும் அதன் இயல்பை கண்டுகொள்வதும், அப்படிக் கண்டு கொண்டதின் மூலம் எவ்வாறு அடிப்படை மாற்றத்தைப் பெறுவது என்பது மட்டுமே நமது நோக்கமாக இருக்கிறது. இப்போது பிரச்சனைகளைப் பற்றிய உங்கள் கேள்விகளை, நாம், ஒருசேரக் காணலாம்.

**கேள்வி :** நாட்டில் பஞ்சம் நிலவுகிறது. மக்கள் பட்டினியால் வாடுகிறார்கள். நீங்கள் இங்கே உட்கார்ந்து கொண்டு பேசிக் கொண்டிருக்கும் விஷயங்கள் காலி வயிற்றை நிரப்பாது. பட்டினியால் வாடும் அண்டை வீட்டுக்காரருக்கு உதவ வேண்டிய பொறுப்புணர்வை நாங்கள் இழப்பதற்கு உங்கள் பேச்சு காரணமாக இருக்காதா?

**கிருஷ்ணமூர்த்தி :** தர்க்க வழி மார்க்கத்தையோ, மதவழி மார்க்கத்தையோ அல்லது சாராம்சமில்லாத விவாதத்தையோ உங்களுக்குப் பிரச்சனைகளிலிருந்து தப்பித்துக் கொள்ளும் வழியாக நான் சொல்லியிருந்தால், அது பொறுப்பற்ற செயலாகும், இல்லையா? ஆனால், இந்த நாட்டில் மட்டுமின்றி, உலகம் முழுமைக்குமே இந்தப் பிரச்சனையை முடிவிற்குக் கொண்டு வரும் வழியை, நாம் ஒன்றுகூடி பேசிக் கண்டறியக் கூடுமானால். இங்கு உட்கார்ந்து கொண்டு பேசுவது வீணானது இல்லையே, உதவிகரமானது தானே! பொருளாதாரப் புரட்சி அல்லது அரசியல் புரட்சிகளினால் பட்டினியால் வாடும் இந்தக் காலி வயிறுகளை நிரப்பிவிட முடியுமா? மேல்தட்டு அதிகாரிகளை இடமாற்றம் செய்யும் புதிய் வகை புரட்சியை - அதற்கு எந்தப் பெயரிட்டு நீங்கள் அழைத்தாலும் சரியே - செய்வதால் பிரச்சனை தீர்ந்து விடுமா? தீர்ந்து விடும் என்று நாம் நினைக்கிறோம். வாழ்வின் மதிப்பீடுகளிலும் பொருளாதார அமைப்பு களிலும் மாற்றம் ஏற்பட்டால், உலகம் முழுவதற்கும் உணவளிக்கலாம், பட்டினியை விரட்டி விடலாம் என்று நாம் நம்புகிறோம். ஆனால், அது சாத்தியமாகுமா? புரட்சி என்பது சிறு பகுதியில், அதாவது பொருளாதார அமைப்புகளில் ஏற்படும் பகுதி மாற்றமா, இல்லை, மொத்தமான, முழுமையான பரிபூரண மாற்றமா?

பொருளாதார அமைப்பில் தோன்றிய புரட்சிகளை நாம் கண்டிருக்கிறோம். அவைகள் மக்களுக்குச் சோறு போட வில்லை. புரட்சியாளர்கள் மக்களுக்கு உணவளிப்பதாக உறுதியளிக்கிறார்கள். ஆனால் அந்த உறுதிமொழியில் கொடுமைகள் நடக்கும் காராக்கிருக சிறைகளும், கொடுங்கோலாட்சியும், போர்களும், அழிவுகளும், இன்னல்களும் அடங்கியுள்ளது. இந்த நடைமுறை உண்மைகள் நமக்குப் பழக்கப்பட்டவையே, தினமும் செய்தித்தாள்கள் இதை வெளியிடுகின்றன.

நமது பிரச்சனைகளின் சிறிய பகுதியான பொருளா தார சிக்கல்களைத் தீர்க்க மட்டும் புரட்சி தேவையா அல்லது பிரச்சனைகளின் முழு வடிவமான, மூலகாரண மான நம் சிந்தனையில் ஏற்பட வேண்டிய புரட்சி தேவையா? பஞ்சம், பட்டினி பற்றிப் பேசும்போது, மக்களுக்கு உணவு கொடுப்பது பற்றிப் பேசுகிறோம். உணவளிப்பது முக்கியமான விஷயம் என்றாலும் அது மட்டுமே வாழ்க்கை இல்லை. அது ஒரு அங்கம் மட்டுமே, எல்லாமும் அல்ல. ஒரு சிறிய பகுதியைச் சரி செய்வதில் மட்டுமே நம் கவனம் முழுமையும் இருந்தால், நம் பிரச்சனைகளுக்குத் தீர்வு காண முடியாது. வாழ்க்கையைப் பற்றி முழுமையாகப் புரிந்து கொண் டால்தான், வாழ்க்கையின் அனைத்துப் பகுதிகளைப் பற்றிய தெளிவு இருந்தால்தான், பிரச்சனைகளுக்குத் தீர்வு காண முடியும். வாழ்க்கையின் ஒரு பகுதியில் ஏற்படும் பிரச்சனைக்கு வாழ்க்கையை முழுமையாகப் புரிந்து கொண்டதின் மூலம் தீர்வு காண முடியும். ஆனால், பகுதிகளை மட்டும் அறிந்து கொண்டதின் மூலம் முழுமைக்குப் போக முடியாது. இதுவரை தோன்றிய புரட்சிகள் எல்லாம், பகுதிகளை அடிப்படையாகக் கொண்டு எழுந்தவை, முழுமையானவையல்ல.

நான் முழுமையைப் பற்றி, நம் இருப்பின் மொத்த இயக்கத்தைப் பற்றிப் பேசுகிறேன். சிறு பகுதிகளைப் பற்றிப் பேச எடுத்துக் கொள்ளவில்லை. உண்மையான மாற்றம், உண்மையான புரட்சி என்பது ஒட்டு மொத்த மாக நிகழ வேண்டும். நமது முழு சிந்தனையில், நமது மொத்த வாழ்வில், அடிப்படை மாற்றம் ஏற்பட வேண்டும். வாழ்வின் ஒரு பகுதியில் மாற்றம் ஏற்பட்டு விட்டால் மட்டும், அது உண்மையான புரட்சியாகாது. உணவு மட்டுமே நம் வாழ்க்கையாகி விடவில்லை. நமக்கு உணவு வேண்டும், உடுக்க உடை வேண்டும், இருக்க இடம் வேண்டும். ஆனால், அதை மட்டுமே வலியுறுத்திக் கொண்டிருப்போமானால், அதற்காக மட்டும் புரட்சிகளைக் கொண்டு வந்தோமானால், முடிவில் மேலும் குழப்பங்களையும் இன்னல்களையுமே பெறுவோம். மாறாக, நாம் எத்தகைய இயல்பினராய் இருக்கிறோமென்பதை முற்றிலுமாக அறிந்து கொண்டு அந்த அறிதலின் மூலம் உள்முகமாக நம் மனதில் புரட்சியை ஏற்படுத்தினால், அந்தப் புரட்சியை, அந்த அறிவைக் கொண்டு, வாழ்வின் பகுதிகளில் ஏற்படும் பிரச்சனைகளை அணுகலாம். ஆக, வாழ்வுமுறையை நன்றாக முழுவதுமாகப் புரிந்துகொள்வதுதான், நாம் எதிர்நோக்கியுள்ள பிரச்சனை. தயவுசெய்து, தவறாக எடுத்துக் கொள்ளாதீர்கள். உணவு, உடை, இருப்பிடம் ஆகியவற்றைப் புறக்கணிக்க வேண்டாம். அவைகள் கட்டாயம் அளிக்கப்பட வேண்டும். ஆனால், அதை செய்வதில் சரியான அணுகுமுறை வேண்டும். முற்றிலு மான அடிப்படை மாற்றம், நமது வாழ்வு முறையில், சிந்தனையில், இதயத்தில் ஏற்படும்போதுதான், சரியான அணுகுமுறை தோன்றும். மேலோட்டமாகச் செய்யப் படும் மாற்றங்கள் இத்தகையதல்ல. நாம் பொருளாதார

மாற்றங்களைச் செய்து பட்டினியை ஒழிக்க முயற்சித் துள்ளோம். ஆனால், தோல்விதான் கிட்டியது. பட்டினியை ஒழிக்காதது மட்டுமின்றி, மேலும் துயரங்கள், மேலும் அழிவுகள், மேலும் போர்கள் என்ற நிலை ஏற்பட்டது. மனித வாழ்க்கையை முழுவதுமாகப் புரிந்து கொண்டு, சிந்தனையின் இயல்பினைத் தெரிந்து கொண்டு, அடிப்படையில் ஆழமாக, முற்றிலுமாக நாம் மாற்றம் அடைந்தால் தான், பஞ்சம், பட்டினியை முடிவிற்குக் கொண்டு வருவது சாத்தியமாகும்.

**கேள்வி :** உங்கள் சொற்பொழிவுகளை நாங்கள் பல வருடங்களாகக் கேட்டு வருகிறோம். இருந்தும், அற்பத் தனமானவர்களாக, விகார புத்தி கொண்டவர்களாக, குரோதம் கொண்டவர்களாகவே இன்னும் இருக்கிறோம். பல சமயங்களில், உங்களால் கைவிடப்பட்டவர்கள் போல உணர்கிறோம். எங்களைச் சீடர்களாக நீங்கள் ஏற்றுக் கொள்ளவில்லை என்று தெரியும். இருந்தாலும், எங்களை முன்னேற்ற வேண்டிய உங்கள் பொறுப்பை நீங்கள் தட்டிக் கழிக்கலாமா? நீங்கள் எங்களைக் கரையேற்ற வேண்டாமா?

**கிருஷ்ணமூர்த்தி :** ஐயா, சுற்றி வளைத்து, ''நீங்கள் ஏன் எங்க்ள் குருவாக இருக்கக் கூடாது?'' என்று கேட்கிறீர்கள்! (சிரிப்பு). நாமெல்லோரும் வயது வந்தவர்கள் - அதனால் கைவிடப்படுவதோ, கரையேற்று வதோ இங்கு எழும் கேள்வியல்ல. உடல் வளர்ச்சி அளவில் மட்டுமாவது நாமெல்லோரும் வயது வந்தவர் கள்; மனதளவில் பதினான்கு அல்லது பதினைந்து வயதிற்கான வளர்ச்சியடைந்துள்ளோம். இன்னல்களி லிருந்து விடுபட, புகழ்பெற்ற குரு ஒருவரை நாம் தேடுகிறோம். அவர், நம் தாறுமாறான வாழ்க்கையை விளக்குவார்; குழப்பங்களைப் பற்றிய விளக்கங்களை

அறிவதில்தான், நம் அக்கறை இருக்கிறது. சிந்தனையில் புரட்சி ஏற்படுவதில் நம் கவனம் இல்லை.

குழப்பங்களிலிருந்து வெளிவர வழியைத் தேடுகிறீர்கள் என்பது உங்கள் கேள்வியிலிருந்து தெரிகிறது. பயம், வெறுப்பு, அற்பத்தனம் ஆகியவற்றிலிருந்து விடுதலை பெற விழைகிறீர்கள் - அதற்காக ஒருவரை குருவாக ஏற்கிறீர்கள், அவரிடமிருந்து உதவியை எதிர்பார்க்கிறீர்கள். அல்லது, காரணம் இப்படியும் இருக்கலாம் - மற்ற குருமார்கள் அளித்த விளக்கங்கள் உங்களுக்குப் பலனளிக்காமல் போயிருக்கலாம், அவற்றில் போதை இல்லாமல் இருந்திருக்கலாம். அதனால் இவர் பக்கம் திரும்பி, ''தயவு செய்து கரையேற எங்களுக்கு உதவுங்கள்'' என்று கேட்டிருக்கலாம். பழைய குருவிற்குப் பதிலாக ஒரு புதிய குரு, பழைய தலைவருக்குப் பதிலாகப் புதிய தலைவர் - இதுவா நம் பிரச்சனை? தயவு செய்து இதைக் கவனமாகக் கேளுங்கள் - யாராலாவது உங்களை உண்மையைக் கண்டறிய அழைத்துச் செல்ல முடியுமா? பிறர் பின்னால் சென்றால் உண்மையைக் கண்டுபிடிக்க முடியுமா? பிறர் உங்களுக்குச் சொல்லும் போது, உண்மையை நீங்களா கண்டுபிடிக்கிறீர்கள்? நீங்களா உண்மையை உணருகிறீர்கள், அனுபவிக்கிறீர்கள்? யாராலாவது உண்மையின் இருப்பிடத்திற்கு உங்களை அழைத்துச் செல்ல முடியுமா? யாரோ ஒருவரை பின்பற்றிச் செல்லவேண்டும் என்ற உங்கள் கூற்றில், நிலையாக ஓர் இடத்தில் உண்மை இருப்பது போலவும், குருவைப் பின்பற்றிச் சென்று நீங்கள் அங்கு அடைந்து அதை எடுத்து வர முடியுமென்பது போன்ற குறிப்பு உணர்த்தப்படுவது போல் இருக்கிறதல்லவா?

உண்மை என்பது கண்டறியப்பட வேண்டியதா அல்லது பிறரை பின்பற்றிச் சென்று அடைய

வேண்டியதா? பிறரைப் பின்பற்றிச் சென்று அடையக் கூடியதென்றால் விஷயம் மிகவும் எளிமையாகிவிடும் - மிகவும் திருப்தி அளிக்கக்கூடிய குருவை ஏற்றுக் கொண்டு விட்டால், அவர், நம்மை உண்மையிடம் அழைத்துச் சென்று விடுவார். ஆனால், உண்மை, விளக்கங்களுக்கு அப்பாற்பட்டது, உணர்ந்து அறிய வேண்டியது, சுயமாகக் கண்டுபிடிக்க வேண்டியது, பிறருடைய வழிகாட்டுதல் மூலம் அறிந்து கொள்ள முடியாதது. ''இங்கே முழுமுதல் உண்மை தோன்றி யிருக்கிறது - நீங்கள் உணர்ந்து கொள்ளுங்கள்'' - என்று என்னிடம் ஒருவர் சொன்னால், என்னால் எப்படி இயல்பாக அதை உணர முடியும்? பிரச்சனைகளாக இருப்பது வெறுப்பு, அற்பத்தனம், பேராசை, குறுகிய மனப்பான்மை ஆகியவை தானேயன்றி உண்மையைக் கண்டறிதல் என்பது பிரச்சனையே அல்ல. அற்ப மனதோடு உங்களால் உண்மையைக் கண்டறிய முடி யாது. மனம், ஆழமற்றதாகவும், வம்பளப்பதாகவும், மூடத்தன மானதும், பேராசை கொண்டதுமாக இருந்தால், அதனால் உண்மையைக் கண்டறிய ஒருகாலும் முடியாது. ஆழமற்ற மனம், மேலோட்டமான அற்ப காரியங்களைத் தான் செய்யும்; அது வெற்றுத் தனமான செயலாகத்தானிருக்கும்; அர்த்தமில்லாமல் கடவுளரைத் தோற்றுவிக்கும். ஆக, இப்போது நமது பிரச்சனை, ஆண்டவனைக் காண்பதோ, கண்டுபிடிப் பதோ இல்லை. முதலில் நாம் எவ்வளவு அற்பத்தனமான வர்களாக இருக்கிறோம் என்பதை அறிந்து கொள்வதே அவசியம்.

''நான் அற்பத்தனமானவன், நான் தாங்கொணா துன்பத்திலிருக்கிறேன். நான் சந்தோஷமில்லாமலிருக் கிறேன்'' என்ற நிதர்சனத்தை நான் அறிந்து கொண்டு விட்டால், என்னால் அந்நிலையை எதிர்கொள்ள முடியும். மாறாக, ''நான் அற்பமாக இருக்கக்கூடாது,

நான் உன்னதத்தைத் தொட வேண்டும்'' என்று சொன்னால், நான் நிஜத்திலிருந்து தப்பித்து ஓடிவிடப் பார்க்கிறேன் என்று பொருள் - தப்பித்தலும் அற்பத்தனமானதே. தயவு செய்து, இதைப் புரிந்து கொள்ளுங்கள், ஐயா.

உள்ளதை உள்ளபடி அறிந்து கொள்வது தான் அவசியமே தவிர, அதை வேறொன்றாக உருமாற்றம் செய்ய முற்படுவது தேவையற்றது. மூடத்தனமான மனம், எவ்வளவு தான் முயற்சித்து அறிவாளியாக மாறப் பார்த்தாலும், அது, அதன் சாரமாகிய மூடத்தனத்துடன் தான் இருக்கும். நம்மை உயர்ந்தவர்களாக மாற்றிக் கொள்ள குருமார்களைத் தேடிப் போகிறோம். நம் இயல்பை, நம் குண விகாரங்களை, நம் குறைகளை, நாம் பார்ப்பதில்லை, உள்ளதை ஏற்றுக்கொள்வதில்லை. பொருளாதாரம், சமூகம், சமயம், அரசியல், உளவியல் என்று எந்த துறையிலாகட்டும், முக்கியமாகச் செய்ய வேண்டியது, உள்ளதை உள்ளபடி புரிந்து கொள்வது மட்டும்தான், உள்ளது எதுவாக எப்படியாக இருக்க வேண்டும் என்பதல்ல.

தயவுசெய்து கவனமாகக் கேளுங்கள். கேட்கப்பட்ட வினாவில் பல விஷயங்கள் அடங்கியுள்ளது. கேள்வியைக் கேட்டவர், அவரது வாழ்க்கையின் சிக்கல்களிலிருந்து பிறரின் உதவியுடன் விடுதலை பெற விழைகிறார். அதற்காக ஒரு குருவைத் தேடிப் போகிறார். இவருடைய குழப்பத்தின் விளைவாகவே குருவும் இருக்கிறார். ஆக, குருவும் தெளிவாக இல்லை. உலக நடப்பு நீங்கள் அறியாததல்ல. ஒரு அரசியல் தலைவர் அறிமுகமாகிறார் - உங்களுக்கு இருக்கும் குழப்பத்தில் தேர்தலில் அவருக்கு வாக்களித்து அவரைத் தேர்ந்தெடுக்கிறீர்கள் - அவருக்கும் ஏகப்பட்ட குழப்பங்கள். தெளிவற்ற நிலையில், அவர், அரசாங்கத்தை வழி நடத்திச் செல்

கிறார். குரு, ஆசான் மற்றும் சமயத்தலைவரை, நீங்கள் தேர்ந்தெடுக்கும் விதமும் அவ்விதமாகவே இருக்கிறது. மன நிறைவு வேண்டியும், பாதுகாப்பு வேண்டியும் நீங்கள் தேர்ந்தெடுக்கும் ஆசான், உங்கள் விருப்பங்களின் பிரதிபலிப்பு. அவர் உங்கள் விருப்பங்கள், கலக்கங்கள் ஆகியவை தோற்றுவித்த படைப்பு.

உங்களைப் பற்றித் தன்னாய்வு செய்யாமல், உள்ளதை எதிர்கொள்ளாமல் இருக்கும் நீங்கள், குருவின் உபதேசத்தை அப்படியே ஏற்றுக் கொள்கிறீர்கள். 'இப்படி இருக்கக் கூடாது, அப்படித்தான் இருக்க வேண்டும்' என்றெல்லாம் உங்கள் மனம் இலட்சியங்களை நாடிச் செல்லும்போது, நீங்கள் 'உள்ளதை' அணுக முடியாது. நிதர்சனத்திலிருந்து தப்பித்துச் செல்ல முயற்சிக்காமல் 'உள்ளதை' பார்ப்பதைத் தவிர்க்காமல், இலட்சியங்களை நாடிச் செல்லாமல் இருக்கும் மனதினால் தான் 'உள்ளதை' உணர்ந்து செயல்பட முடியும், பிரச்சனை களுக்குத் தீர்வு காணமுடியும். 'நான்' என்ற தன்னாய்வில், உள்ளதைப் பற்றி அறிந்து கொண்டு விட்டால் மட்டுமே பிரச்சனைகளுக்குத் தீர்வு காண முடியும். அற்பத்தனம், குறுகிய மனப்பான்மை, வெறுப்பு என்பன போன்ற உங்களிடம் உள்ளதை அறிந்து கொண்டு விட்டீர்க ளானால், அதனுடன் செயல்பட உங்களால் முடியும். எப்படி செயல்படுவது என்பதைப் பற்றி நாம் கலந்துரை யாடலாம். ஆனால், ''நான் யாரையும் வெறுக்கக் கூடாது, எல்லோரிடத்திலும் அன்பாக இருக்க வேண்டும்'' என்றெல்லாம் பேசினீர்களானால், நீங்கள் ஒரு இலட்சிய உலகில் நுழைகிறீர்கள், உள்ளதிலிருந்து மடத்தனமாக தப்பிக்க முயல்கிறீர்கள் என்று பொருள்.

கேட்கப்பட்ட இந்த கேள்வியின் நோக்கம், பிரச்சனையைப் பற்றியும் அதன் மூலகாரணத்தை அறிந்து கொள்வது பற்றியும் இல்லை. பிரச்சனையின்

உண்மையை, மூலகாரணத்தை புரிந்து கொள்வதுதான், பிரச்சனையிலிருந்து நம்மை விடுவிக்கும். நாம் பிறர் உபதேசங்களை ஏற்றுக்கொண்டு செயல்பட்டால், உண்மையை அறிய முடியாது. மரபு, பாரம்பரியம் செலுத்தும் அதிகாரம், கட்டுப்பாடு, புனித நூல்கள் செலுத்தும் அதிகாரம், குருமார்கள் செலுத்தும் அதிகாரம், அனுபவங்கள் செலுத்தும் அதிகாரம் என்று பலவிதமாக இருக்கும் அதிகாரங்கள் எதுவும் நம்மைக் கட்டுப் படுத்தாமல், நாம் சுதந்திரமாக இருக்கும்போது தான் உண்மையை அறிந்துகொள்ள முடியும். நமது அனுபவங்கள், நம்மைப் பழக்கியிருக்கும் கட்டுப்பாடு களின் விளைவாக இருப்பவை. அதனால் உண்மை என்ன என்பதைக் கண்டுபிடிப்பதற்கு, அவை உதவ முடியாது.

ஆகவே, உண்மையை அறிந்து கொள்ள தீவிர அக்கறை உடையவர்கள், தங்கள்மீது செலுத்தப்படும் எல்லாவித அதிகாரங்களையும் ஒதுக்கித் தள்ளிவிட வேண்டும். பயத்தில் மிரண்டு போயிருக்கும் நம்மில் பலருக்கு, அதிகாரங்களைத் தள்ளி வைப்பது மிகவும் கடினமான செயலாகும். நம்பிக்கை இழந்து, பயந்து போயிருப்பதால், ஆறுதல் வேண்டி யார் தோளிலாவது சாய்ந்து கொள்ளத் துடிக்கிறோம், யாராவது வந்து உதவ மாட்டார்களா என்று ஏங்குகிறோம். பலசாலியான ஒருவர் அமெரிக்காவிலிருந்தோ, இங்கிலாந்திலிருந்தோ, இரஷ்யாவிலிருந்தோ, இமயத்தின் பின்னாலிருந்தோ, அருகிலிருந்தோ நமக்குத் தேவை. யாராவது வந்து நமக்கு உதவ வேண்டும் என்று நாமெல்லோருமே எதிர்பார்க் கிறோம். பிறரைச் சார்ந்திருக்கும் வரை, நம் சிந்தனையின் செயல்பாட்டைப் பற்றி நம்மால் அறிந்து கொள்ள முடியாது. பிறரைப் பின்பற்றும் காரணத்தால், உண்மையைக் கண்டறிதலை, நமக்கு நாமே அளிக்க மறுக்கிறோம்.

தயவுசெய்து இதைக் கவனமாகக் கேளுங்கள்; உங்கள் பிரச்சனைக்கு இதனால் தீர்வு காண முடிய வில்லை என்பதாலோ, இதைக் கேட்ட பின்பும், முன்பு எவ்வளவு சந்தோஷமில்லாமலிருந்தீர்களோ அவ்வளவு சந்தோஷ மில்லாமலிருக்கிறீர்கள் என்பதாலோ இதை ஒதுக்கித் தள்ளாதீர்கள். நீங்கள் உங்கள் குருவையோ, அரசியல் தலைவரையோ பின்பற்றிச் செல்லும்போது, நீங்கள் குழப்பமடைந்தவராக இருக்கிறீர்கள், பிரச்சனை கள் முடிவுறுவதில்லை. பிரச்சனைகள் தீர, ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. விரோத மனப்பான்மை, வெறுப்பு கள், பேராசை, நிலையற்ற அன்பு போன்ற உங்கள் உணர்ச்சி களை, உங்கள் உறவு முறைகளை, கணத்திற்குக் கணம், ஒவ்வொரு நாளும் கவனித்து, உங்களைப் பற்றி நீங்கள் அறிந்து கொண்டீர்களானால் பிரச்சனைகளை முடிவிற்குக் கொண்டுவர முடியும். பிரச்சனைகளை ஏற்றுக் கொண்டு, அதைத் திரித்துப் பார்க்காமல், உள்ளபடியே பார்த்தீர்களானால், அதற்குத் தீர்வு காண முடியும். அவ்வாறு தீர்வு காணும்போது, மனம் அதன் தளைகளிலிருந்து விடுபடவும் சாத்தியமாகலாம். விட்டு விடுதலையான மனம், உண்மைக்குத் தாள் திறக்கும், அதை வரவேற்கும்.

**கேள்வி :** நீங்கள் உன்னதமான கருத்துகளை வழங்கு கிறீர்கள். அப்படி வழங்க, முறை எதையாவது பின்பற்று கிறீர்களா? எடுத்துரைக்கும் முறை என்று ஏதாவது உங்களிடம் இருந்தால், அதை, நான் உங்களிடமிருந்து கற்றுக்கொண்டு, துயரத்திலிருக்கும் பலருக்கும் உங்கள் போதனைகளைக் கொண்டு சேர்ப்பேன்.

**கிருஷ்ணமூர்த்தி :** ஐயா, கருத்துகளைப் பரப்புவது என்று எந்த அர்த்தத்தில் சொல்கிறீர்கள்? வார்த்தைகளைத் திரும்பத் திரும்பச் சொல்வதையா? பிரச்சாரத்தையா? பிரச்சாரத்தின் முக்கியத்தன்மையே கேட்பவரின் மனதைப்

பிரச்சாரக் கருத்துகளால் கட்டித் தளைபடுத்துவதே. கம்யூனிஸ பிரச்சாரமாகட்டும், மதப் பிரச்சாரமாகட்டும், அவற்றின் உள்நோக்கம், கூட்டத்தினரை ஆமோதிக்க வைத்து அவர்கள் மனதைத் தளைபடுத்துவது தான், இல்லையா? நீங்கள் குறிப்பிட்டீர்களே வழி, முறை என்று - அந்த வகையில் சொல்ல நினைப்பதை நன்றாக மனப்பாடம் செய்துகொண்டு, திரும்பத் திரும்ப அதையே போகுமிடமெல்லாம் ஒப்பித்து விட்டு வந்தீர்க ளானால், நீங்கள் நல்ல பிரசாரகராகலாம்; நீங்கள் ஒரு கொள்கையைப் பரப்புவதில் ஆர்வமுடையவராகவும், சொல்லாட்சியில் தேர்ந்தவராகவும், புத்திசாலியாகவும் இருந்து விட்டால், கேட்பவர்களை உங்கள் வழிக்குக் கட்டுப்படுத்தி விடுவீர்கள். ஆனால், கட்டுப்படுத்தப் பட்ட, தளைபட்ட மனமல்லவா நமக்குப் பிரச்சனையா கிறது!

உள்முக சுதந்திரம் இல்லாமல் நாம் தளைபட்டி ருப்பதால் பிரச்சனைகள் உருவாகின்றன. நமது கல்வி நம்மை பிணைக்கிறது. தளைகளிலிருந்து விடுதலை பெற மனதால் முடியுமா? எக்காலத்திலாவது அது சாத்திய மாகுமா? அது சாத்தியமா இல்லையா என்று நீங்கள் வார்த்தைகளால் சொல்ல முடியாது. அந்நிலையை கண்டறிந்து உணரத்தான் முடியும். ''உங்களுக்கென்று ஏதாவது செய்முறை வைத்திருக்கிறீர்களா?'' என்ற உங்கள் கேள்வியின் பொருள் என்ன? போதனைகளைப் பிறருக்குச் சொல்வதற்கு ஒழுங்குமுறை, செய்முறை இருக்கிறதா என்ற பொருளில் கேட்டிருக்கலாம். அந்தச் செய்முறையை, பள்ளி மாணவன்போல் கற்றுக்கொண்டு, போதனைகளைத் திரும்பத் திரும்பப் பிரச்சாரம் செய்வதால் பிரச்சனைகள் தீராது. நீங்கள் எ டுத்துச் செல்வது உங்கள் கருத்துகளை, என்னுடையது அல்ல, ஐயா. என் செய்திகளை நீங்கள் பலரிடமும் எடுத்துச் செல்ல வேண்டியதில்லை.

இந்த வாழ்வு, அல்லல், குழப்பம் இவையெல்லாம் உங்கள் பிரச்சனை. பிரச்சனைகளைப் புரிந்து கொண்டீர் களானால், தளைபட்டிருக்கும் உங்கள் மனதின் அனுபவங்களை அறிந்து கொண்டு எண்ணங்களுக்கு அப்பால் சென்றீர்களானால், நீங்கள் கற்றுத் தருபவராக இருக்கிறீர்கள். அதற்குப் பிறகு ஆசான் என்று எவரு மில்லை. சீடன் என்று யாருமில்லை. ஆனால் அந்நிலை ஏற்பட உங்களை நீங்கள் நன்றாக அறிந்துகொள்ள வேண்டுமே தவிர என் செய்முறைகளைக் கற்றுக் கொள்ளத் தேவையில்லை. என் போதனைகளைப் பிரசாரம் செய்ய வேண்டியதில்லை. ஐயா, இது நம் உலகம். நாம் ஒன்றுபட்டு மகிழ்ச்சியுடன் இவ்வுலகை உருவாக்கலாம். நீங்களும் நானும் நாமெல்லோரும் உறவினர்கள். உள்முகமாக நீங்களும் நானும் எப்படிச் செயல்படுகிறோம் என்பதுதான் கவனிக்கப்பட வேண்டிய விஷயம். நம் சிந்தனை எப்படிச் செயல்படு கிறது என்று கவனிக்க வேண்டும். தளைபடுத்தப்பட்ட மனம் எண்ணும் எண்ணங்களால், நம் பிரச்சனையைத் தீர்க்க முடியாது. ஆனால், மனம் எண்ணும் விதத்தை, எண்ணப் போக்கினை அறிந்து கொண்டால், பிரச்சனைகளைத் தீர்க்க முடியும். எண்ணும் விதத்தை அறிந்து கொண்ட அத்தருணத்திலேயே உள்முகமாக நமக்குள் அடிப்படை மாற்றம் ஏற்படுகிறது. அத்தருணத்திலிருந்து ஹிந்து, கிருத்துவர், கம்யூனிஸ்ட், சோஷலிஸ்ட், முதலாளித்துவவாதி என்றெல்லாம் நம்மை நாம் சிறிய வட்டத்திற்குள் குறுக்கிக்கொள்ள மாட்டோம். நாமெல்லாம் கருணையுள்ளம் கொண்ட, அன்புள்ளம்கொண்ட, பரிவுமிக்க மனிதர்களாக இருப்போம். இத்தகைய உன்னத நிலை, பிறருடைய செய்முறையை கற்றுக்கொண்டு விடுவதாலோ, போதனைகளை பிரசாரம் செய்வதாலோ வருவதில்லை.

செய்முறை வழிகள் மூலம் அன்பை வரவழைத்துக் கொள்ள முடியாது. செயல்முறைகளால் உணர்வுக் கிளர்ச்சி, உள்ளக்கிளர்ச்சி ஏற்படலாம். ஆனால், அது அன்பு இல்லை. அன்பு இப்படிப்பட்டது என்று வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது, செய்தித்தாள்களில் வெளியிட்டு பரப்ப முடியாது, செயல்முறை விளக்கங் களினாலோ, பிரசாரத்தினாலோ கொண்டு செல்ல முடியாது. அன்பை உணர்ந்து கொள்ள வேண்டும். அன்பைப் புரிந்து கொள்ள வேண்டும். அன்பு, அன்பு, அன்பு என்று திரும்பத் திரும்ப சொல்வதில் அர்த்த மில்லை. மனம் அமைதியாக இருக்கும்போது, அன்பை அறிந்து கொள்ள முடியும். பாரம்பரியம், மரபு, மதம், கொள்கை போன்ற தளைகளிலிருந்து மனம் விடுதலை பெற்ற நிலையில், அன்பை அறிந்து கொள்ள முடியும். பயமில்லாமல், கவலையில்லாமல் இருந்தால், அன்பை அறிந்து கொள்ள முடியும். இவ்வாறாக அறிந்து கொள்ளப்பட்ட அன்பு, நம் வாழ்க்கையை முற்றிலுமாக நல்ல விதத்தில் மாற்றி அமைக்கும். அன்பை அறிந்து கொள்வது தான் உண்மையான புரட்சியாகும்.

**பிப்ரவரி, 8, 1953**
**மும்பை**



# 2

# உள்ளாழ்மனப் புரட்சி

நாம் கடந்த ஞாயிறன்று சொன்னதைப்போல், பிரக்ஞை நிலையில் நாம் நம் இலட்சியங்களையும் மதிப்பீடுகளையும் திருத்தியமைக்க வேண்டி எடுக்கும் முயற்சிகளால், அடிப்படை மாற்றத்தையோ முழுமையான வேறுபாட்டையோ கொண்டுவர முடிவதில்லை. அடிப்படை மாற்றத்தைக் கொண்டு வருவது எவ்வாறு, அதற்கான வழிமுறைகள் என்ன, அது எப்படி நிகழும் என்பதையெல்லாம் பற்றி நாம் நன்றாக அறிந்து கொள்வது மிகவும் அவசியம் என்று நான் கருதுகிறேன். ஆகவே இப்பிரச்சினையைப் பற்றி ஆழமாகச் சிந்திக்க வேண்டுமென்று நினைக்கிறேன்.

நம்மில் பலர், குறிப்பிட்ட செயல்பாட்டு வழிமுறையில் தங்களை இணைத்துக் கொள்வதற்குக் கடின முயற்சி செய்கிறார்கள். அரசியலிலோ சமயத்துறையிலோ ஆன்மீகம் என்றழைக்கப்படும் துறையிலோ ஏதோவொன்றில் ஒரு குறிப்பிட்ட வழிமுறையில் தங்களை இணைத்துக் கொள்ள பெரிதும் பாடுபடுகிறார்கள். தன்னிடத்திலோ தன்னைச் சுற்றியிருக்கும் சமுதாயத்திலோ, பொருளாதார மாற்றத்தையோ கலாச்சார மாற்றத்தையோ கொண்டு வருவதற்கான நோக்கத்துடன் தீவிரமான முயற்சிகள் எடுக்கிறார்கள். மேம்போக்காக, உணர்வுரீதியாக, பலதரப்

பட்ட முயற்சிகளைச் செய்து 'மாற்றம்' என்றழைக்கப் படுவதைக் கொண்டுவர பெரிதும் முயல்கிறோம். அத்தகைய மாற்றங்கள், உண்மையில் அடிப்படையிலும் முற்றிலுமாகவும் புரட்சிகரமான மாறுதலை ஏற்படுத்தி உள்ளதா? அல்லது, தற்காலிக விளைவை மேற்பரப்பில் ஏற்படுத்துவதாக மட்டும் உள்ளதா? மேற்பரப்பில் ஏற்பட்ட மாற்றமெனில் அது அடிப்படை மாற்றம் இல்லை. இதைப் பற்றி மேலும் ஊன்றிக் கவனித்தால், உலகிலும் நம்மிடத்திலும், மேற்பூச்சான மாற்றமே ஏற்பட்டுள்ளது என்று நாம் காண்கிறோம். அது மட்டு மல்ல, இத்தகைய மாற்றங்கள், நமக்குள் மட்டுமல்லா மல், நமது உறவு முறைகளிலும் சமுதாயத்திலும் பிரச்சனைகளை மேலும் அதிகரிக்கச் செய்கின்றன.

நமக்குள் மாற்றத்தைக் கொண்டுவர நாம் எடுக்கும் முயற்சிகள், நமக்கு மேலும் பிரச்சனைகளைத் தோற்று விக்கிறது என்பதைக் கொஞ்சம் ஆழமாக எண்ணிப் பார்த்தீர்களானால், உங்களுக்குத் தெளிவாகப் புரியும். உதாரணத்திற்கு, நான் மாற்றம் பெற வேண்டுமென்று நினைக்கிறேன் என்று வைத்துக் கொள்ளுங்கள். நான் கோபக்காரனாய் இருக்கிறேன்; நான் பேராசைக்காரனாய் இருக்கிறேன் - இல்லை, மற்ற ஏதோ ஒன்றாய் இருக்கி றேன் - நான் மாற வேண்டும். அதற்காகத் தீவிர முயற்சி எடுத்துக் கொள்கிறேன். அதில் எதிர்ப்புகள், அடக்குதல், தூய்மைப்படுத்துதல் போன்றவைகள் என்னை எதிர் கொள்கின்றன. என்னுள் மாற்றத்தை உண்டாக்க வேண்டும் என்ற என் விருப்பம், எனக்கு மேலும் பல பிரச்சனைகளை ஏற்படுத்துகிறது.

நாம் எடுக்கும் முயற்சிகளால், நமக்கு மேலும் பல சிக்கல்களும் பல தொல்லைகளும் ஏற்படுவதை நீங்கள்

கவனித்திருக்கிறீர்களா என்று எனக்குத் தெரியாது. மரபு, பாரம்பரியம், மதம், கல்வி இவற்றால் விலங்கிடப்பட்ட, தளைபடுத்தப்பட்ட மனம் எவ்வளவுதான் முயற்சித் தாலும் அம்முயற்சியின் விளைவாகத் தோன்றும் சூழ்நிலைகளும், வரவேற்புகளும், எதிர்ப்புகளும் செயல் களும் நமக்கு மேலும் தொல்லைகளை அதிகரிக்கச் செய்கிறதல்லவா? இந்த உண்மையை அறிந்து கொண்டால், மாற்றத்தை அடைய வேறுவிதமான அணுகுமுறை இருக்க வேண்டும் என்றாகிறது. சென்ற ஞாயிறன்று, அடிப்படை மாற்றத்தை, புரட்சியை, உள்ளாழ் மன நிலையில் ஏற்படும் மாற்றத்தால் மட்டும் தான் கொண்டு வரமுடியும் என்று நான் கூறினேன். மனதளவில் செய்யப்படும் முயற்சிகளின் செய்முறை, ஒரு முன்மாதிரியைப் பின்பற்றி அமைவதால், போலி யானதாக இருப்பதால், அத்தகைய முயற்சிகளால் அடிப்படைப் புரட்சி ஏற்படுவதில்லை.

மனம், உணர்வு நிலையில், முயற்சிகள் செய்யாமல் ஓயும்போதுதான் பரிபூரணமான அடிப்படை மாற்றம் ஏற்படும். உள்ளாழ் மனதில், தெளிவு, அறிந்து கொள்ளல் பிறக்க வேண்டும். அத்தகைய அறிந்து கொள்ளல் ஏற்பட, நம்மைப் பற்றிய எல்லாவற்றையும் எப்படி நாம் உன்னிப்பாகக் கவனிக்க வேண்டும் என்பதையும் அதன் அவசியத்தையும் நான் உங்களுக்குச் சொன்னேன். நான் பேசுவதை மட்டுமல்ல, ஒவ்வொரு நிகழ்ச்சியையும், ஒவ்வொரு எண்ணத்தையும், உங்களைப் பற்றிய பேச்சை யும், பறவைகளின் குரலையும், கடலின் ஓசையையும் உன்னிப்பாகக் கேளுங்கள். அப்படி நீங்கள் கேட்கும் போதே, உங்கள் முயற்சி என்று எதுவுமில்லாமல், நீங்கள் புரிந்து கொள்கிறீர்கள். ஆனால், தீவிர உணர்வுடன் புரிந்து கொள்ள முயற்சிக்கும்போது, ஒரு முன்மாதிரியைப்

பின்பற்றும் போலியான செய்முறை உள்ளே நுழைந்து விடுகிறது. சுயமாக நிகழாமல், அனுபவங்கள், இலட்சி யங்கள், இலக்கை அடையத் துடிக்கும் அவா போன்றவை நிறுவிய வழிமுறைகளைப் பின்பற்றி முயற்சிக்கிறீர்கள். இதை, உண்மையில் புரிந்து கொண்டோமென்றால் நம்முள் அடிப்படைப் புரட்சி ஏற்படும் என்று நான் நினைக்கிறேன். மனோரீதியாக எடுக்கப்படும் எல்லா முயற்சிகளும் முன்மாதிரி ஒன்றைப் பின்பற்றுவதாகவும் ஆமோதிப்பதாகவும் செயல்படுகிறது என்பதைப் புரிந்து கொண்டுவிட்டால், நமது முயற்சிகள் திறனுள்ளதாகவும் முனைப்போடும் குறிக் கோளுடனும் இருக்க வேண்டும் என்ற நம் அவா, நம்மை ஒரு முன்உதாரணத்தைப் பின்பற்றிச் செல்வதற் கும் அதனுடன் ஒத்துப்போவதற்கும் வழி வகுக்கிறது என்பதை காண முடியும். இவ்வகை முயற்சியால் மாற்றம் எதுவும் நிகழ்வதில்லை. மாறுதல், ஒரு வகை செயல் முறையிலிருந்து வேறு வகை செயல்முறை என்பதில் மட்டுமே - ஒரு வகை தாக்கத்திலிருந்து பிறிதொரு வகை தாக்கம் என்பதில் மட்டுமே. இதனால் நமது பிரச்சனை களை மேலும் வளர்த்துக் கொள்கிறோம்.

உள்முகமாகவும் வெளிநடப்பிலும், புரட்சியை எவ்வித முயற்சியும் எடுக்காமல் கொண்டு வர முடியுமா? நம்பிக்கை இழந்து கேட்கும் கேள்வியைச் சுலபமாக ஒதுக்கித் தள்ளுவதுபோல இந்தக் கேள்வியைத் தள்ளி விட முடியாது என்பதைத் தயவுசெய்து காணுங்கள். அரசியலோ, சமயமோ, பொருளாதாரமோ எந்தத் துறையாகட்டும், நாம் தேடிச் சென்றதையோ அடைய விழைந்ததையோ நம் உழைப்பின் பலனையோ நம் முயற்சிகள் எதுவும் நமக்குப் பெற்றுத் தந்ததில்லை என்பதை நாம் காண் கிறோம். ஆகவே, முயற்சிகள் மூலம்

பலனை எதிர்பார்க்கும் இந்த முறை முற்றிலும் தவறானது. இந்த முறை சரியானதில்லையென்றால், பிரச்சனைகளை அணுக வேறுவிதமான முறை இருக்க வேண்டும்.

மனம், காலத்தின் விளைவாக இருக்கிறது; சுயமாகச் செயல்படாமல் பிறரைப் பின்பற்றி நடக்கும் போலித்தனம் கொண்டதாகவுள்ளது; பாதுகாப்பைத் தேடிச் செல்லும் விருப்பம் கொண்டது; அனுசரித்துப் போகும் குணமுடையது. இவ்வாறாக இருக்கும் கட்டுண்ட மனம் எவ்வளவுதான் முயற்சி செய்தாலும் மாற்றம் கொண்டு வர முடியுமா? இந்நிலையிலிருக்கும் மனதினால் அதன் உள்ளாழ் மனதில் புரட்சியைத் தோற்றுவிக்க முடியுமா? மனதாரச் செய்யும் முயற்சியால், மனவிருப்பத்தால் மாற்றத்தைக் கொணர முடியுமா? என்று சற்று வேறு விதமாகவும் இக்கேள்வியைக் கேட்கலாம். நாம், மனம் சொல்வதைக் கேட்டுப் பழகிப் போனவர்கள் - ''நான் இப்படியிருக்க வேண்டும்''; ''நான் இப்படியிருக்கக் கூடாது''; ''நான் இப்படியிருப்பேன்'', ''நான் இப்படி இருக்க மாட்டேன்''; ''இது நல்லதாக இருக்கும்'' ''அது கெட்டது; ''சமுதாயம் மாற வேண்டும்'' ''செயல் திட்டங்கள் வேறுவிதமாக இருக்க வேண்டும்''; ''நான் வன்முறையாளனாய் இருக்கிறேன். இந்நிலை மாறி சாத்வீகமாய் மாற வேண்டும்'' - இப்படி இன்னும் பல விதமாக மனம் எண்ணுகிறது. இவைகள் நாம் மனமுவந்து செய்யும் முயற்சிகள். ''இப்படிதான் இருக்க வேண்டும் - இப்படி இருக்கவே கூடாது'' என்பதாக இருக்கும் முறையிலேயே கணக்கிடலங்கா சிக்கல்கள் உள்ளது. அடக்குமுறை, நசுக்குதல், அடக்குமுறையின் விளைவாக மனோரீதியில் ஏற்படும் தாக்கங்கள், பல தரப்பட்ட முயற்சிகள், போராட்டங்கள்,தோல்விகள், உண்மை என்று நீங்கள் எண்ணுவதை அடைவதில்

ஏற்படும் ஏமாற்றங்கள் என்று சிக்கல்களின் பட்டியல் நீண்டு கொண்டே போகிறது. உணர்வுப்பூர்வமாக எடுக்கப் படும் முயற்சிகளின் விளைவுகளைப் பற்றி எப்பொழு தாவது எண்ணிப் பார்த்ததுண்டா? விளைவுகளைப் பற்றிய விழிப்புணர்வு இருக்கிறதா? தனிப்பட்ட முறையில் மட்டுமல்ல, சமுதாயம் முழுமைக்கும் உலகம் முழுமைக்கும் உள்ள பிரச்சனை, முயற்சிகளின் விளைவுகளைப் பற்றி அறிந்து கொள்வதே. அடிப்படை மாற்றம் முழுமையாக உள்ளாழ் மனதில் கொண்டு வர எண்ணும் சீரிய சிந்தனையாளர் எப்படிச் செயல்பட வேண்டும்? உணர்வுப்பூர்வமான முயற்சிகளின் மூலம் அடிப்படை மாற்றம் அடையக் கூடுமா அல்லது முயற்சி களின் பொய்மையைப் பற்றிய உண்மைகளைச் செவி மடுப்பதின் மூலம் அதை அடையக்கூடுமா?

முயற்சியின் விளைவுகள், பொய்மையான முயற்சி ஆகியவற்றைப் பற்றித் தெரிந்து கொண்ட பிறகு இந்தப் பேச்சை உங்களால் மொழிபெயர்ப்பு செய்யாமலும் விமர்சனங்கள் செய்யாமலும் கேட்க முடியுமா? முயற்சிகள் எல்லாம் முன்மாதிரியைப் பின்பற்றி நடக்கும் போலித்தனமானவை; பின்பற்றிச் செல்வது எப்போதுமே கட்டுப்படுத்துவதாக இருக்கும் - கட்டுப் படுத்தப்பட்ட மனதால், பிரச்சனை எதுவாயினும் அதன் உண்மையை, மூலகாரணத்தை எப்போதுமே அறிந்து கொள்ள முடியாது - இந்த வாசகத்தை எந்தவித விளக்கங்கள் கூறாமலும் எந்தவித தீர்ப்பு வழங்காமலும் உங்களால் கேட்க முடியுமா? அந்த வாசகத்தில் பொதிந்துள்ள உண்மையை உங்களால் காண முடியுமா? உணர்வு நிலை மனதால், அதை காண முடியாது. ஆனால், புரிந்து கொள்வதற்காக முயற்சிகள் மேற்கொண்டு போராடாமலும், உதாரணங்களைப் பின்பற்றிச் சென்று

முயற்சி செய்யாமலும் மனம் இருக்கும்போது, உள்ளாழ் மனதிற்கு அது புரியும். அல்லும் பகலும் ஓயாது இயங்கிக் கொண்டிருக்கும் மனம், கோட்டைகள் கட்டுகிறது, அவற்றை இடித்துத் தள்ளுகிறது, அல்லது மாற்றம் செய்கிறது. அத்தகைய மனம், சில நொடி களுக்கு அமைதியாக இருக்கும்போது, உண்மை என்றால் என்ன என்று உள்ளாழ்மனம் அறிந்து கொள்கிறது. நம் அமைதியற்ற தன்மையால் உண்மையை அறிந்து கொள்ள முடியாமல், நாம் இருப்பதுதான் உண்மையில் நமது பிரச்சனையாக நான் கருதுகிறேன். ஏழைகளுக்கு எப்படி உணவளிப்பது, பொருளாதாரப் புரட்சியை எப்படித் தோற்றுவிப்பது, எப்படிப்பட்ட கடவுளரைத் தேர்ந்தெடுப்பது, என்னவிதமான சடங்குகள் செய்வது போன்றவை அல்ல நம் பிரச்சனை.

மனோரீதியாக, நம் சிந்தனை முறையில் அடிப்படை மாற்றத்தைக் கொண்டு வருவதே நாம் எதிர்கொள்ள வேண்டிய பிரச்சனை. அத்தகைய மாற்றத்தை, உணர்வு வழி நின்று, முயற்சிகள் செய்வதால் ஏற்படுத்த முடியாது. அதிகாரங்களுக்குக் கட்டுப்பட்டு செய்த செயல்களின் விளைவாகக் கிடைத்த அனுபவங்களாலும், பாரம்பரியம், மரபு ஆகியவற்றின் தாக்கத்தாலும் உருவாக்கப்பட்டதாக மனம் இருப்பதால், அடிப்படை மாற்றத்தை, அதன் முயற்சியால் கொண்டு வர முடியாது. மனம், கட்டாயத்தாலோ, ஒத்துப்போவதாலோ, பின்பற்றி நடப்பதாலோ, ஒன்றைப் பற்றிச் சிந்திக்கிறது, திட்டமிடு கிறது. திட்டப்படி செயல்புரிகிறது - இத்தகைய போக்கினைக் கொண்ட மனதால் நம்முடைய எல்லாப் பிரச்சனைகளுக்கும் தீர்வு காண முடியாது. நினை வாற்றலை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று பிள்ளைப்பிராயம் முதற்கொண்டே நாம் பயிற்றுவிக்கப்

படுகிறோம். நம் வாழ்க்கைக்குக் குறிப்பிட்ட அளவிற்கு ஞாபகம் முக்கியமானதாக இருக்கிறது. ஆனால், ஞாபக சக்தியால் எந்தப் பிரச்சனைக்கும் உண்மையான விடையைத் தர இயலாது. மனப்பதிவுகளால் பிரச்சனையை அதன் கடந்தகால அனுபவ அறிவிற்கேற்ப மாற்ற முடியும், அவ்வளவே. ஒன்றை அனுபவிக்கும்போது, நீங்கள் ஒரு ஹிந்துவாக இருக்கும்பட்சத்தில், அந்த அனுபவத்தை உங்கள் முறைப்படி எண்ணிப் பார்ப்பீர்கள் - அதுவே, ஒரு கம்யூனிஸ்ட், அதே அனுபவத்தை, அவர் முறைப்படி மொழிமாற்றம் செய்து அனுபவிப்பார். அதனால் எந்த அனுபவத்தையும் சுதந்திரமான, தளை களற்ற மனதுடன் நீங்கள் எதிர்கொள்வதில்லை. தளைபட்ட மனம், அதன் தன்மைக்கேற்ப, ஒரு முறையை தீர்மானித்து செயல்படுகிறது. அதனால் பிரச்சனைகள் அதிகரிக்கத்தான் செய்கிறது. இன்னல்களும் துயரங்களும் மேலும் கூடுகிறது. இதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். முயற்சி எந்த விதத்தில் இருந்தாலும் அது தெரிந்தவொன்றைப் பின்பற்றுவதாகவே உள்ளது என்பதைக் காண்பது மிகவும் முக்கியம். பின்பற்றுவது, ஒத்திசைவோடு நடப்பது போன்ற இயல்புகளின் மூலம், அடிப்படை மாற்றம் தோன்றுவதில்லை.

இப்போது, மேற்கூறப்பட்டவைகளைக் கேட்டபின், அதிலிருக்கும் உண்மையை என்னால் உணரமுடியுமா? வாழ்க்கையே ஒரு பின்பற்றுதல் என்று நான் சொல் கிறேன். நினைவாற்றல், விஷய ஞானம், மொழியாற்றல் இவைகளின் துணைகொண்டு, நான் பேசும் இந்தப் பேச்சுகூட ஒருவகை பின்பற்றுதலே. விஷய ஞானம் சேகரிப்புகூட ஒரு வகையான காப்பியடித்தலேயாகும். நல்லவனாக இருக்க வேண்டும் என்ற ஆசைக்கு, பயம் தான் முக்கிய காரணம். எல்லாவற்றிற்கும் தலையாட்டிக்

கொண்டு ஒத்துப்போவது, பயத்தினால்தான். ஞாபகம், அனுபவ அறிவு, விஷயஞானம் ஆகியவை வாழ்க்கையின் பல தடங்களில் மிகவும் தேவைப்படுவதே. உதாரணத்திற்கு, மொழியை முயற்சி எடுத்து நான் கற்றுக் கொள்ளாவிட்டால், பிறருடன் என்னால் தொடர்பு கொள்ள முடியாது. ஆனால், மனோரீதியில் உள்முக மாற்றம் கொண்டுவர எண்ணி, நான் விரும்பியபடி மாற வேண்டும் என்ற முயற்சியில் எடுக்கப்படும் செயல்களால், பலவிதமான சிக்கல்கள் தோன்றுகின்றன. அவைகளிலிருந்து விடுதலையும் கிடைப்பதில்லை. என் விருப்பத்திற்கேற்ப மொழிபெயர்ப்பு செய்யாமல், விளக்கங்கள் எதுவும் கூறாமல், இப்பொழுது பேசியதில் உள்ள உண்மையை நான் புரிந்து கொண்டால், உள்ளாழ் மனதில் விடுதலை கிடைக்கும். இதை உங்கள்மேல் நீங்கள் சோதித்துப் பார்க்கலாம் - சோதித்துப் பார்த்து, இந்த உண்மையை நீங்கள் அறிந்து கொள்ளலாம்.

பன்னெடுங்காலமாக, நினைவுகள் சேமிக்கப்பட்டு, மனதினால், வளர்க்கப்பட்டு வருகின்றன. ஞாபகங்கள், மனப்பதிவுகள் என்ற ஒரே ஒரு கருவிதான் நம்மிடத்தில் உள்ளது. அதன் உதவியால் பிரச்சனைகளைத் தீர்க்க முயல்கிறோம். நாம் அறிவை வணங்குவதற்குரியதாக ஏத்துகிறோம். இவ்வாறு சொல்வதன் பொருள், நாம் உணர்ச்சிவசப்பட வேண்டும் என்பதோ பக்திமானாக இருக்க வேண்டுமென்பதோ, அக்கறையில்லாதவராக இருக்க வேண்டும் என்பதோ இல்லை. மனதின் வரையறைகளைக் கண்டுகொள்வது மிகவும் சிரமமான விஷயம். எண்ணங்கள், சுதந்திரமானவையல்ல; அவை அனுபவம், சூழல் போன்றவைகளால் கட்டுப்படுத்தப் பட்டவை. இத்தகைய வரையறைகளுக்குட்பட்ட எண்ணங்களின் இயக்கத்தால், நமது பிரச்சனைக்குத் தீர்வு

காண முடியாது. நம் மனதால், நம் எண்ணங்களின் மூலம், சிக்கல்களுக்கு விடை காணமுடியாது என்று புரிந்து கொள்வது, மிகவும் கடினமான செயல். எண்ணங்கள், ஞாபகத்தின் அடிப்படையில் தோன்று கின்றன. ஞாபகம், அனுபவங்களின் விளைவாக வளர் கிறது. ஆக, எண்ணங்கள் சுதந்திரமானவை அல்ல, அவை அனுபவங்களின் வட்டத்திற்குள் குறுகியுள்ளது, அவை கட்டுப்பாட்டுக்குள் இயங்குகிறது. இப்படியுள்ள எண்ணங்களின் துணைகொண்டு பிரச்சனைகளை முடிவிற்குக் கொண்டு வர முயன்றால், அது, இருக்கும் பிரச்சனையைப் பெரியதாக்கும், இல்லாத பிரச்சனையைக் கொண்டு வரும். இந்த உண்மையைப் புரிந்துகொண்டு, உள்ளாழ் மனதில் புரட்சி தோன்ற அனுமதிப்போமா? அனுமதித்த நிலையில், உள்ளாழ் மனம் வரம்பிற்குட் பட்டதல்ல, ஒத்திசைவோடு இருக்க வேண்டிய நிர்பந்த மும் அதற்கில்லை; அது எதையும் நசுக்குவதில்லை; எதாகவும் இருக்க முயற்சிப்பதில்லை. பலனை அடைய எடுக்கும் தேடுதலில் அது குறுக்கிடுவதில்லை. இத்தகைய இயல்புகளால் உள்ளாழ் மனம், அமைதியில் சாட்சியாக நிற்கிறது - அந்த அமைதியில், உண்மை என்றால் என்ன என்பதை மனம் அறிந்து கொள்கிறது. உண்மை என்பது பகுத்தாய்வதோ விஷய ஞானத்தின் கணிப்போ அல்ல. குறுக்கீடுகள், மாற்று விளக்கங்கள் செய்யாமல் ஆழ்ந்த மௌனத்தில் இருக்கும் மனம், உள்ளாழ் மன நிலையில் உண்மை என்றால் என்ன என்பதை அறிந்து கொள்ளும். இந்த உண்மையை முழுவதுமாக நாம் உணர்ந்து கொண்டு விட்டால், நம் எண்ணவோட்டத்தில் ஒரு அடிப்படை மாற்றம் ஏற்பட்டிருப்பதை நம்மால் காண முடியும். ஆனால், நம் மனமோ, செயலின் பலனை ஓயாமல் எதிர்பார்ப்பதற்கும் குறுக்கீடுகள் செய்வதற்கும்

பயிற்றுவிக்கப்பட்டுள்ளது. உள்ளாழ் மனநிலையில்தான் அன்பு மலரக்கூடும். அன்பு ஒன்றால் மட்டுமே புரட்சியைத் தோற்றுவிக்கக்கூடும்.

**கேள்வி :** யார் உண்மையிலேயே சமயப் பற்றுள்ளவர்? அவருடைய எந்தச் செயலால் அவரை அறிந்து கொள்ள முடியும்?

**கிருஷ்ணமூர்த்தி :** சமயம் என்றால் என்ன, சமயப் பற்றுள்ளவர் யார் என்பதை வரையறுப்பதற்கு முன், சமயம் என்றால் என்ன என்பதைப் பற்றிப் பார்ப்போம். சில சடங்குகளைச் செய்வது சமயமாகுமா? சில உறுதி யான கொள்கைகளை ஆமோதிப்பது சமயமாகுமா? ஹிந்து மதக் கோட்பாடுகளையோ, கிருத்துவக் கோட் பாடு களையோ, பௌத்த மதக் கோட்பாடுகளையோ அல்லது இஸ்லாமிய மதக் கோட்பாடுகளையோ ஏற்றுக் கொள்ளும் விதமாக, மக்களை, சிறு வயது முதற் கொண்டே பழக்கப்படுத்தி கட்டுப்படுத்துவது சமய மாகுமா? மனதை, ஒரு நம்பிக்கையில் ஈடுபடுத்தி, அதில், அதைத் தளைபடுத்துவது சமயம் என்றாகிறதா? என்னை நான் ஹிந்து என்று சொல்லிக் கொள்வதால், நான் சமயப்பற்றுள்ளவனாகக் கருதப்படலாமா? காலத் தால் விளைந்த தளைகள் எல்லாம் விலகிய நிலையில், மனப்பதிவுகளால் தோற்றுவிக்கப்படாத புதியதோர் அனுபவத்தை உணரும் நிலையில், மனம் இருப்பது சமயமாகுமா? சமயம் என்பது கடவுள் நம்பிக்கையா? கடவுள் நம்பிக்கையில்லாவிட்டால் அவர் நாத்திகரா? ஏழைகளுக்கு உணவு அளிப்பது, தனது கடமைகளைச் சுறுசுறுப்புடன் ஓயாமல் செய்வது, சீர்திருத்தம் செய்வ தில் அக்கறை, மனித சமுதாயத்தின் வாழ்க்கைமுறை களை முன்னேற்றுவதில் கவனம் போன்ற நல்ல

செயல்களைச் செய்பவர் சமயப் பற்றுள்ளவரா? அகிம்சை, பேராசையில்லாமல் இருப்பது போன்ற நற்பண்புகளை வளர்த்து கொள்ள முயல்பவர் சமயப்பற்றுள்ளவரா? அல்லது, தனது சுயதிருப்திக்காகக் குறிப்பிட்ட வழிமுறையை ஏற்றுக்கொள்பவர் சமயப் பற்றுள்ளவரா? இத்தனை கேள்விகள் எழுவதால், சமயம் என்று நாம் எதைக் குறிப்பிடுகிறோம் என்பதை முதலில் கண்டுபிடிக்க வேண்டாமா?

உண்மையை அறிந்து கொள்வதற்கு எந்தவொரு நம்பிக்கையையும் சார்ந்திருக்க வேண்டியதில்லை. மாறாக, நம்பிக்கை உண்மையை அறிந்து கொள்வதற்குத் தடையாக செயல்படுகிறது. நம்பிக்கையில், மற்றும் கொள்கையில் தளைபடுத்தப்பட்ட ஒருவர், உள்ளதை உள்ளவாறு தெரிந்து கொள்ள முடியாது. அவரால் அன்பை உணர்ந்து பரவச நிலையை அனுபவிக்க முடியாது. கொள்கை, நம்பிக்கை, அனுபவங்கள் அவரைப் பரவச நிலையை அனுபவிக்கவிடாமல் வழி மறிக்கின்றன. அனுபவங்கள், மனப்பதிவுகளின் தொடர்ச்சியாக மட்டுமே இருக்கிறது. நினைவுகள், அனுபவங்கள், விஷய ஞானம் இவைகளில் ஊறிப்போன ஒருவரால் கடவுளைக் கண்டுபிடிக்க முடியாது. அதே போல், சதா காலமும் கடவுள் பேரில் தனக்கிருக்கும் நம்பிக்கையைப் பறைசாற்றிக் கொண்டிருப்பவருக்கும் உண்மையைக் காண முடியாது. கட்டாயத்தாலோ, பலாத்காரத்தாலோ, பயிற்சியினாலோ வந்த சுதந்திரமாக இல்லாமல், உண்மையான சுதந்திரத்தோடு மனம் சலன மில்லாமல் இருக்கும்போது மட்டும்தான் உண்மையின் தரிசனம் கிட்டுகிறது. மனம், ஆழ்ந்த மோனத்தில் நிலை கொண்ட போது, உள்ளாழ் மனதில், புரட்சி இருக்கிறது.

ஒருவருடைய நல்ல செயல்களைக் கொண்டு அவருடைய நடத்தையை எடை போட முடியுமா? அவர் சமயப் பற்றுள்ளவரா இல்லையா என்பதை உங்களால் அறிந்து கொள்ள முடியுமா? அவரை எப்படி சீர்தூக்கிப் பார்ப்பீர்கள்? செயற்கையான சாதுர்யமான தர்க்கம் என்று இதைத் தயவுசெய்து நினைக்காதீர்கள். அவரை எந்த நியமத்தின்படி, எந்த வரையறையின்படி, சீர்தூக்கிப் பார்ப்பீர்கள்? ஒருவர் பக்கத்து வீட்டுக்காரருக்கு நல்லது செய்தால் அல்லது ஏழைகளுக்கு அன்னம் அளித்தால் அல்லது திருநீறு பூசிக்கொண்டால் அல்லது காவியாடை அணிந்தால், மொட்டையடித்துக் கொண்டால், துறவி யானால், அவரைச் சமயப்பற்றுள்ளவர் என்று அழைப் பீர்களா? துறத்தல் என்பது போதையளிப்பது. தனது செயல்களாலேயே போதையேறி மயங்கும் ஒருவரால், சத்தியம் என்றால் என்ன என்பதை ஒருபோதும் கண்டறிய முடியாது. சத்தியத்தை அறிய 'நான்', 'எனது' எனும் அகந்தை முற்றிலுமாக அழிய வேண்டும். அகந்தையற்ற நிலையை எந்தவொரு முயற்சியின் மூலமாகவோ மனவுறுதியின் வழியாகவோ சிந்தனை வழி செயல்பாட்டின் விளைவாகவோ அடைய முடியாது. அகந்தை நீங்கி, மனதில் அன்பு நிறைந்திருக்குமே யானால், அத்தகைய மனம் சமயப்பற்றுள்ளதாக இருப்பதற்கு வாய்ப்புள்ளது.

அன்பு என்றால் என்ன என்ற விளக்கமோ, அன்பு என்பது இதுவா அல்லது அதுவா என்ற கேள்வியோ, அன்பை வளர்த்துக் கொள்ளவேண்டி எடுக்கும் முயற்சிகளோ, அன்பாகி விடாது. இதுபோன்ற விஷயங்களை உணர்ந்து கொள்ள, ஆழமான புரிந்து கொள்ளுதலும் ஆழ்ந்த விசாரணையும் தேவைப் படுகிறது. பிரக்ஞை நிலையில் மனம் இவைகளைப்

பற்றிச் செய்யும் விசாரணைகள், மேலும் முடிச்சுகளைப் போட்டுச் சிக்கலாக்கி விடுகிறது. ஆனால் 'நான்', 'எனது' என்ற எண்ணம் செயல்படும் விதத்தை முழுவதாக அறிந்து கொண்ட விழிப்புணர்வுடன்தான் இதுவாக மாற வேண்டும் என்ற விருப்பத்தில், சிறந்த பண்பாளராக மாறினாலோ அல்லது அகிம்சாவாதியாக மாறினாலோ, அந்த மாற்றம் பெருமைக்குரிய வழிமுறைகளுக்கு ஒருவர் அளித்த ஒப்புதல் தானே தவிர உண்மையான மாற்றம் எதுவுமில்லை. கடவுளைக் காண 'தனது' என்று சொந்தம் கொண்டாடிக் கொண்டிருப்பவைகளைத் துறக்கும் ஒருவர், 'நான் சொந்தங்களைத் துறந்து வந்ததால் கடவுளைக் காண்பேன்' என்ற தனது கற்பனையில் மயங்கி விடுகிறார். அத்தகைய ஒருவர், அன்பு என்றால் என்ன, சத்தியம் என்றால் என்ன என்பதை அறியவே முடியாது.

நம் இதயம், மேற்குறிப்பிட்டவைகளையெல்லாம் அறியும். நமது இதயத்தின் அடித்தளத்தில், உள்ளாழ் மனதில், இவைகளைப் பற்றிய தெளிவு இருக்கும். ஆனால், நம்மைச் சுற்றியுள்ள உலகம் அதைப் புரிந்து கொள்ள விடாமல் நம்மை அழுத்துகிறது. நமக்கு நெருக்கடிகள், பாரம்பரியங்கள், உதாரணங்கள் பலப்பல. நாம் முக்கியத்துவம் இல்லாத விஷயங்களில் உணர்ச்சி வசப்பட்டுப் போகிறோம். சிறு வயது முதற்கொண்டே, உன்னத புருஷர்கள், மற்றும் புகழ் பெற்ற கதாநாயகர் களைப் பின்பற்றி நடக்க வேண்டும் என்று அறிவுறுத்தப் பட்டு பழக்கப்படுத்தப்படுகிறோம். பிறரைக் காப்பி யடிக்கத்தான் தெரிந்துகொண்டோமே தவிர, உண்மை யில் நாம் அற்பமானவர்களாக இருக்கிறோம். அதனால், சத்தியம் என்றால் என்ன என்பதை நம்மால் கண்டுபிடிக்க முடியாது. எப்பொழுது மனம் சலனமின்றி இருக்கிறதோ,

தேவைகளற்று இருக்கிறதோ, தன்னைப் பெரிதுபடுத்திக் கொள்ளாமலிருக்கிறதோ, 'இதைச் செய்ய வேண்டும், அதைச் செய்யக் கூடாது' என்ற விருப்பு வெறுப்புகளற்று இருக்கிறதோ, அப்பொழுது மட்டுமே சத்தியம் எனப்படும் உண்மையான சமயத்தைக் காண முடியும், இன்னும் சரியாகச் சொல்லப் போனால், அப்பொழுது மட்டுமே சத்தியம் தோன்றும். சத்தியம் மட்டுமே சமயம். இப்படிச் சொல்வதால் உலக நடப்பிலிருந்து விலகி யிருக்க வேண்டும் என்று பொருளல்ல. விலகியிருப் பதோ தனிப்பட்டிருப்பதோ வாழ்க்கையல்ல. உறவு கொண்டிருப்பதுதான் வாழ்க்கை; அந்த உறவு முறை களில், சத்தியம், அன்பு ஆகியவற்றைக் கண்டுகொள்வோம்.

**கேள்வி :** நான் ஒரு எழுத்தாளன். உங்கள் சொற் பொழிவைச் சில ஆண்டுகளுக்கு முன் கேட்டேன். அதிலிருந்து எழுத வேண்டும் என்ற ஆசையே இல்லாமல் போய்விட்டது. தன்னைப் பற்றிய ஞானம் கிடைத்து விட்டால், அதன் தவிர்க்க முடியாத விளைவாக வெளிப் படையான வாய்மொழிக்குப் பஞ்சம் வந்து விடுமா?

**கிருஷ்ணமூர்த்தி :** நீங்கள் ஏன் எழுதுகிறீர்கள்? மன நிறைவு பெற வேண்டி எழுதுகிறீர்களா? புகழ் பெற்று நீங்கள் பலராலும் பாராட்டப்பட வேண்டுமென்பதற்காக எழுதுகிறீர்களா? வாழ்க்கையை நடத்த பணம் சம்பாதிக்க வேண்டி எழுதுகிறீர்களா? இல்லையென்றால், உள்முக மாக, நீங்கள் உணர்ச்சித் துடிப்புடன் இருப்பதால், வளமான கருத்துகளுடனிருப்பதால், உங்கள் எழுத்து, வருவாய் ஈட்டுவதற்கோ மன நிறைவு பெறுவதற்கோ எழுதப்படாமல், மிகவும் இயல்பாகவே வெளிப் படுகிறதா? நீங்கள் தன்னிறைவு பெறுவதற்கு உதவும் ஒரு கருவியாக உங்கள் எழுத்து அமையுமேயானால், உங்களைப் பற்றி மேலும் மேலும் அறிந்து கொள்ளும்

போது, உங்களைப் பற்றி மேலும் மேலும் நீங்கள் ஆழ்ந்து சிந்திக்கும்போது, தன்னையறிதல் மேலும் சிறப்புற இருக்கும்போது, வார்த்தைகளில் வெளிப்படுவது குறைந்து விடுகிறது. அரசியல், சமயம், சமூக சேவை, தொழில் நிபுணத்துவம், கவிதை எழுதுதல், சித்திரம் தீட்டுதல் என்பன போன்ற துறைகளில் எதிலாவது உங்களை ஈடுபடுத்திக்கொண்டு, உழைப்பதின் மூலமாக நீங்கள் நிறைவு காணுவதாக இருக்கும் பட்சத்தில், உங்களைப் பற்றி நீங்கள் மேலும் மேலும் அறிந்து கொள்ளும்போது, அத்துறைகளில் உங்கள் ஈடுபாடு, உங்கள் உழைப்பு குறைந்து விடுகிறது.

செய்யும் தொழிலால் நீங்கள் மனநிறைவு பெற லாம்; மகிழ்ச்சி அடையலாம். அரசியல்வாதியாகவோ பெரிய தலைவராகவோ, எல்லோராலும் நன்கறியப் பட்டவராகவோ, உயர்வு பெறலாம். உங்கள் தொழில் நடவடிக்கைகளை உங்கள் அந்தஸ்தை உயர்த்திக் கொள்ளும் சாதனமாக, நீங்கள் 'ஆக விரும்பும்' நிலையை அடைய உதவும் கருவியாக எண்ணி, நீங்கள் செயல்படும் வரை, ஓயாது உழைப்பீர்கள். ஆனால், உங்களைப் பற்றிய ஞானம் அதிகரிக்க அதிகரிக்க, உள்ளதை அறிந்து கொண்டபின், 'ஆக விரும்பும்' ஆசையில்லை. அதனால், அதற்காக உழைக்க வேண்டிய தேவையும் இருப்பதில்லை. உறவுகள், நற்பண்புகள் போன்றவற்றின் மூலம் 'நான், எனது' எனும் தன்னுணர்வு நிறைவு பெறுகிறது. கூட்டத்தில் உரையாற்றுவதால், நல்ல கவிதை எழுதுவதால் 'எனது' அந்தஸ்து உயர்ந்து 'நான்' சிறந்த பேச்சாளனாகிறேன். ஆனால், உள்ளதைப் பற்றிய ஞானம் பெற்றபின் 'நான்' எதுவாக ஆவதிலும் ஆர்வம் இருப்பதில்லை. செயல்கள் மூலம் 'நான், எனது'-க்கு கிடைப்பது, நிறைவு ஆகாது.

குழந்தைப்பருவம் முதலே 'நிறைவேற்ற வேண்டும்' என்ற கருத்தை மனதில் பதிவு செய்யும் வகையில் வளர்க்கப்படுகிறோம். வழிகாட்டிகளாகக் கணக்கி லடங்கா வீரர்கள், ஆன்மீகத் தலைவர்கள், பின்பற்றப்பட வேண்டிய ஆதாரப்பூர்வமான வழிமுறைகள், நாம் எதைக் கேட்கிறோமோ அதையே வழங்கும் குருமார்கள் என்று நமக்குப் பல வழிகாட்டிகள். ஆக, தன்னிறைவு என்ற நமது சொந்த வலையிலேயே நாம் அகப்பட்டுக் கொண் டிருக்கிறோம். தன்னிறைவு பெறும் முயற்சியில் ஏமாற்றமும், ஏமாற்றத்துடன் பயமும் ஏற்படுகிறது - அதனால் மறுபடியும் மறுபடியும் வலையில் சிக்கிக் கொள்கிறோம். படைப்பாற்றல் வெளிப்படும் முறை ஒன்றிருக்கிறது. ஆனால், அது தன்னிறைவின் பலனாய் வெளிப்படுவதல்ல. சொல்லப்போனால், நீங்கள் உங்களை ஹிந்து அல்லது கிருத்துவர், முஸ்லீம், கம்யூ னிஸ்ட் என்று கூறிக் கொள்வதில் நிறைவு காண்கிறீர்கள், அல்லவா? நீங்கள் கம்யூனிஸ இயக்கத்தின் தீவிர தொண்டர் என்று வைத்துக் கொள்வோம் இல்லையென் றால், சோஷலிஸத்திற்கோ மதக் கோட்பாடுகளுக்கோ உழைப்பவர் என்று கொள்வோம் - உங்களின் உழைப்பு, உங்களுக்கு, உங்களின் 'தான்' என்ற உணர்விற்கு, உழைப் பினால் நீங்கள் மேலும் மேலும் உயர்வுற வேண்டும், வேலையைத் தொடர்ந்து செய்ய வேண்டுமென்னும் ஊக்கத்தை, தூண்டுதலை உண்டாக்குகிறது, இல்லையா? அந்தத் தூண்டுதலால், நீங்கள் பிரச்சனைகளை உண்டாக்கு வதில்லையா? மூர்க்கத்தனமாய் நடந்து கொள்வதில் லையா? பிரிவினைகளையும் அழிவையும் உண்டாக்குவ தில்லையா? பூண்டோடு நாசம் செய்தும், காராக்கிருக சிறைகளில் அடைத்தும் கொடுமைப்படுத்துவதில் லையா? பதவி உயர்விற்காகச் செய்யப்படும் கொடுமை கள் இன்னும் பலப்பல. நீங்கள் செய்வது உங்களுக்கு

நியாயமாக, மதக் கோட்பாடுகளாக இருக்கலாம்; அது உங்கள் கொள்கை யின் வெளிப்பாடாக இருக்கலாம். ஆனால், அதை வெளிப்படுத்தும் வழிமுறைகளால் நீங்கள் உங்களுக்கு மட்டுமின்றி, மற்றவர்களுக்கும் இன்னல்களை விளை விக்கிறீர்கள். உண்மையில் உங்கள் செயல் ஆக்கப்பூர்வ மானதே இல்லை. நிறைவு பெற விரும்பும் மனதின் உண்மையான படைப்பாற்றல் இத்தகையதல்ல.

மேற்கூறியதிலிருந்து மாறுபட்ட வெளிப்பாடு, படைப்பாற்றல் இருக்கிறது என்று நான் உறுதிபடக் கூறுகிறேன். அத்தகைய படைப்பாற்றல், கட்டுப்பாடு களுக்கு உட்பட்ட செயல்களால் வேலியிடப்பட்டதல்ல. 'சுய' முயற்சியின் வழிமுறைகள் பற்றி அறிந்து கொள்வ தோடு, எதையும் பின்பற்றி நடக்காமலும் இருக்கும் போது, அத்தகைய படைப்பாற்றல் வெளிப்படுகிறது. முயற்சிகள் எல்லாம் கடந்த காலத்தில் செய்யப்பட்ட முயற்சிகளின் மறுபதிப்பே, பின்பற்றுதலே. 'நான்' மாற்றம் பெற, ஏற்றம் பெற நினைக்கும்போது, முன் உதாரணம் ஒன்றை பின்பற்றி நடந்து சாதிக்க முயற்சிக்கி றேன். 'நான்', 'எனது' என்ற எண்ணங்கள் அழிவுற்ற நிலையில்தான், அடிப்படையான, பரிபூரணமான, காலம் கடந்த, உன்னத படைப்பாற்றல் வெளிப்படும். நற்பண்பு என்று கருதி அடைவதல்ல 'தான்' அற்ற நிலை. அது, 'தான்' என்ற அகந்தையை அழிக்கச் செய்யப்படும் முயற்சிகளால் வருவதும் அல்ல. 'நான்' என்று எதுவும் இயங்காத நிலையில் மட்டுமே, பரிபூரண படைப் பாற்றல் பரிமளிக்கும்.

**கேள்வி :** தன் இயற்கையான சுபாவத்தின்படி மனிதன் செயல்படுகிறான். அவன் விரும்பாவிட்டாலும், பாவங்களைச் செய்வதற்கு அவன் கட்டாயப்படுத்தப்

படுவதுபோலத் தோன்றுகிறது. அவனை, தவறான செயல்களைச் செய்யத் தூண்டுவது எது?

**கிருஷ்ணமூர்த்தி :** பாவச் செயல் என்றால் என்ன? நற்செயல் அல்லது தீய செயல் என்று நம்மால் அழைக்கப்படுவது எது? ஐயா, தயவுசெய்து இதைக் கவனமாகக் கேளுங்கள். கவனிப்பதால், நல்ல செயல், கெட்ட செயல் போன்ற வார்த்தைகளின் பிடியிலிருந்து விடுபடலாம். விடுபட்ட நிலையில், ஆக்கப்பூர்வமான நிலையில், பாவமுமில்லை, தவறான செயலுமில்லை; அங்கு இருப்பதெல்லாம் உயிர்ப்பு நிலை, அன்பு நிலை; அது, என்றும் தவறாக இருப்பதில்லை. நாம் அந்த நிலையில் இல்லாததால், நாம், நம் மனதையும் செயல் களையும் இது நல்லது, அது கெட்டது என்று வேலியிட்டு பிரித்துக் கொள்கிறோம்; நாம் இந்த இருமை நிலையில் சிக்கிக் கொள்கிறோம். இந்தச் சிக்கலிலிருந்து தப்பிக்க, இதற்கு எதிரிடையான மற்றுமொரு இருமை நிலையை உருவாக்குகிறோம். ஒழுக்கம், நற்பண்பு என்பது நம்மில் பலருக்குப் பாரம்பரியமும் மரபுமே யாகும். நாம், நமது சூழ்நிலைகளுக்கும், சமுதாயத் திற்கும், மரபுகளுக்கும் அடிமைகளாக இருக்கிறோம். நமது அண்டை வீட்டுக்காரர், அதிகாரி, அரசாங்கம் மற்றும் கட்சி சொல்வதற்கெல்லாம் நாம் கட்டுப்படு கிறோம். அரசியல் கட்சியோ அல்லது மதவாதக் கட்சியோ, எதுவாயிருப்பி னும் அவற்றின் வழியிலிருந்து சிறிதே விலகிச் சென்றாலும், பாவச் செயலாகக் கருதப் படுகிறது. மரபு வழிகளிலிருந்து அங்கீகரிக்கப்பட்டவை களினின்றும் சிறிது விலகிச் சென்றாலும், திசைமாறிச் சென்றாலும், தீமையாகக் கருதப்படுகிறது. இக்கருத்தை ஏற்றுக் கொண்டவர்களாக வளர்ந்த நாம், மரபிற்கு மாறுபட்டுச் செல்ல விரும்புவதை, பாவச் செயல் என்று

அழைக்கிறோம். ஒத்திசைவுடன் நடந்து கொள்வது மேன்மையானதாகவும் மதிப்பிற்குரியதாகவும் கருதப்படு வதால், ஒத்திசைவுடன் நடந்து கொள்வதற்கான விருப்பம் நம்மிடம் அதிகமாய் உள்ளது.

ஆக, எது நல்லது, எது கெட்டது, எது பாவம், எது சத்தியம் என்பன போன்ற விஷயங்கள் பிரச்சனையாக இல்லை. பிரச்சனையாக இருப்பது, பயம் இல்லாமல் இருப்பது எப்படி என்பதுதான். பயம் இல்லாமலிருக்கும் ஒருவருக்குதான், அன்பைப் பற்றித் தெரியும். அவருடைய செயல்கள் அனைத்தும் அன்பிலிருந்து வருவதால், அவருக்குப் பாவம் பற்றி எதுவும் தெரியாது. கட்டாயத் தின் பேரிலோ, கட்டுப்பாட்டின் விளைவாகவோ, அவர் செயல்படாமல், அன்பிற்காக மட்டுமே செய்கிறார். பயம் இருக்குமிடத்தில் அன்பு இருக்காது. ஒரு நாட்டின் பிரஜை என்பதால் கிடைக்கும் பாதுகாப்பு, ஒரு மதத்தைச் சார்ந்தவர் என்பதால் கிடைக்கும் பாதுகாப்பு, கொள்கை நம்பிக்கையில் கிடைக்கும் பாதுகாப்பு, மனைவி, மக்கள், சொத்து, பணம், புகழ் இவற்றால் கிடைக்கும் பாதுகாப்பு போன்ற பாதுகாப்புகளை மனம் தேடியலையும் வரை, பயம் இருந்து கொண்டேதானிருக்கும். எந்த வகை பாதுகாப்பைப் பெற்றிருந்தாலும், அதை இழந்து விடுவோமோ என்ற பயம் இருந்து கொண்டே இருக்கும். மனோரீதியில் பாதுகாப்புடனும், நம்பிக்கையுடனும், விஷய ஞானத்துடன் இருக்கும் ஒருவர், மனதில் பயத்தோடு இருக்கிறார். அவருக்கு பாவம், புண்ணியம் பற்றி யெல்லாம் நன்கு தெரியும். அவர் இருமை நிலையின் போராட்டத்தில் சிக்கிக் கொள்கிறார். பயம் இல்லாதவரின் மனம், பாதுகாப்பைத் தேடி அலைவ தில்லை. அத்தகைய மனதில், அன்பு குடிகொண்டி ருக்கும்.

அன்பு ஒன்று மட்டும்தான் உண்மையான புரட்சியாக இருப்பதால், ஒருவர் அன்புள்ளம் கொண்டவராக இருக்கும்போது, சமூக விரோதச் செயல்களைச் செய்யத் தூண்டும் ஆசைகளிலிருந்து விடுபட்டவராக, பாவங்களி லிருந்து விடுபட்டவராக இருக்கிறார். உண்மையான அன்புள்ளம் கொண்டிருப்பது, சுலபமாக அடையக் கூடியதல்ல. ஒத்திசைவின் மூலமும், அதிகாரத்திற்கு அடிபணிதல் மூலமும், தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும் பயம் ஒருவரிடமிருக்கும் போது, அன்பு என்ற சொல்லுக்கு அவரைப் பொறுத்தவரை அர்த்தமேது மில்லை. மரபு வழியில், விஷய ஞானத்தில் கட்டுண்டு, சதா பலனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் மனம், என்றுமே பயத்திலிருந்து விடுதலை பெற முடியாது. பயமும், இருளும், ஒளியை என்றும் காண இயலாது.

**கேள்வி :** நான் மரணத்தின் வாசலுக்கே சென்றிருக் கிறேன். தற்சமயத்திற்கு, ஆபத்து விலகியுள்ளது. ஆனால், மரணம் வந்தே தீரும் என்பதை நானறிவேன். மரணத்தை எப்படி எதிர்கொள்வது என்று எனக்குக் கற்றுக்கொடுங்கள்.

**கிருஷ்ணமூர்த்தி :** ஐயா, கற்றுக் கொடுப்பது என்பது பெரிய விஷயமல்ல. ஆனால் என்னால் கற்றுக் கொடுக்க முடியாது; யாருக்கும் சீடனாய் இருக்காதீர்கள். எவ்வளவுதான் ஒருவர் சொல்வது சுகமளிப்பதாகவும், திருப்தி அளிப்பதாகவும் இருந்தாலும், எவரையும் பின்பற்றிச் செல்லாதீர்கள். இப்போது கேட்கப்பட்ட கேள்வி, மிகவும் சிக்கலானது.

மரணம் என்பதற்கு நீங்கள் தரும் பொருள் என்ன? சாதல், இல்லாதொழிதல் என்பதுதானே? நீங்கள்

எப்போது சாகவில்லை? நீங்கள் சாகவில்லை என்று எப்போது அறிகிறீர்கள்? நீங்கள் வாழ்ந்து கொண்டிருக் கிறீர்கள் என்ற விழிப்புணர்வுடன் எப்போதாவது இருந்திருக்கிறீர்களா? தயவுசெய்து கவனியுங்கள். வாழ்ந்து கொண்டிருக்கிறோம் என்ற பிரக்ஞையுடன் எப்போது இருக்கிறீர்கள்? வாழ்ந்து கொண்டிருப்பதைப் பற்றிய உணர்வு எப்பொழுதாவது இருந்திருக்கிறதா? வாழ்க்கையில் உரசல்கள் ஏற்படும்போது மட்டுமே, வாழ்வதைப் பற்றிய பிரக்ஞையே வருகிறது. உண்மை தானே? நீங்கள் ஆனந்தமாக இருக்கும் அந்த கணத்தில் 'ஆனந்தமாய் இருக்கிறோம்' என்ற உணர்வு ஏற்பட் டுள்ளதா? நீங்கள் களித்து மகிழும்போது 'மகிழ்ச்சியாக இருக்கிறோம்' என்ற நினைப்பு தோன்றுகிறதா? 'நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன்' என்று அக்கணத்தில் சொல்லி யிருக்கிறீர்களா? நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள் என்று உணரும் பொழுதில் அந்த மகிழ்ச்சி ஏற்கனவே முடிவுற்றுப் போய்விட்டதல்லவா? அனுபவித்த அந்த களிப்பு, இப்போது முடிவுற்று, அதன் ஞாபகம் மட்டும் தான் இப்பொழுது இருக்கிறது. கவனமாகக் கேளுங்கள், ஐயா! இது சாதுர்யமான வாதமோ, புத்திசாலித்தனமான வார்த்தைகளோ அல்ல!

இறப்பினைத் தாண்டி உள்ள ஒரு நிலையை உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். அந் நிலையை எப்படி அடைவது என்று நான் சொல்லிக் கொடுக்கப் போவதில்லை. ஆனால், நான் சொல்வதிலிருந்து நீங்களே அதைக் கண்டுபிடித்து உணர முடியும். அந்நிலையை அளிக்கவல்லதாகவுள்ள அனுபவ சேகரிப்பு எதுவு மில்லை. ஏனென்றால், நீங்கள் அனுபவங்களைச் சேகரிக்கத் தொடங்கும் அக்கணத்திலேயே மரிக்கத் தொடங்குகிறீர்கள்; பிறகு இறப்பு நேரிடுகிறது.

எப்போது வாழ்வைப் பற்றிய, வாழ்தலைப் பற்றிய பிரக்ஞையுடன் இருக்கிறீர்கள்? நோய்கள் வந்து வாட்டும்போதும், நீங்கள் ஆரோக்கியமாக இல்லை என்பதை உணரும்போதும், நீங்கள் வாழ்வைப் பற்றிய பிரக்ஞையுடன் இருக்கிறீர்கள். நீங்கள் ஆரோக்கியமாக இருக்கும்போது, உங்கள் உடல்நலனைப் பற்றிய நினைப்பே இல்லாமல் இருக்கிறீர்கள். வாழ்வில் உரசல்கள், துயரங்கள், சச்சரவுகள், உந்துதல்கள் எதிர்படும் போதுதான், வாழ்வைப் பற்றிய பிரக்ஞை வருகிறது; உறவுமுறைகளில் உரசல்கள், எதிர்பார்க்கும் பலன்களில் ஏமாற்றம் வரும்போது, நமது வாழ்க்கையைப் பற்றி எண்ணிப் பார்க்கிறோம். அதுவே நல்ல உடல் ஆரோக்கியத்துடனும், அன்றாட வாழ்க்கை, தடங்கல்கள் இல்லாமல் சுகமாக இருக்கும்போதும், வாழ்க்கையைப் பற்றிய பிரக்ஞை இருப்பதில்லை.

வாழ்க்கை என்பது மனத்தாங்கல்கள், உரசல்களின் வழிமுறை என்றாகி விட்டது. கடின உழைப்பு, துக்கம், வலி, இன்னல்கள் இவைகள் தான் நமக்கு வாழ்க்கையாகி விட்டது. இவைகளை மட்டும் அறிந்து கொண்டு வாழ் கிறோம். நாம் பிறரைப் பார்த்து பொறாமை கொள்ளும் போது, அதை உணருகிறோம்; நாம் பேராசையோடு நடந்து கொள்ளும்போதும், அதை உணருகிறோம்; ஆசைப்படும் பொருள்களை அடைவதற்காக நாம் ஓடும் ஓட்டம் பற்றியும் நாம் அறிவோம்; இப்படிப்பட்ட நம் நிலையை, நாம் 'வாழ்தல்' என்று பெயரிட்டு அழைக் கிறோம். வேலையை இழந்து விடுவோமோ என்ற பயம், அந்தஸ்து இல்லாமல் போய்விடுமோ என்ற பயம், எடுத்த காரியத்தை நிறைவேற்ற முடியாமல் போய் விடுமோ என்ற பயம், எதிர்காலத்தைப் பற்றிய பயம், அன்பிற்குரியவரைப் பார்க்க முடியாமல் போய்விடுமோ

என்ற பயம் - இதுதான் நமக்குத் தெரிந்தவை. நமக்கு வேறொன்றும் தெரியாது. நாம் சந்தோஷம் என்று கண்டுகொண்ட ஒன்று, இறந்த காலத்தின்பாற்பட்டதாகி விடுகிறது. நாம், நினைவுகளில், இறந்த கால ஞாபகங் களில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். கடந்த கால நினைவுகளுடன் சாகிறோம். இறப்பு நம்முடன் இருந்து கொண்டேயிருக்கிறது என்பது மட்டுமே நமக்குத் தெரியும். சாவைக் கண்டு நாம் அஞ்சுகிறோம். நம் செயல்கள் எல்லாம், நாம் தொட்டவையெல்லாம் அழிவுறுகின்றன. அழிவின் நிழல் நம்மை எப்போதும் தொடர்ந்து வருகிறது. நமது அன்பிற்குரியதையும் நாம் அழிக்கிறோம். நாம் ரசித்தவைகள் எல்லாம் மறைந்து விட்டது. நாம் போற்றி வளர்த்ததெல்லாம் களங்கப் பட்டுப் போயின. நாம் தொட்டதெல்லாம் அழிவுற்றது. நான் சொல்வதைக் கற்பனை என்று எண்ணாதீர்கள். இதுதான் நிதர்சனம். நமக்குத் தெரிந்ததெல்லாம் இறப்பு, அழிவு, நாசம் - இதுதான் நம் வாழ்க்கை. இந்த உண்மையைத் திரிபு செய்யாமல் உள்ளதை உள்ளபடிப் பார்க்கும்போது நிதர்சனத்திலிருந்து தப்பித்துக் கொள்ளப் பார்க்காமல், அதோடு ஒன்றியிருந்து பார்க்கும்போது, மனதையும் தாண்டி இறந்தகால நினைவுகளையும் தாண்டிச் சென்று உணரக்கூடிய சாத்தியமுள்ளது. தொடராக வருவது எதுவும் தனக்குள்ளேயே அதன் வீழ்ச்சிக்கு, அதன் அழிவிற்கான விதையைக் கொண்டி ருக்கிறது.

தயவுசெய்து இதைக் கவனமாகக் கேளுங்கள். நம் அக்கறையெல்லாம் நம் வாழ்க்கையின் தொடர்ச்சி, நீடிப்பு. நமது பெயர் நிலைக்க வேண்டும், நமது சொத்து நிரந்தரமாக இருக்கவேண்டும் என்றெல்லாம் நாம் விரும்புகிறோம். நமது தேசத்தின் மூலம், நமது வாரிசுகள்

மூலம், நிறைவு பெற விழைகிறோம். நாமும் நம்மைச் சார்ந்தவைகளும், தங்கு தடையற்று, நிரந்தரமாக இயங்கிக் கொண்டிருக்க வேண்டுமென்று விரும்பு கிறோம். தொடரும் நிலைப்பாடுடைய எதுவும் அழிவு சக்தியாகும்; அழிவின் விதை அத்தகைய நிலைப் பாட்டில் இருக்கிறது. தொடர்ந்து கொண்டிராமல் முடிவிற்கு வருபவைகளில் தான் புதுப்பித்தல், படைப் பாற்றல் போன்றவைகளுக்கு இடம் இருக்கிறது. நமது அனுபவங்கள், ஞாபகங்களாகப் பதிவு பெற்று தொடர்ச்சி பெறுகிறது. சூரியாஸ்தமனத்தைப் பார்க் கிறேன்; தனியாக ஒளிர்ந்து கொண்டிருக்கும் வானத்து நட்சத்திரத்தைப் பார்க்கிறேன்; உடனே அந்தக் காட்சிகள் ஞாபகங்களாகச் சேகரிக்கப்பட்டு, மனதில் வைக்கப் படுகிறது. ஏனென்றால் மனம், எல்லாவற்றையும் சேகரித்து, பதிவு செய்து, பாதுகாத்து வைத்துக் கொள்ள நினைக்கிறது - அவ்வாறே செயல்படுகிறது. சேமித்தவை களை இழந்து விடுவோமோ என்ற பயமும் மனதிற் குள்ளது. நான் ஞாபகத்தின் பின்னணி அகன்று ஒன்றை அனுபவிக்கக்கூடுமானால், அங்கே புதுப்பித்தல், படைப்பாற்றல் நிகழக்கூடும். ஆனால், மனம் எல்லா வற்றையும் சேகரித்து ஞாபகங்களாகச் சேமிப்பதால், ஞாபகத்தின் தாக்கம் இல்லாமல் ஒன்றை அனுபவிப்பது லேசான காரியம் இல்லை; மிகவும் சிரமப்பட்டால்தான் முடியும்.

நாம் எப்படிப்பட்டவர்கள்? நாம் குழப்பங்களின் குவியல்கள், தகிக்கும் ஆசைகளின் இருப்பிடங்கள், முரண்பாடுகளின் காப்பகங்கள், வேதனையுடன் கூடிய கடின உழைப்பின் நிலைக்களன்கள். நம்முடன் இறத்தல் இருந்து கொண்டேயிருப்பதால், நாம், சதா இறந்த காலத்திலேயே வாழ்ந்து கொண்டிருப்பதால், தொடர்ச்சி

நிலைப்பாட்டில் மட்டுமே, நாம் அக்கறையுடையவர்களாக இருக்கிறோம். நான் சொல்லியதை விமர்சிக்காமல், பகவத் கீதை அல்லது உபநிடதங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்காமல், உண்மையிலேயே ஊன்றிக் கேட்டீர்களா னால், சொல்லப்பட்டதின் நேரடி உணருதலை ஒரு நொடிப் பொழுதாவது அனுபவித்தீர்களானால், ஒவ் வொரு கணமும் ஒரு முடிவாக இருப்பதால், மரணம் என்று எதுவுமில்லை என்ற உண்மையைக் கண்டு கொள்வீர்கள். இது கவிதை வரிகள் அல்ல. இது உண்மை யானது, அதை நீங்கள் நேரடியாக அனுபவித்து உணர முடியும். நேரடி அனுபவம் கிடைக்க வேண்டு மென்றால், உங்கள் மனம், காலத்தின் பிடியில் சிக்கி யிருக்கக் கூடாது. மனதில், அனுபவங்கள் எதுவும் ஞாபகங்களாகப் பதிவு பெற்றிருக்கக் கூடாது. மனம் அமைதியோடு இருக்க வேண்டும். மனம் அவ்வாறிருந் தால் நேரடி அனுபவம் கிடைக்கப் பெறும். குறிப்பிட்ட செயல்முறைகள் மூலமாகவோ, நற்பண்புகளை வளர்த்துக் கொள்வதாலோ, நீங்கள் நேரடி உணர்தலைப் பெறமுடியாது. அது உங்களை நாடி வரவேண்டும். சத்தியம் தான், உங்களிடம் வரமுடியும். நீங்கள், அதை வரவேற்று அழைத்து வரமுடியாது. நீங்கள் திறந்த மனதுடனும், வேட்கைகள் எதுவுமில்லாமலும் இருந்தால் மட்டுமே, சத்தியம் உங்களிடம் வரும். நீங்கள், இறந்தகால ஞாபகங்களின் குவியல், காலியான வெற்றுக்குடம், உயிர்ப்பில்லாதவர் என்று உங்களை அறிந்து கொண்ட அந்த கணத்தில் குடம் நிறைகிறது. அது என்றுமே இனி காலியாகாது. அங்கு அன்பு மட்டுமே இருக்கிறது. அன்பு, முற்றுப் பெறுவதில்லை.

பிப்ரவரி 11, 1953
மும்பை.



# 3

# மெய்யறிவு

சிரத்தையுடன் இருப்பது மிகவும் கடினமான விஷயங்களுள் ஒன்றாக நமக்கு இருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. அதற்குக் காரணம் அற்ப விஷயங்களும், கவனத்தைச் சிதறடிக்கும் தேவையற்ற செயல்களும், நம்மைச்சுற்றிச் சூழ்ந்துள்ளன. கணக்கிலடங்கா குருமார்களும், தத்துவ ஞானிகளும், எண்ணற்ற வழிமுறைகளும் உலகில் உலவுவதால், நமக்கு எது சரியானது என்று தேர்ந்தெடுப்பது மிகவும் கடினமான விஷயமாகவுள்ளது. நாம் நன்கு கற்றுத் தேர்ந்தவராகவும், ஒரு குறிப்பிட்ட மார்க்கத்தைக் கடைப்பிடிப்பவராகவும் இருந்து விட்டால், மெய்யறிவைக் கண்டுபிடிப்பது மேலும் சிரமமாகி விடுகிறது. குறிப்பிட்ட வகை சிந்தனை அல்லது கோட்பாடுகள் அல்லது செயல்முறைகளுக்கு நம்மை நாம் ஆட்படுத்திக் கொள்கிறோம். அந்த வகையில் நாம் எவ்வளவுதான் தீவிரமாகவும் சிரத்தையாகவும் இருந்தாலும் நாம் உண்மையில் விழிப்புடன் இல்லை, நுண்ணறிவுடன் இல்லை. ஏனென்றால், சமய சார்புடையதோ, அரசியல் அமைப்போ, அறிவியல் அல்லது சமூகம் சார்ந்ததோ, அது எந்தவித அமைப்பாக இருந்தாலும், அதை நாம் ஆமோதித்து ஏற்றுக் கொள்ளும் போது, நம்முடைய அந்தச் செயல், நம்மை அந்த அமைப்பிற்குக் கட்டுப்பட வைக்கிறது, நம்மைத் தளை

படுத்துகிறது. தளைபடுத்தப்பட்ட மனம், நம் வாழ்க்கை சீர்கெட, ஒரு காரணமாகிறது. ஏதாவதொரு குறிப்பிட்ட அமைப்போடு இணைந்து கட்டப்பட்டாலொழிய, ஒரு செயல்முறை வளையத்திற்குள் மாட்டிக் கொண்டா லொழிய, நம்மால் தீவிர சிரத்தையுடன் முக்கியத்துவம் வாய்ந்த விஷயங்களை எண்ணிப்பார்க்க முடிவதில்லை என்று நான் நினைக்கிறேன். உயர்ந்த சிந்தனைகளைப் பற்றிச் சிரத்தையெடுத்துக் கொண்டவுடனே, நாம் ஞானிகளாகி விடவேண்டும் என்று விரும்புகிறோம். உடனே செயலில் இறங்கி விடுகிறோம். சீர்திருத்தங்கள், புரட்சி, செயல் என்று நம்மை முழுவதுமாக ஈடுபடுத்திக் கொள்கிறோம். உடனே செயல்படுத்தக்கூடிய சிந்தனை களைத்தான், முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதுகிறோம்.

செயல்கள் செய்யப்படக்கூடாது என்று சொல்ல வில்லை. பொருளாதாரம், சமூகம் மற்றும் பிற துறை களில் மாற்றம் வரக்கூடாது என்று சொல்லவில்லை. ஆனால், செயலில் மூழ்கும் முன்பு, சிரத்தை, தீவிரத் தன்மை என்றால் என்ன, மெய்யறிவுடன் இருப்பது என்று நாம் எதை அழைக்கிறோம் என்பவைகளைப் பற்றி நாம் தெளிவாக அறிந்திருக்க வேண்டாமா? சிரத்தை யுடையவர்களும், தீவிரத் தன்மையுடையவர்களும் எல்லாம் அறிவாளிகளா? அறிவாளிகள் எல்லாம் சிரத்தை உடையவர்களா? மிக நவீன அறிவியல் முன்னேற்றங் களையெல்லாம் அறிந்திருக்கும் நன்கு படித்தவர், தீவிரத்தன்மையுடையவரா? பல வகை தத்துவங்களையும் கற்றுத் தெரிந்தவர், முக்கியத்துவம் வாய்ந்தவைகளை அறிந்து கொள்வதில் சிரத்தையுடையவரா? சிரத்தை யுடனிருப்பது என்றால் என்ன என்பதை நாம் ஒவ்வொருவரும் கண்டுபிடிப்பது மிகவும் முக்கிய மல்லவா? உள்ளதை, உள்ளபடியறிய சிரத்தை யில்லாமல், உண்மையான ஆர்வமில்லாமல் இருந்தால், நாம் வாழும் வாழ்க்கைக்கு அர்த்தமேயில்லை.

உங்களில் பலர் இந்தச் சொற்பொழிவுகளை தவறாமல் கேட்டு வருகிறீர்கள். என்னதான் பேசப்படு கிறது என்பதையறிந்து கொள்ளும் ஆவலுடன் உங்களில் சிலர் வந்திருக்கலாம். குறிப்பிட்ட ஒரு பிரச்சனைக்குத் தீர்வு காண, அதற்கான விடையைக் காண சிலர் வந்திருக்கலாம். ஆனால், நீங்கள் எல்லோருமே, சிரத்தை யுடன் இருப்பது எந்த முறையில் மிகவும் அவசியமானது என்பதைப் பற்றி நினைத்துப் பார்க்கலாம், அல்லவா? இந்தச் சொற்பொழிவுகளை நீங்கள் கேட்டு விட்டுப் போகலாம். இந்தப் பேச்சுக்களைக் கேட்டதால் உங்கள் வாழ்க்கையில் எவ்வகையான விளைவுகள் ஏற்படக் கூடும்? உங்கள் வாழ்வில் இந்தச் சொற்பொழிவுகள் ஏற்படுத்தக்கூடிய தாக்கம் என்ன? வெறுமனே திரும்பத் திரும்பச் சொல்லப்படும் சில சொற்றொடர்களா, வார்த்தைகளா இந்தச் சொற்பொழிவுகள்? அல்லது, புதிய செயல்முறைகளை, புதிய வார்த்தைகளைக் கற்றுத் தருபவையா? அல்லது, மனதைக் கூர்மைப்படுத்துவதா? அல்லது உண்மையிலேயே இச்சொற்பொழிவுகளை செவிமடுப்பதால், சிரத்தை என்றால் என்ன என்பதை ஒருவரால் கண்டுபிடிக்க முடியுமா? செவிமடுப்பதற்கும் வெறுமனே கேட்பதற்கும் வித்தியாசம் இருக்கிறது. உள்ளதையறிந்து கொள்ள எடுத்துக் கொள்ளும் சிரத்தை என்பது, நற்பண்பு ஒன்றை வளர்த்துக் கொள்ள எடுத்துக் கொள்ளும் சிரத்தை போன்றதல்ல. நற்பண்புகளை வளர்த்துக் கொள்ளுவது, சமூகத்தில் அந்தஸ்தை அடைய மட்டுமே உதவுகிறது. பெற்ற மதிப்பை இழக்க நேரிடுமோ என்ற கவலையில், ஒருவர் என்றுமே ஆனந்தத்தை அனுபவிக்க மாட்டார். இயல்பாய் இல்லாத அவரால், மகிழ்ச்சி, ஆனந்தம் இவற்றை அனுபவிக்க முடியாது. ஆகவே, அந்தஸ்து என்பது தவிர்க்க வேண்டிய ஒன்று.

எந்த அளவிற்கு, எவ்வளவு ஆழத்திற்கு நாம் சிரத்தையுடன் இருக்கிறோம் என்பதைக் கண்டுபிடிப்பது மிகவும் அவசியமானதல்லவா? நாம் சிரத்தையுடன் இருக்க வேண்டியிருப்பதால், அதை அறிவது அவசிய மாகிறது. சிரத்தை, மெய்யுணர்வோடு கைகோர்த்து செல்வதாக உள்ளதா? உண்மையான மெய்யுணர் வுடையவர், மிகுந்த சிரத்தையுடையவராக இருப்பார். மெய்யுணர்வு என்பது எதைக் குறிக்கிறது என்பதைப் பார்க்கலாம்.

உங்களுக்கு ரொம்பவும் சலிப்பு ஏற்படாத வகையில், முந்தைய சொற்பொழிவில் சொன்னதை, திரும்பவும் சொல்லலாம் என்று நினைக்கிறேன். விளக்கங்கள் அளிக்காமலும், முன்பு படித்தவைகள், கேட்டவை களுடன் ஒப்பிட்டுப் பார்க்காமலும் உங்களால் சரியான முறையில் செவிமடுக்க முடியுமானால், அது சொற் பொழிவுகளை மேலெழுந்தவாரியாகக் கேட்கும் முறையி லிருந்து, முற்றிலும் வேறுபட்டதாக இருக்கும். உங்களுக்குப் பிடித்தமானவற்றைச் சுகமாக அனுபவிப் பதுபோல அனுபவித்துக் கேளுங்கள். தடை கற்கள் போடவோ, தடங்கல்கள் செய்யவோ நினைக்காமல், உண்மையில் கண்டுபிடிப்பதற்காக, விசாரணை செய்ய முயற்சியுங்கள். நாம் சொற்பொழிவுகளுக்குப் போகும் வழக்கம் உடையவர்களாக இருக்கிறோம். வார்த்தை களால் பின்னப்பட்ட சொற்பொழிவுகள் பலவற்றைக் கேட்கிறோம். சிலவற்றில் வார்த்தைகள் மிகவும் நேர்த்தியாகப் பின்னப்பட்டு உள்ளது. பலவற்றில் சொற்கள் கர்ணகடூரமாய் உள்ளது. பேச்சு சரியான முறையில் கேட்கப்பட்டதால் உண்டாகும் விளைவு, பேச்சின் தரத்தைச் சார்ந்திராமல், மிகவும் புரட்சிகரமாக வுள்ளது. நீங்கள் சொல்வதை மற்றும் இசையை, அலை யோசையைச் சரியான முறையில் கேட்க எனக்குத்

தெரிந்திருந்தால், அவ்வாறு கேட்டதின் விளைவாகவே, ஒரு அசாதாரணமான செயல் பிறக்கிறது. கேட்பதை, எவ்விதத் தடங்கலும் இல்லாமல், என்னுள் நுழைய விட்டால், எனது முயற்சி என்று எதுவுமில்லாமலேயே, கேட்பதின் விளைவாகவே ஒரு அசாதாரணச் செயல் பிறக்கிறது.

வசியம் செய்து கட்டுப்பாட்டுக்குள் ஒருவரைக் கொண்டு வந்து, நாம் சொல்வதை ஏற்றுக் கொள்ள வைக்க முடியும். ஆனால், ஒரு குறிப்பிட்ட மனோ பாவத்திலோ, செயலிலோ, நம்மை இழக்காமல் கவனத்துடன் கேட்கும் முறையை நாம் முயற்சி செய்து பார்க்கலாமா? நான் உங்களுக்கு எந்த விதமான மனோ பாவத்தையும் செயல்பாட்டையும் சிபாரிசு செய்ய வில்லை. நான் செய்ய விழைவதெல்லாம், நாம் ஒன்றுகூடி மிகவும் இன்றியமையாததான இந்த மெய்யறிவு என்பது என்ன என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதே. குறிப்பிட்ட தொழிலுக்கு மட்டும் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளாமல், வாழ்க்கை முழுமைக்குமே இயல்பான சிரத்தையுடன் நம்மை அர்ப்பணித்துக் கொள்ளும் பண்பை, மெய்யறிவு நமக்கு அளிக்கிறது. வாழ்க்கை என்பது குறிப்பிட்ட செயல் அல்ல; அது ஒரு ஒட்டு மொத்த செய்கையின் ஒழுங்கு. திட்டமிட்டுச் செய்யாமல், இயல்பாக, சுதந்திரமாக வாழ்க்கையின் பரிபூரணத்துவத்திற்கு அர்ப்பணித்துக் கொள்வது என்பது முடியுமா? அப்படிச் செய்வதற்கு ஒருவருக்கு மகத்தான மெய்யறிவு, இயல்பான நுண்ணறிவு இருக்க வேண்டும்; கறைபடாதவராக இருக்க வேண்டும். அத்தகைய மெய்யறிவு பெறுவது இயலுமா? நாம் மேலும் மேலும் படிக்கப் படிக்க, படித்த ஒன்றை இன்னொன்றுடன் ஒப்பிட்டுப் பார்த்தல் அதிகரிக்கிறது, விஷய ஞானத்தின் குழப்பங்களில் சிக்கிக் கொள்கிறோம்.

மெய்யறிவு என்றால் என்ன என்பதைப் பற்றித் தெரிந்து கொள்ள இயலுமா? அப்படித் தெரிந்து கொண்டு விட்டால், அதன்மூலமாக, உண்மையான செயல் பற்றியும் நம்மால் அறிந்து கொள்ள முடியும். பிறரால் திணிக்கப்படாத செயல்தான் உண்மையான செயல். கார்ல் மார்க்ஸ், சோஷலிஸ்ட், முதலாளித்துவவாதி, பேரறிவாளர், செயலைச் செய்யத் தூண்டியவர் - இவர்களில் யாராக இருந்தாலும், அந்த செயல், உண்மைச் செயல் ஆகாது. உண்மையான செயல் என்பது, ஒருவருடைய இலட்சியங்களினாலோ, விஷய ஞானத்தாலோ, படிப்பறிவாலோ அடக்கியாளப்படுவதில்லை. மெய்யறிவு நமக்கு இல்லாதிருப்பதாலோ என்னவோ, நம்மீது பிறர் அதிகாரம் செலுத்துகிறார்கள்; அவர்கள் கருத்தை நம்மீது திணிக்கிறார்கள். பிறருடைய அதிகாரத்திற்கு அடங்கிப் போவதாலேயே, மெய்யறிவை அறிந்து கொள்வதும், வளர்த்துக் கொள்வதும் நசுக்கப் படுகிறது.

எவ்வித அதிகாரத்திற்கும் உட்படாத, சுதந்திரமான தாக இருப்பது மெய்யறிவு என நான் கருதுகிறேன். அரசியல் கட்சிகளின் அதிகாரம், பாரம்பரிய கருத்துகளின் அதிகாரம், புத்தகங்களில் வெளியிடப்பட்டுள்ள கோட்பாடுகளின் அதிகாரம், கடந்த கால அனுபவங்கள் நம் சிந்தனையின் மேல் செலுத்தும் அதிகாரம் போன்ற அதிகாரங்கள் மேலோட்சியிருக்கும் இடத்தில் மெய்யறிவு இருக்காது. அதிகாரம் ஆட்சி நடத்தும் இடத்தில், தேர்ந்தெடுத்தலுக்கு இடம் இருக்கும். தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு இருக்கும் இடத்தில் மெய்யறிவிற்கு இடம் இல்லை.

தயவு செய்து நான் சொல்வதைக் கவனமாகக் கேட்டு உள்வாங்கிக் கொள்ளுங்கள். கேட்டுக் கொண்டு வரும்

போது, அதிலிருக்கும் உண்மை உங்களுக்குப் புலப்படத் தொடங்கும். அனுபவங்கள், எனக்கு மெய்யறிவை கொடுக்கும் என்ற எண்ணத்தில், அனுபவங்களைச் சார்ந்து நான் இருக்கிறேன். ஆனால், அனுபவங்களுக்கு மெய்யறிவை அளிக்கும் திறன் உள்ளதா? அவைகளால் எப்பொழுதாவது மெய்யறிவைத் தோற்றுவிக்க முடியுமா? அனுபவங்கள் என்றால் என்ன? வாழ்க்கை யின் கணக்கிடலங்காச் சவால்களுக்கு எதிர்விளைவாக வெளிப்படும் தொடர் நிகழ்ச்சியே அனுபவங்கள். நீங்கள் என்னைப் புகழ்ந்து பேசினால், நான் மகிழ்ந்து போகிறேன், புகழ்ச்சியின் எதிர்விளைவாக, மகிழ்ச்சி யுறுகிறேன். அழகைப் பார்க்கிறேன் - அழகு, என்னுள் தாக்கத்தை உண்டுபண்ணி, அதன் விளைவாக அழகை ரசிக்கிறேன். இவ்வாறு, எதிர்படும் விஷயம், அதற்கான என் பதிலாக விளையும் எதிர்வினை, இவற்றின் தொடர்பாகப் பதிவாகும் அனுபவம் என்று வாழ்க்கை யில் சங்கிலித் தொடராக அனுபவங்கள் ஏற்படுகின்றன. கல்வி, மதம், மரபு போன்றவற்றால் தளைபடுத்தப்பட்ட பின்னணியிலிருந்து கொண்டு, மனம், சவால்களைச் சந்திக்கிறது. பின்னணியின் இயல்பின்படி, அனுபவங்கள் அமைகின்றன.

அனுபவங்களின் துணைகொண்டு, மனம், எதிர்படும் மற்ற சவால்களையும் சந்திக்கிறது. மனம், தனக்கு இசைவான அனுபவத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு செயல்படுகிறது. ஆக, படிப்படியாக, அனுபவம் அதிகாரம் பெற்று விடுகிறது. அதிகாரத்தில் அமர்ந்து விட்ட அனுபவம், எனக்கு ஒரு அடையாளம் தருகிறது. அனுபவத்திலிருந்து என் செயலை நான் தேர்ந்தெடுக் கிறேன், அனுபவத்தின் துணைகொண்டு சிந்திக்கிறேன். ஆக, தேர்ந்தெடுத்தல், அனுபவத்தின் உரிமை; விஷய ஞானத்தின் உரிமை, அனுபவம். அனுபவம் -

உங்களுடையதோ, என்னுடையதோ அல்லது தேர்ந்த படிப்பறிவுடையவர்களுடையதோ - யாருடையதாக இருந்தாலும், தேர்ந்தெடுத்தல், அதன் உரிமையாக வுள்ளது.

தேர்ந்தெடுப்பதற்கு ஆற்றல் இருக்கும் இடத்தில் மெய்யறிவு இருக்குமா? அனுபவத்தின் விளைவாக, தேர்ந்தெடுத்தல் சாத்தியமாகிறது. அனுபவம் என்பது கட்டுப்படுத்தப்பட்ட சூழலில் தோன்றிய பதிவுகள். நம் வாழ்க்கை முழுவதுமே தெரிவு செய்தலை அடிப் படையாகக் கொண்டுள்ளது. நான் இந்தப் பொருளைத் தெரிவு செய்கிறேன் அல்லது அந்தப் பொருளைத் தேர்ந்தெடுக்கிறேன். இந்த மலரை எனக்குப் பிடித்த மலராகத் தேர்ந்தெடுக்கிறேன் அல்லது அந்த வாசனைத் திரவியத்தைத் தெரிவு செய்கிறேன்; மற்றதைவிட இந்தத் தத்துவத்தை மிக உயர்ந்ததாகத் தீர்மானித்துத் தேர்ந்தெடுக் கிறேன்; மத குருமார்களில், இவரை என் குருவாக தேர்ந்தெடுக்கிறேன்; அந்த அரசியல் கோட்பாட்டை, நான் பின்பற்ற வேண்டியதாகத் தெரிவு செய்கிறேன்; அரசியல் தலைவர்களில், இவரை என் தலைவராக ஏற்றுக் கொள்கிறேன்; இப்படி வாழ்க்கை முழுவதுமே விளக்கங்கள், மற்றும் தெரிவுகளின் தொடர்ச்சியாக வுள்ளது. நான் தீவிரமாக, நுணுக்கமாக, தேர்ந்தெடுக்க வேண்டியதை, உயரத்திற்குச் சென்று தெரிவு செய்யச் செய்ய, எனக்குத் தராதரம் கண்டுபிடிப்பதில் ஆற்றல் அதிகமுள்ளது என்றும், நான் மிகவும் அறிவாளி என்றும் எண்ணி பெருமிதம் அடைகிறேன். தெரிவு செய்வது உயர உயர, என்னைப் பற்றிய என் எண்ணமும் உயர்ந்து கொண்டு போகிறது. இந்த எண்ணம் சரியானதா? தெரிவு செய்தல், தேர்ந்தெடுத்தல் என்பது வாழ்க்கையில் சில தடங்களில் தேவையானதுதான்.

ஆனால், மனோரீதியில், அகவாழ்வில், அனுபவத்தின் அதிகாரம் அல்லது மற்ற அதிகாரத்தின்பாற்பட்ட தெரிவு, மெய்யறிவை ஊனப்படுத்தி விடாதா? நான் பௌதீக பொருட்களின் தெரிவைப் பற்றிக் குறிப்பிடவில்லை. மனோரீதியில் தேர்ந்தெடுக்கும்போது, நான் தேர்தெடுத்தது, நான் மனதளவில் கட்டுப்பட்டுள்ளதின் பலனாக உள்ளது; தளைபட்டுள்ளவைகளின் விளைவான அனுபவத்தின் பிரதிபலிப்பாக உள்ளது. ஆகவே, அகத்தில் நான் எவ்வளவுக்கெவ்வளவு அனுபவத்தின் துணை கொண்டு தெரிவு செய்கிறேனோ, அவ்வளவுக் கவ்வளவு என் மனம் தளைபட்டிருக்கிறது என்று பொருள். கோட்பாடுகளின்படி, மரபுகளின்படி, கட்டுப் பாடுகளின்படி ஏற்பட்ட அனுபவங்களின் துணை கொண்டு, தேர்ந்தெடுக்கப்பட்ட உள்முக தெரிவுகள், மனதின் தளைபட்ட நிலையைப் பறைச் சாற்றுவதாக இருக்கிறது.

அனுபவங்களின் உரிமையால் எடுக்கப்பட்ட தெரிவு, மெய்யறிவை அழித்து விடாதா? மெய்யறிவு நமக்கு மிகவும் முக்கியமான தேவை அல்லவா? அதுவும் தொடர்ந்த கலவரங்கள், அடக்குமுறைகள், அதிகார வெறிகள் நிறைந்த இன்றைய நிலையில், மெய்யறிவு மிகவும் தேவைப்படுகிறது, அல்லவா? எல்லாவித அதிகாரங்களிலிருந்தும், அதன் உரிமையாய் விளங்கும் தேர்ந்தெடுத்தலிலிருந்தும், நம்மை விடுவித்துக் கொண்டு சுதந்திரமாக இருக்க வேண்டாமா? சத்தியம் என்றால் என்ன என்பதைக் கண்டறிவதற்காக, அத்தகைய சுதந்திர நிலையை நாம் பெற வேண்டாமா? சத்தியம் என்பது தேர்ந்தெடுக்கப்படுவதால் வருவதில்லை. சத்தியம், உரிமங்களின் பலனாகவும் இல்லை. என்னால் தேர்ந் தெடுக்கப்படக்கூடியது என்றால், அது சத்தியம் இல்லை. நான் தேர்ந்தெடுக்கும் விஷயம், என் வாழ்வின்

பின்னணியின் இயல்புடையதாய் இருக்கும். நான் தேர்ந்தெடுத்ததின் குணம், எனது அனுபவங்களைச் சார்ந்ததாக இருக்கும்; எனக்குப் பாதுகாப்பு, நிறைவு, விரும்பியவைகளைத் தரக்கூடிய அதிகாரங்களைச் சார்ந்ததாக இருக்கும். அன்றாட வாழ்வில் நாம் கையாளும் 'தேர்ந்தெடுத்தல்' என்ற முறையின் மூலம் மெய்யறிவு பெற முடியுமா? 'தெரிவு' முறையால் பெற முடியாதென்றால், மெய்யறிவு செயல்படுவதை எது தடைசெய்கிறது என்பதைக் கண்டுபிடிக்க வேண்டாமா? எல்லாவித அதிகாரங்களிலிருந்தும் பெறும் விடுதலையே மெய்யறிவு.

அதிகார அஸ்திவாரத்தின் மேல் எழுப்பப்படாத உலக வாழ்க்கை ஏற்படக்கூடுமா? சமூகம், பொருளாதாரம், சமயம், பண்பாடு ஆகிய துறைகளில் அதிகாரத் திணிப்பும் அதிகாரத்தின் ஆட்சியும் இல்லாத உலகத்தைச் சமைக்க முடியுமா? அதிகாரங்களுக்கு அடிபணியாமல், எந்த விதமான கட்டுப்படுத்தலும் இல்லாமல், எந்த விதமான எதிர்ப்பும் இல்லாமல், எவ்விதமான செயல்பாட்டு முறைகளிலும் மாட்டிக் கொள்ளாமல், வாழ்க்கையை நடத்த முடியுமா? தெரிவு செய்தல் இல்லாத மெய்யறிவு பெற்று வாழ, நாம் சிரத்தை எடுத்துக் கொள்வது முடிகின்ற காரியமா என்பதை கண்டுபிடிப்பது மிகவும் முக்கியமான விஷயமில்லையா? ஏனென்றால், மெய்யறிவுடன் கூடிய வாழ்க்கையில், பலனை எதிர்பார்க்காத செயல், முடிவு இல்லாத செயல் நடைபெறுகிறது. அத்தகைய செயல், மாறாத, சஞ்சலமில்லாத, உண்மையான புரட்சி நிலைப்பாடுடையதாகும். மிகுந்த குழப்பத்திலிருக்கும் நமக்கு, இத்தகைய செயல்பாட்டு முறை மிகவும் தேவைப்படுகிறது. போதகர்கள் அனைவரும் மற்றும் குருமார்கள் அனைவரும் நமக்கு மெய்யறிவு தா

இயலாமல் தோல்வி அடைந்தனர்; புனித நூல்கள் அனைத்தும் தோல்வியடைந்தன. நாம் போற்றும் வீரத் தலைவர்களின் நிழற்படங்கள், சுவற்றில் தொங்கு கின்றன. அவர்கள் நம் இதயத்தில், நம் எண்ணத்தில் இல்லை. அவர்களால் நம் பிரச்சனைகளைத் தீர்க்க முடியாமல் போனதால், அவர்களும் தோற்றனர். மனித குலத்தின் இன்னல்களைத் தீர்க்க முடியாமல், அனைத்தும் தோல்வியுற்றன. அனைத்துவகை அதிகாரங் களிலிருந்தும் நம்மை விடுவித்துக் கொள்ளல் அவசிய மல்லவா? அதிகாரம் மற்றும் தேர்ந்தெடுத்தல் ஆகிய வற்றின் தலையீடு இல்லாமல், சத்தியம் என்றால் என்ன என்பதைப் பற்றி நாம் விசாரணை செய்ய வேண்டாமா? ஏனென்றால், தெரிவு இல்லாத செயலில் நாம் குறுக்கி டாமல், தேர்ந்தெடுக்காமல் இருக்கும் அக்கணத்திலேயே, அச்செயல், ஒரு புரட்சியைத் தோற்றுவிக்கிறது. அந்தப் புரட்சி, மேலெழுந்தவாரியாக மேற்பரப்பில் மட்டும் மாற்றம் விளைவிப்பதாய் இல்லாமல், அடிப்படையில், ஆழமாக உள்முகப் புரட்சியை உண்டாக்குகிறது.

எவ்வித அதிகாரமும் செலுத்தாத, தெரிவு எதுவும் செய்யாத படைப்பாற்றலால் சிருஷ்டிக்கப்பட்டதாக, அந்தச் செயல் இருக்கிறது. ஏனென்றால், அங்கு மனதில் பயம் ஏதுமில்லை; பயப்படும் மனம்தான், செயலை தேர்ந்தெடுக்கிறது; பயம் இருக்கும் மனதில், மெய்யறிவு இருக்காது. தேர்ந்தெடுக்கும் குணம், மனதில் பயம் இருப்பதால்தான் வருகிறது. மனம், முற்றிலுமாகப் பயத்திலிருந்து விடுதலை பெறுவது நடக்கக்கூடிய காரியமா? மனம், செயலின் பலனை எதிர்பார்க்காமல் இருந்தால் மட்டுமே, அதனால், பயத்திலிருந்து மீள முடியும். மனம், அடைய வேண்டும் என்ற நோக்கத் தோடு ஒன்றைப் பின்தொடர்ந்து சென்றால், அடைய மாட்டோமோ என்ற பயம் இருக்கும். இலக்கை

நிர்ணயம் செய்யாவிட்டால், பயம் விலகும். கொள்கை எதனாலும் அதிகாரங்கள் எதனாலும், பிணைக்கப்படாத மனம், பயத்திலிருந்து விடுதலை பெற்றதாக இருக்கும். அப்போது மட்டுமே மனித மனங்களில், இதயங்களில், ஒரு புரட்சி, சீர்திருத்தம், புதியதோர் மாற்றம் தோன்ற வாய்ப்பு உள்ளது.

**கேள்வி :** என் உடலும் மனமும், ஆழமாக வேரூன்றி இருக்கும் வேட்கைகளாலும், அறிந்த பயங்களாலும் அறியாத பயங்களாலும் உருவானதாகத் தோன்றுகிறது. நான், என் மனதைக் கண்காணிக்கிறேன். ஆனால், அடிப்படையில் இருக்கும் பயங்கள், அடிக்கடி என்னை வீழ்த்துகின்றன. என்னால் என்ன செய்யக்கூடும்?

**கிருஷ்ணமூர்த்தி :** ஐயா, பயம் என்று எந்த அர்த்தத்தில் சொல்கிறோம் என்பதைக் காண்போம். பயம் என்றால் என்ன? ஒன்றுடன் சம்பந்தப்படுத்தப்பட்டுதான், பயம் வருகிறது. பயம் தனித்து வருவதில்லை. ஏதோ ஒன்றுடன் சம்பந்தப்படும்போது, மனதில் பயம் தோன்றுகிறது. என்னைப் பற்றி நீங்கள் என்ன சொல்லி விடுவீர்களோ என்று பயம், ஊர், உலகம் என்னைப் பற்றி என்ன நினைக்குமோ என்று பயம், வேலை போய் விடுமோ, வயோதிக காலத்தில் பாதுகாப்புக்கு என்ன செய்வது, தாய் தந்தையர் இறந்து விடுவார்களோ என்று, பயங்கள் பலவிதம். ஆக, பயம் என்பது ஏதோ ஒன்றுடன் தொடர்புடையதாக இருக்கிறது.

நான் பயமின்றி இருப்பது எப்படி? ஒழுங்குமுறை களைக் கடைபிடித்தால் அவை பயத்தை ஒழித்து விடுமா? ஒழுங்கு என்பது எதிர்ப்பு சக்தி - ஒன்றைக் கற்றுக்கொள்ள வளர்த்துக் கொள்ளப்படும் எதிர்ப்பு சக்தி. தற்போதைய நிலையை மாற்றியமைக்க, அதை எதிர்த்து, நீக்கி, புதிய ஒழுங்கை நிலைநாட்டுவது ஒழுங்குமுறை. ஒழுங்கு

முறை, மனதிற்கு, பயத்திலிருந்து விடுதலை பெற்றுத் தருமா? அல்லது, பயத்தை சற்றுத் தள்ளி நிறுத்தி வைக்குமா? தடுப்புச் சுவர் கட்டி, பயத்தைத் தள்ளி வைக்கலாம். ஆனால், சுவரின் மறுபுறத்தில் பயம் இருந்துகொண்டுதானிருக்கும். எதிர்ப்பு சக்தியாலும் தைரியத்தை வளர்த்துக் கொள்வதாலும் பயத்தை அகற்றி விட முடியாது. ஏனென்றால், தைரியம், பயத்திற்கு எதிர்மறையானது; மனமானது, தைரியம், பயம் இரண்டிலும் சிக்கிக் கொண்டிருக்கும்போது, தீர்வு காண முடியாது. பயத்தை ஒழிக்க முடியாது. தீர்வு காண முடியாததால், எதிர்க்க முனைகிறது. ஆக, தைரியத்தை வளர்த்துக் கொள்வதால், பயத்தைப் போக்க முடியாது.

நான் பயத்தை ஒழித்துக் கட்டுவது எப்படி? தயவுசெய்து கவனியுங்கள், ஐயா! இது நம் பிரச்சனை, பயத்திலிருந்து விடுபட நினைக்கும் ஒவ்வொரு மனிதனின் பிரச்சனை. பயத்திலிருந்து விடுபட்டால், உலகத்தில் மிகப்பெரிய அளவில், விஷமங்கள், தீங்குகள், இன்னல்களை உருவாக்கும் 'நான்', 'எனது' என்ற அகந்தை மறையும். பயத்திற்குக் காரணமே 'நான்' என்ற எண்ணமல்லவா? நான் பாதுகாப்புடன் இருக்க வேண்டுகிறேன். பாதுகாப்பு கிடைக்காமல் போய் விடுமோ என்று அஞ்சுகிறேன். சமூகத்தில், அந்தஸ்த்தில், அரசியலில், பொருளாதாரத்தில் பாதுகாப்புடன் இருக்க வேண்டுகிறேன். இந்த ஜென்மத்துப் பாதுகாப்பு மட்டு மல்ல, அடுத்த ஜென்மத்திற்கும் பாதுகாப்பு வேண்டு கிறேன். ''அடுத்த பிறவியில், உனக்குப் பிரமாதமான வாய்ப்பு இருக்கிறது'' என்று கடவுள் என் முதுகில் தட்டிக் கொடுத்து உறுதிமொழி அளிக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறேன்; அறிவுரை சொல்ல எனக்கு ஆள் தேவை; என்னை ஊக்குவிக்க நண்பர்கள் தேவை; எனக்குப் புகலிடம் தரவேண்டும். ஆக, நான்

பாதுகாப்பைக் கோரும் வரை, எனக்குள் பயம் இருக்கும். பயத்திலிருந்து எல்லா வகை வேட்கைகளும் ஊற்றெடு கின்றன. பயம் என்றால் என்ன என்பதை நாம் அறிந்து கொள்ள முடிந்தால், ஓயாமல் தெரிவு செய்வதிலிருந்தும் விடுதலை கிடைக்கலாம்.

பயம் என்றால் என்ன என்பதைப் பற்றி எப்படி அறிந்து கொள்வது? ஒழுங்குமுறை பயிற்சிகள் செய்யாமல், எதிர்த்துக் கொள்ளாமல், தப்பித்து ஓடாமல், பொய்த் தோற்றங்களை உருவாக்காமல், பிரச்சனைகளை ஏற்படுத்தாமல், புதிய குருமார்கள், தத்துவ ஞானிகள் பரம்பரையை உண்டாக்காமல், பயம் என்ற உணர்ச்சியை எப்படி உண்மையில் எதிர்கொள்வது? எப்படி அறிந்து கொள்வது? எப்படிப் பயத்திலிருந்து விடுபடுவது? எப்படி விடுபட்டு அப்பால் செல்வது? பயத்திலிருந்து தப்பி ஓடாமல் இருந்தால்தான், என்னால் பயத்தைப் புரிந்து கொள்ள முடியும். பயத்தை, தைரியம் கொண்டு எதிர்க்காமலிருந்தால்தான், பயத்தை அறிந்து கொள்ள முடியும். ஆகவே, பயத்தை எதிர்க்கும் இந்த நபர் யார் என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும். பயத்தைத் தடுக்க நினைக்கும் இந்த 'நான்' யார்? இது புரிகிறதல்லவா, ஐயா? நான் மதிப்பிற்குரியவராகச் சமூகத்தில் இருக்க விரும்புவதால், மக்கள், என்னைப் பற்றி என்ன சொல்லி விடுவார்களோ என்று பயப்படுகிறேன். நான் வாழ்வில் வெற்றி வாகை சூட விரும்புகிறேன்; எனக்கென்று புகழ், பெயர், பதவி, அதிகாரம் இருக்க வேண்டுமென்று விரும்புகிறேன். எனவே, ஒரு பக்கத்தில் நான் விரும்பி யவைகளைப் பெற்றுவிட, அவைகளைத் தொடர்ந்து செல்கிறேன். ஆனால், நான் எதைச் செய்தாலும், அதனால் ஏமாற்றமும் சோர்வும் ஏற்படும் என்று உள்ளூர உணர்கிறேன். என்ன செய்ய வேண்டும் என்று விரும்பு கிறேனோ அதுவே எனக்குத் தடையாய் நிற்கும் என்றும்

உணர்கிறேன். ஆக, வெவ்வேறு விதமான இரண்டு செயல்பாடுகள் என்னுள் வேலை செய்கிறது - ஒன்று சாதிக்க விரும்புகிறது, மதிப்பு பெற்றவராகப் புகழடைய விரும்புகிறது, வெற்றி பெற விரும்புகிறது; மற்றது, என்னால் சாதிக்க முடியாமல் போய் விடுமோ என்று ஓயாமல் பயந்து கொண்டிருக்கிறது.

ஆக, என்னுள் இரண்டு ஆசைகள், இரண்டு இலக்குகளை அடைய தீவிர முயற்சி என்று இரண்டு வித செயல்பாடுகள் நடந்து கொண்டிருக்கிறது - ஒன்று ''நான் சந்தோஷமாக இருக்கவேண்டும்'' என்று சொல்கிறது. உலகில் சந்தோஷம் இருக்காது என்று மற்றது அறிந்திருக்கிறது. நான் பணக்காரனாக இருக்க வேண்டும். அதே சமயத்தில், கோடிக்கணக்கான ஏழைகளைப் பார்க்கிறேன். இருந்தாலும் நான் பணக்காரனாவதே என் குறிக்கோள். பாதுகாப்புடன் இருக்க வேண்டும் என்ற விருப்பம் என்னை ஆட்டிப் படைக்கும் வரை, என்னை உந்தித் தள்ளும் வரை, எனக்கு அதிலிருந்து விடுதலை இல்லை; அதே சமயம், கருணை, அன்பு, நுண்ணுணர்வு போன்றவைகளும் என்னுள் இருக்கிறது. முடிவே யில்லாமல் இந்தப் போர் நடந்து கொண்டிருக்கிறது. இந்தப் போர் வெளிப்பட்டு வந்து சமூக விரோதச் செயலாகவும் மாறுகிறது. இன்னும் எவ்வளவோ குழப்பங்கள், மாற்றங்கள். இந்தப் போரிலிருந்து எப்படி விடுபடுவது? இந்த உள்முக போராட்டத்திலிருந்து எப்படி விடுதலை பெறுவது? என்னால் என்ன செய்யக் கூடும்?

நான் ஒரு செயல்பாட்டை மட்டும் கவனித்தேன் என்றால், பிரச்சனையைக் கையாள முடியும். அதாவது, பயம் என்பதை மட்டும் கவனிக்க வேண்டியிருப்பின், என்னால் பயத்தை எதிர்கொள்ள முடியும். ஆனால், பண்புகளை வளர்த்துக் கொள்ள வேண்டும், தைரியத்தை

வளர்த்துக் கொள்ள வேண்டும் என்பது போன்ற மற்றொரு செயல்பாடும் பயத்துடன் சேர்ந்து வருகையில், குழப்பம் ஏற்படுகிறது. அதாவது, 'உள்ளது' என்ன என்பதை மட்டும் நான் அறிந்து கொண்டு விட்டால், 'உள்ளது'டன் இயங்க முடியும். 'உள்ளது' இப்படியாக இருக்க வேண்டும் என்று சொல்லும்போது குழப்பம் ஏற்படு கிறது. நம்மில் பெரும்பாலோருக்கு 'உள்ளது' பற்றி எதுவும் தெரியாது. நாம் எதுவாக இருக்க வேண்டும் என்பதைப் பற்றி மட்டும்தான் அக்கறை எடுத்துக் கொள்கிறோம். 'இப்படித்தான் இருக்க வேண்டும்' என்ற நமது எண்ணம், இருமை நிலையை உருவாக்குகிறது. 'உள்ளது' இருமை நிலையை உருவாக்குவதில்லை. 'இப்படித்தான் இருக்க வேண்டும்' என்ற எண்ணம், குழப்பத்தையும் இருமை நிலையையும் உண்டாக்கு கிறது.

'உள்ளதை', எதிர்மறை இல்லாமல், குழப்பங்கள் இல்லாமல், என்னால் கூர்ந்து கவனிக்க முடியுமா? 'உள்ளதை' எதிர்க்காமல், உள்ளவாறு காண முடியுமா? எதிர்ப்பு இருந்தால், எதிர்மறை தோன்றி விடுகிறது. எனக்குப் பயமாய் இருந்தால், அதைத் தைரியம், நம்பிக்கை இவற்றைக் கொண்டு எதிர்க்காமல், என்னால் பயத்தை ஊன்றி கவனிக்க முடியுமா? எதிர்ப்பு தெரிவிக் கும் அக்கணமே, நான், மேலும் ஒரு குழப்பத்தை உண்டாக்கி விடுகிறேன். உள்ளதை எதிர்க்காமல் உள்ளவாறு பார்க்க முடியுமா? பார்க்க முடிந்தால் பயத்தை எதிர்கொள்ள என்னால் முடியும்.

பயம் என்றால் என்ன? பயம் என்பது ஒரு சொல்லா, ஒரு கருத்தா, ஒரு எண்ணமா அல்லது நிஜமாக உள்ள ஒன்றா? பயம் என்ற சொல்லால் பயம் வருகிறதா அல்லது அச்சொல்லிலிருந்து பயம் தனித்து நிற்கிறதா?

தயவுசெய்து என்னோடு சேர்ந்து இதைப்பற்றி எண்ணிப் பாருங்கள், ஐயா. சோர்ந்து போய் விடாதீர்கள்; கவனத்தைச் சிதற விடாதீர்கள். மரணத்தைப் பற்றிய பயம், உற்றார் உறவினர் மரணத்தைப் பற்றிய பயம் என்பதாகப் பயம் என்ற அசாதாரணமான இருளின் சுமையால், ஒவ்வொரு மனிதனும் துன்புறுகிறான். இவ்வாறு யாவருக்கும் சுமையாய் இருக்கும் பயம் என்ற பிரச்சனையை ஒதுக்கித் தள்ளாமல், ஆராய்வது அவசிய மானதல்லவா? இந்தப் பிரச்சனையைக் கவனமாக ஆராய்ந்தால், பயத்திற்கு எதிராக நாம் காட்டும் எதிர்ப்பே, குழப்பங்களுக்குக் காரணமாகிறது என்று காணலாம். பயத்திலிருந்து தப்பித்துக் கொள்ள எண்ணுவதும், ஒரு வகை எதிர்ப்பே. தைரியத்தை வளர்த்துக் கொண்டு பயத்தைப் போக்க எண்ணுவதும், ஒரு வகை எதிர்ப்பே. இத்தகைய எதிர்ப்புகள், எதிர்மறை குழப்பங்களை உண்டாக்குகின்றன. இந்தச் சூழ்நிலையில், நம்மால் பயத்தைப் பற்றிப் புரிந்துகொள்ள இயலாது.

ஒரு கருத்திற்கும் அதற்கு எதிரிடையான கருத்திற் கும் இடையே தோன்றும் மோதலால் பிறிதொரு தொகுப்புக் கருத்து உருவாகும் என்ற கூற்று, உண்மை யல்ல. உள்ளதை உள்ளபடி அறிந்து கொள்வதால் தான் ஒன்றைப் பற்றிப் புரிந்து கொள்ள முடியுமே தவிர, எதிர்மறைகளை மோத விடுவதால், குழப்பம் தான் அதிகரிக்கும். ஆக, தப்பித்து ஓடாமல், எதிர்த்து நிற்காமல், பயத்தை நான் உற்று நோக்க முடியுமா? பயத்தைக் கவனிக்கப் போகும் இந்த நபர் யார்? 'எனக்குப் பயமாய் இருக்கிறது' என்று சொல்லும்போது 'எனக்கு , நான்' என்பது என்ன? 'பயம்' என்பது என்ன? இரண்டும் வெவ்வேறான நிலைப்பாடுகளா? வெவ்வேறான செயல்பாடுகளா? 'எனக்கு' ஏற்பட்டுள்ள பயத்திலிருந்து நான் வேறா? 'நான்' என்பது பயத்திலிருந்து வேறுபட்டது

என்றால், பயத்தை கையாள என்னால் அப்போது முடிய வேண்டும்; அப்போது பயத்தை மாற்ற முடியும்; அப்போது பயத்தை எதிர்த்து பயம் வராமல் தடுக்க முடியும்; அப்போது அதை ஒதுக்கித் தள்ள முடியும். ஆனால், நான் பயத்திலிருந்து வேறாக இல்லாதிருந்தால், முற்றிலும் வேறுபட்ட செயல்பாடு சாத்தியமாகு மல்லவா?

இதைப் புரிந்துகொள்வது உங்களுக்கு மிகவும் சிரமமாகவுள்ளதா? இருந்தாலும், தயவுசெய்து, இதைப் பற்றி ஆராய்வோம். சற்றே இதைக் கேளுங்கள். விவாதிக்க முற்பட வேண்டாம். கேட்பதால், நான் என்ன சொல்ல வருகிறேன் என்பதை உங்களால் புரிந்து கொள்ள முடியும்.

பயத்தை நான் எதிர்த்துக் கொண்டிருக்கும்வரை, சச்சரவுகள் மேலும் அதிகரிக்கும், இன்னல்கள் மேலும் கூடுமே தவிர, பயத்திலிருந்து விடுதலை கிடைக்காது. நான் எதிர்ப்பு தெரிவிக்காமல் இருக்கும்போது, அங்கு பயம் மட்டுமே இருக்கிறது. அப்போது, ''நான் பயப்படுகிறேன்'' என்று சொல்லும் 'நான்', அதாவது, பார்வையாளராக இருக்கும் 'நான்', பயத்திலிருந்து வேறுபட்டவரா? 'நான் பயப்படுகிறேன்' என்பதில் இருக்கும் 'நான்' யார்? நான் 'பயம்' என்று அழைக்கும் அந்த உணர்வின் கலவையாகத்தான் இருக்கிறேன், இல்லையா? 'நான்' என்பதும் பயவுணர்வும் ஒன்று தான், உண்டா, இல்லையா? பயம் இல்லை என்றால் 'நான், எனக்கு' என்பதும் இருப்பதில்லை. ஆக, பயமும் நானும் ஒன்றே. பயத்தை விடுத்து 'நான்' இல்லை. அதனால் பயம்தான் நான். ஆக, பயம் ஒன்று மட்டும் தானிருக்கிறது.

பயம் என்பது வெறும் வார்த்தையா என்பதைப் பற்றி விசாரணை செய்வோம். பயத்துடன் தொடர்பே இல்லாமல், மனம், தனித்திருந்தா, பயம் என்ற ஒரு சொல்லை, ஒரு கருத்தை, சின்னத்தை, நிலையை உருவாக்குகிறது? தயவுசெய்து கவனியுங்கள். பயம் என்ற உணர்ச்சியுடன் பயமாகவே 'நான்' இருக்கிறேன். 'எனக்குப் பயமாகவுள்ளது' என்னும்போது 'எனக்கு' என்பதோடு தொடர்பில்லாத 'நான்' இல்லை. 'நான் பேராசைக்காரன்' என்று ஒருவர் சொல்கிறார். 'நான்' என்பது அதிகாரம்; பேராசை என்ற குணமாகவே 'நான்' உள்ளது. குணம், 'நான்' என்பதிலிருந்து வேறுபட்டதல்ல. ''நான் பேராசையிலிருந்து விடுபட வேண்டும்'' என்று சொல்லும் ''நான்'', பேராசையிலிருந்து விடுதலை பெற முயற்சிக்கிறது, போராடுகிறது. ஆனால், அவ்வாறு போராடும் 'நான்', பேராசையுடன் இருக்கிறது. ஏனென்றால், பேராசையில்லாமல் இருக்க வேண்டும் என்று விரும்புவது தற்சமயம் பேராசையோடு இருப்பதால்தானே. அதுபோலவே ''நான் பயப்படக்கூடாது'' என்று விரும்பும் ''நான்'', அத்தகைய விருப்பத்தின் விளைவாக ஒரு எதிர்ப்பு சக்தியை உண்டாக்குகிறது. அதனால் குழப்பங்கள் ஏற்படுகின்றன. முடிவில் பயத்திலிருந்து விடுதலை கிடைக்காமலே போய் விடுகிறது. ஆகவே, ''பயமும் நானும் வேறல்ல; பயம் நானே; இந்த விஷயத்தில் என்னால் எதுவும் செய்ய முடியாது'' என்பதைப் புரிந்துகொண்டுவிட்டால், பயத்திலிருந்து விடுதலை கிடைக்கும். அதுவே, ''எனக்குப் பயமாய் இருக்கிறது. இது விஷயமாக நான் ஏதாவது செய்ய வேண்டும்'' என்ற நிலையைப் பாருங்கள். பயத்தை நீக்க செய்யப்படும் எதிர்வினை முயற்சிகள் எல்லாம் சச்சரவுகளை அதிகரிக்கின்றன. பயம் என்பது நானே என்று புரிந்து கொண்ட நிலையில் 'நான்' பயத்தை நீக்க செயலில் இறங்குவதில்லை. அவ்வாறிருந்தால் மட்டுமே பயத்திலிருந்து விடுதலை கிட்டும்.

நம் ஆசைகள், உணர்ச்சிகள் எல்லாம் நம்மிலிருந்து வேறுபட்டவை என்ற கருத்தோடு, நம் பாலுணர்வின் மீது, வேட்கைகளின்மீது, பயத்தின்மீது, நடவடிக்கை எடுக்கப் பழக்கப்பட்டவர்களாக இருக்கிறோம். ஆசைகளை, உணர்வுகளை, என்னிலிருந்து வேறுபட்டதாக நான் கருதும்வரை, சச்சரவுகள்தான் தோன்றும். 'நான், எனது' என்பதில்லாமல் ஆசைகள் இல்லை. நானே தான் ஆசைகள்; இரண்டும் வெவ்வேறானவை இல்லை. தயவுசெய்து, இதைக் கவனியுங்கள். பயம் எனக்குத்தான், பேராசை எனக்குத்தான், 'எனக்கு, நான்' என்பதிலிருந்து அவை வேறுபட்டவையில்லை என்பதை உணர்ந்து கொள்வது மிகவும் உன்னத அனுபவமாகும்.

எண்ணுபவர் இல்லாமல், எண்ணங்கள் இல்லை. எண்ணுபவர், எண்ணங்களிலிருந்து வேறுபட்டவர் அல்ல. ஆனால், எண்ணங்கள், 'எண்ணுபவர்' என்று தனிப்பட்ட ஒன்றை உருவாக்கி, அதைத் தள்ளி நிற்க வைத்து விடுகிறது. எண்ணங்கள், என்றும் நிலைத்திருக்கும் நிரந்தரத் தன்மையைத் தேடும் குணமுடையதாக இருப்பதால், 'நான்' / 'எண்ணுபவர்' என்று ஒரு நிரந்தரத் தன்மையுடையதை உருவாக்கி, 'நான்' எண்ணங்களைக் கட்டுப்படுத்துவதாக அமைக்கிறது. எண்ணங்கள் இல்லாத இடத்தில் 'நான்' என்பதும் இல்லை; மனதில் எண்ணவோட்டம் இல்லாத போதும், மனம், அங்கீகாரம் அளிக்காத போதும், தராதரம் பார்க்காதபோதும், 'நான்' என்ற தனித்துவம் இருப்பதில்லை, அல்லவா? எண்ணங்கள் தோன்றும் வழிமுறையே 'நான்' என்பதையும் தோற்றுவிக்கிறது; எண்ணம் தோற்றுவித்த 'நான்', எண்ணங்களின் மீது இயங்குகிறது. எண்ணத்தினால் தோன்றிய நான்', 'எண்ணத்தை அடக்க நினைக்கும் 'நான்' என்று முடிவேயில்லாமல் போராட்டம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

பயம் என்பது 'எனக்கு' தான்; 'நான் எனக்கு' லிருந்து வேறுபட்டு நிற்கும் பயம் எதுவுமில்லை; பயம் என்பது நானே என்ற உண்மையை அங்கீகரிப்பதால் மட்டுமே, பயத்திலிருந்து முற்றிலுமாக விடுதலை பெற முடியும். பயத்திலிருந்து விடுபட வேண்டும் என்ற நோக்கம் இருந்தால், பயம் என்னிலிருந்து வேறுபட்டதல்ல என்ற உண்மையை அறிந்து கொள்ளவேண்டும். இந்த உண்மையைக் கண்டுகொண்டால், செயல் பிறக்கும். அச்செயல் சத்தியமானது, இயல்பாய் வந்தது. அத்தகைய செயல், தெரிவு செய்யப்பட்டு வருவதல்ல; எதிர் வினைகளால் உண்டாவதல்ல; அறிநிலை மனதால் செய்யப் பட்டதல்ல. அது உண்மையை அறிந்து கொண்டதால் பிறக்கும் இயல்பான செயல்.

**கேள்வி :** எனது வாழ்க்கை, என் கணவரோடும் மற்ற உறவினர்களோடும், சரிகட்டிக் கொண்டு இணங்கிப் போவதாகவே, எப்பொழுதும் இருக்கிறது. நான் சந்தோஷமாக இருப்பதாகவே இத்தனை நாட்களும் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால், உங்கள் சொற் பொழிவைக் கேட்டப் பிறகு, உற்சாகமற்ற என் வாழ்க்கையின் குறைபாடுகள், எனக்கு வெளிப்பட்டது. என்னுடைய அன்றாட வாழ்க்கைக்கு, உங்கள் போதனைகள் ஒளியூட்டவில்லையென்றால், நான் உங்கள் சொற்பொழிவைக் கேட்பதில் என்ன பலன் இருக்கிறது?

**கிருஷ்ணமூர்த்தி :** எல்லாவிதமான பொய்த் தோற்றங்களிலிருந்தும் விடுபட்டு வெளியே வர வேண்டியது அவசியமல்லவா? உண்மையிலேயே ஒருவர் எப்படிப்பட்டவராக இருக்கிறாரென்பதைக் கண்டு பிடிக்க வேண்டாமா? உலக நடவடிக்கைகளைக் கவனிக்க வேண்டாமா? சமத்துவவாதியின் கோணத்தி

லிருந்தோ கம்யூனிஸ்ட் அல்லது மதவாதியின் கோணத்தி லிருந்தோ அவ்விஷயங்களைப் பார்க்கக்கூடாது. உள்ளதை, உள்ளபடி பார்க்க வேண்டும். உள்ளபடி பார்க்கும்போது, அவ்விஷயத்தை உங்களால் எதிர் கொள்ள முடியும். ஆனால், நீங்கள், மாயையில் வாழ்ந்து கொண்டிருந்தால், மாயையின் மூலமாக, அதன் பின்னணியில், பல்வேறு பிரச்சனைகளைப் பார்த்தீர்களே யானால், பிரச்சனை களுக்குத் தீர்வுகாண முடியாது.

ஆகவே, தன்னை உள்ளபடி ஒருவர் அறிந்து கொள்ள வேண்டுமானால், பொய்த் தோற்றங்களை விலக்கி விட வேண்டுமா என்பது கேள்வியாகிறது. உற்சாகமற்ற இருண்ட வாழ்க்கையைப் பற்றி, விழிப்புணர்வு இருக்க வேண்டியது அவசியம் இல்லையா? சந்தோஷம் இல்லாமல், துக்கத்தில் ஒருவரையொருவர் சுயநலத்திற் காகப் பயன்படுத்திக் கொள்கிறோம். நமது நிறைவிற்காக, பிறரை - அது நாடோ அல்லது கட்சியோ அல்லது கருத்தோ - உபயோகப்படுத்திக் கொள்கிறோம். இது தான் நிஜம். நாம் வெற்று மனிதர்கள். உள்ளூர நாம் மிகவும் தனிமையில் இருக்கிறோம்; பயத்தோடு இருக்கிறோம்; பிறரைச் சார்ந்திருக்கிறோம்; கருத்துகளைச் சார்ந்திருக் கிறோம்; அன்பு இல்லாமல் வற்றிப் போயிருக்கிறோம் - இதுதான் நம் உண்மையான நிலை. இந்நிலையை நாம் பார்க்க வேண்டாமா? அதைப் பற்றித் தெரிந்துகொள்ள வேண்டாமா? அதைத் தவிர்த்துவிட முடியுமா? நம் உண்மை நிலையைப் பார்ப்பதைத் தவிர்த்து, திரைப் படங்கள் பார்க்கிறோம், புத்தகங்கள் படிக்கிறோம், பலவிதமான வேலைகளில் ஈடுபடுகிறோம்; ஆனால் நமது செயல் களுக்குப் பின்னால், நாம் உற்சாகமற்ற, சந்தோஷமற்ற, பரிதாபகரமான நிலையில் வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் என்ற உண்மை இருந்து கொண்டேயிருக்கிறது. அந்த உண்மையை நேரில்

எதிர்கொள்ள வேண்டாமா? உண்மையில் நம்மைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டாமா? நம்மைப் பற்றி அறிந்து கொண்டபின், என்ன நிகழ்கிறது? நம்மை மாற்றிக் கொள்ள முயற்சிக்கிறோம். நம்மில் மாற்றத்தைக் கொண்டு வர மனதார முயற்சிக்கிறோம். நான் சொல்வது புரிகிறதா, ஐயா?

நாம் தப்பிக்கும் வழிகள் நிறைந்த உலகில் இருக்கிறோம். பெரும் மாயத் தோற்றம் நிறைந்த உலகில் வாழ்கிறோம். உள்ளதிலிருந்து தப்பித்து ஓடுகிறோம். நிஜத்தை நமக்கு ஒருவர் சுட்டிக் காட்டினால், நமக்குப் பிடிப்பதில்லை. 'உள்ளதைப்' பற்றி எதையாவது செய்ய வேண்டும் என்று முயற்சிக்கிறோம். நம் முயற்சிகள், எதிர்வினை செயல்களாகவும், தப்பித்தல் முயற்சிகளாக வும் மாறி நம்மைக் கஷ்டப்படுத்துகின்றன. நான் தனிமைப்பட்டு இருப்பதாகவோ, சமூக விரோதியாக இருப்பதாகவோ, பேராசைப் பேர்வழியாக இருப்ப தாகவோ, பயந்து நடுங்குவதாகவோ, என்னைப் பற்றி அறிந்து கொண்டால் நான் அதைப்பற்றி என்ன செய்ய வேண்டும் என்பதை எனக்கு யாராவது வந்து சொல்ல வேண்டும் என்று எதிர்பார்க்கிறேன். என் பேராசை குணத்தைப் பற்றி நான் உணர்ந்து கொண்டவுடனே, அதைப் போக்கிக் கொள்ள, எதையாவது செய்ய வேண்டும், பேராசையை தடுத்து நிறுத்த வேண்டும் என்று எண்ணி, செயல்படுகிறேன். செயல்கள் தோற்று விக்கும் எதிர்ப்பு விசை, தப்பித்தல், குழப்பங்கள் என்று சங்கிலித் தொடராக விளைவுகள் தொடருகின்றன. மாறாக, என்னால், பேராசை எனக்கிருப்பதை அறிந்து கொண்டு, அதைப் பற்றிய நுணுக்கங்கள் எல்லாவற்றுட னும் பழக்கம் ஏற்படுத்திக் கொண்டு அதனுடன் கூடி வாழ்ந்தால், பேராசையைத் தாண்டிச் செல்வதற்கு முடியலாம். ஆனால், நான் பேராசை மேல் நடவடிக்கை

எடுக்க விரும்பும்வரை, அந்தப் பிரச்சனையைச் சமாளிக்க என்னால் முடியாது. நான் தனிமையில் வாடுகிறேன், நான் பயப்படுகிறேன். நான் விசனமாயிருக்கிறேன் - இந்த நிலையை, எந்தவிதமான நிர்ப்பந்தமோ, எந்த விதமான வியாக்கியானங்களோ இல்லாமல் என்னால் பார்க்க முடிந்தால், அப்போது ஆழ்மன நிலையில் ஒரு புரட்சி தோன்றுகிறது.

நம் மனம் எப்போதும் தளைபட்டிருப்பதால், நாம் மனதார செய்ய விரும்பும் நமது உணர்வுப்பூர்வமான செயல்கள் அனைத்தும், வரையறைக்குட்பட்டதே. யாருடைய எண்ணம் என்பது கேள்வியல்ல, எல்லா எண்ணங்களுமே கட்டுண்டவை, தளைபட்டவை; சிந்தனை எல்லாம் சவால்களைச் சந்திக்கும் எதிர் வினைகளே; எண்ணங்கள், பலன் தரக்கூடியவை அல்ல; எண்ணங்கள், சுதந்திரத்தைப் பெற்றுத் தராது. எது சுதந்திரத்தைப் பெற்றுத் தரும் என்றால் 'உள்ளது'டன் இருப்பு கொண்டிருக்கும் மனம் மௌனமாக இருந்தால், சுதந்திரம் மலரும். பிரக்ஞையானது, மௌனத்தில் முழுவதுமாக உண்மையுடன் ஒன்றி - அதாவது, தனிமையில் வாடுகிறோம் என்ற உண்மை, பயப்படு கிறோம் என்ற உண்மை, 'நான் வெறுக்கிறேன்' என்ற உண்மை, 'நான் சாதிக்கத் துடிக்கிறேன்' என்ற உண்மை - போன்ற உண்மைகளுடன் ஒன்றி இருந்தால், அங்குச் சுதந்திரம் மலர்கிறது. மனம், உண்மைகளுடன் மௌனத்தில் இருக்கும்போது, அங்கு ஆழ்மனப் புரட்சி இருக்கிறது. புதிய படைப்புகளை வெளிக்கொணர்வதாக அப்புரட்சி உள்ளது. படைப்பாற்றல் கூடிய சமுதா யத்தைச் சமைக்க இத்தகு புரட்சி மிகவும் இன்றியமை யாதது. ஆனால், புரட்சி தோன்றும் கட்டத்திற்கு நாம் வருவதே இல்லை. 'நான் வருத்தமாக இருக்கிறேன்', 'நான் மன உளைச்சலுடன் இருக்கிறேன்', 'நான் சாதிக்க

வேண்டுகிறேன்' - என்பது போன்ற உண்மைகளின் மீது நடவடிக்கை எடுக்கத் தொடங்கி விடுகிறோம். இருக்கும் நிலையின் உண்மையைப் பார்த்தவுடனே, அதை மாற்றம் செய்வதற்கோ அல்லது அதை அடக்கி கட்டுப்படுத்து வதற்கோ அல்லது அதை வடிவமைப்பதற்கோ, மனம் செயல்படத் தொடங்கி விடுகிறது. இதுதான் மனம், இதுதான் அதன் இயல்பு.

பிரக்ஞை, உண்மை நிலையை எதிர்கொள்வ தில்லை. திருத்தியமைக்க நினைக்காமலோ, மாற்றம் செய்ய விரும்பாமலோ, உண்மை நிலையுடன் மனம் ஒன்றியிருப்பதில்லை. உள்ளதை உள்ளபடி பார்ப்பது தான், உண்மையான ஏற்றுக்கொள்ளல். உங்களுக்கு ஒன்றை உறுதிபடக் கூற விரும்புகிறேன் - எந்த விதமான உள்நோக்கமுமில்லாத புரட்சி, உள்ளாழ் மனப்புரட்சி ஒன்றிருக்கிறது. அது ஒன்றுதான், உண்மையான புரட்சி. காரணம், அந்த புரட்சியில்தான் படைப்பாற்றல் உள்ளது. அன்பே, அந்த படைப்பாற்றல்.

**கேள்வி :** உங்கள் சொற்பொழிவைக் கேட்கிறேன். சில சமயங்களில், உங்கள் பேச்சு எனக்குப் புரிவதாக உணர்கிறேன். உங்கள் சொற்களை, வேறொருவர் சொல்கிறார். ஆனால், அங்குப் புரிதல் இல்லை. புரிந்து கொள்ளப்பட்டது என்ன?

**கிருஷ்ணமூர்த்தி :** 'புரிந்து கொள்ளுதல்' என்று நீங்கள் எந்த அர்த்தத்தில் குறிப்பிடுகிறீர்கள்? நீங்கள் எப்பொழுது புரிந்து கொள்ளுகிறீர்கள்? ''நான் உங்களைப் புரிந்து கொண்டேன்'' என்று நான் சொன்னால், அதை நான் எந்த அர்த்தத்தில் சொல்கிறேன்? வெறுமனே வார்த்தைகளை மட்டும் நான் கேட்கிறேனா அல்லது ஆழமான செயல்முறை ஒன்று, அங்குச் செயல் பட்டுக் கொண்டிருக்கிறதா? 'புரிந்துகொள்ளுதல்',

வார்த்தை அளவோடு நின்றுவிடுகிறதா? அதாவது, நான் உங்கள் பேச்சைக் கேட்கிறேன், அதை எனக்குத் தெரிந்தவாறு மொழிபெயர்ப்பு செய்கிறேன் - ''எனக்குப் புரிந்து விட்டது'' என்று சொல்கிறேன். இதையா புரிந்து கொள்வது என்ற அர்த்தத்தில் நாம் அழைக்கிறோம்? அல்லது புரிந்துகொள்வது என்பது முற்றிலும் வித்தியாச மானதா? நீங்கள் சொல்லும் வார்த்தைகளைக் கேட்பது மட்டும் புரிந்துகொள்ளுதல் ஆகாது. உங்கள் பேச்சி லிருக்கும் உண்மையை அல்லது பொய்மையைப் புரிந்து கொள்வதுதான் உண்மையில் புரிந்துகொள்வதாகும்.

எது புரிந்து கொள்கிறது? புரிந்து கொள்வது என்பது மனதின் நிலைப்பாடா அல்லது ஒருவருடைய பேச்சிற்கு, மற்றவரின் பதிலாக அமையும் மனதின் எதிர் வினையா? தயவுசெய்து, இதைக் கவனியுங்கள். ஏனென்றால், மேற்சொல்லப்பட்ட கேள்விகளுக்கு விடை கண்டுபிடித்து விட்டோமானால்,'புரிந்து கொள்வது' என்பதற்கான திறவுகோலை நாம் பெறமுடியும். நாம் ஒன்றைக் கேட்டுக் கொண்டிருக்கும்போது, அதற்கான விளக்கங்கள் நம் மனதில் ஓடிக் கொண்டிருந்தால், உண்மையில் நாம் சொல்லப்படுவதைக் கேட்கிறோமா? நீங்கள் சொல்வதை எனக்குத் தெரிந்தவாறு நான் மொழி பெயர்த்துக் கொண்டிருந்தால், நீங்கள் சொல்வது உண்மை யில் எனக்குப் புரியுமா? உதாரணத்திற்கு, 'நல்லவனாய் இரு'' என்று நீங்கள் என்னிடம் சொன்னால், அது எத்தகைய பாதிப்பை என்னிடம் ஏற்படுத்தும்? நீங்கள் 'நல்லவனாய் இரு' என்று சொல்லும்போது, எவ்விதமான ஒளிவு மறைவும் இல்லாமல் உண்மையான நோக்கத் துடன்தான் சொல்கிறீர்களா? அல்லது, உண்மையில் சொல்ல நினைக்கும் பிறவற்றை அடக்கிக்கொண்டு, இதை மட்டும் சொல்கிறீர்களா? ''நானிருக்கும் சூழ்நிலையில் எப்படி நல்லவனாய் இருப்பது?''

என்றெல்லாம் எண்ணாமல், மொழிபெயர்ப்பு செய்யாமல், அந்த வார்த்தைகளைக் கேட்பதற்கு என்னால் முடியுமா? தடைச் சுவர்கள் இல்லாமல் உங்கள் பேச்சை என்னால் கேட்க முடியுமா? தடைகள் போடாமல், உற்றுக் கேட்டால் மட்டும்தானே, புரிந்து கொள்ள முடியும்?

புரிந்து கொள்ளுதல் என்பது முயற்சிகளின் பலனாய் வருவதில்லை, அல்லவா? நான் சொல்வதைப் புரிந்து கொள்ள, நீங்கள் முயற்சி எடுத்துக் கொண்டால், உங்கள் விஷய ஞானம் எல்லாம் அந்த முயற்சிக்கு உறு துணையாக உள்ளது; நீங்கள் முன்பே படித்ததுடன் பேசப் படுவதை ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டு இருப்பதால், பேசப்படுவதைக் கவனிக்கத் தவறுகிறீர்கள். எந்தவித மான நிர்ப்பந்தமும் இல்லாமல், மொழிபெயர்ப்பும் செய்யாமல், வியாக்கியானங்களும் இல்லாமல், பேசப்படு வதைக் கேட்டால், அந்த வார்த்தைகளை, எண்ணங்களை, உணர்ச்சிகளை, சொல்லப்படுபவைகளை, எவை குறிப்பாக உணர்த்தப்படுகிறதோ அவைகளை, உங்கள் சிந்தனையில் நீங்கள் ஆழமாக ஊடுருவ அனுமதிக்கி றீர்கள் என்றாகிறது. முயற்சி எதுவும் எடுத்துக் கொள்ளாமல், சொல்லப்படுபவைகளை, வியாக்யானம், மொழிபெயர்ப்பு செய்யாமல், நிர்ப்பந்தம் எதுவு மில்லாமல் கேட்டால், நான் காண்பதையே நீங்களும் காண்பதாக இருக்கும் ஒரு நேரடித் தொடர்பு ஏற்படும் அல்லவா? அவ்வகையான 'புரிந்து கொள்ளுதல்' என்பது மின்னலாக வெளிப்படும் சத்தியத்தின் ஒளியாகும். அதை 'நீங்கள் புரிந்து கொண்டது' அல்லது 'நான் புரிந்து கொண்டது' என்று வகைப்படுத்த முடியாது. அது உண்மையின் வெளிப்பாடு. ஆகவே, புரிந்து கொள்ளுதல் என்பது தனிப்பட்டவருக்குரியதல்ல. அது உங்க ளுடையதோ என்னுடையதோ அல்ல. உண்மையை

பெற்றுக் கொள்ளும் ஆற்றல் கொண்ட மனதின் நிலையே 'புரிதல்' ஆகும். அதிகாரம், மரபு ஆகிய வற்றால் தளைபடுத்தப்பட்ட மனதிற்கு உண்மையைப் பெற்றுக் கொள்ளும் ஆற்றல் கிடையாது; தளைபட்ட மனம், கேட்கும் விஷயத்தைப் பகவத் கீதையுடனும் பைபிளினுடனும் மற்றும் அதனுடனும் இதனுடனும் ஒப்பிட்டுப் பார்க்கும். ஆக, புரிதல் என்ற நிலையில், மனம், ஒப்பிட்டுப் பார்ப்பதில்லை, அதிகாரத்திற்குக் கட்டுப்படுவதில்லை; அது தெரிவினால் பெற்றதாக இல்லாமல், புரிதலினால் ஏற்பட்ட விழிப்பு நிலையாக இருப்பதால் விளக்கங்கள் எதுவுமில்லாமல் நடுநிலையாளர் உதவியில்லாமல், மனம், உண்மையை நேரடியாகக் காண்கிறது. நீங்களும் நானும் அப்படிப்பட்ட விழிப்பு நிலையில் இருந்தால், உண்மை என்ன என்பதை நாம் உடனடியாகக் கண்டு கொள்கிறோம்.

ஆனால், நம் விஷய ஞானம், நம் அனுபவங்கள், அதிகாரங்கள், நிர்ப்பந்தங்கள், அன்றாட வாழ்வின் பல தரப்பட்ட நடவடிக்கைகள், உண்மையை நேரடியாக நாம் உணர்ந்துகொள்வதைத் தடுக்கின்றன. உங்கள் மனம், அதிகாரங்களினாலும், விஷய ஞானத்தாலும், அனுபவங் களாலும் முடமாக்கப்பட்டுள்ளது. ஆகவே, எவ்வளவு தான் நீங்கள் என் பேச்சினைக் கேட்டாலும், உங்களால் நேரடியாக விஷயங்களைப் பார்க்க முடிவதில்லை. புரிதல், கட்டாயத்தாலோ நிர்ப்பந்தத்தாலோ வருவ தில்லை. மனம், உண்மையிலேயே மௌனமாக இருக்கும்போது மட்டுமே, புரிதல் சாத்தியமாகிறது. மனம், மௌனத்திலும் அமைதியிலும் இருக்கும்போது, புரிந்து கொள்ளுதலை வரவேற்று வாங்கிக் கொள்கிறது. புரிதலை சேகரித்து வைத்துக் கொள்ள முடியாது - அது சேமிக்கப்பட்ட குவியல் அல்ல. புரிதல், திடீரென வரும் ஒளிக்கீற்றாய், ஒளித்தொடராய், சில சமயத்தில் நீண்ட

ஒளித் தொடராய் தோன்றுகிறது. இதிலிருந்து, மனம், அசாதாரண அமைதியில், தெரிவு செய்யாத கவனத்துடன் இருந்தால் மட்டுமே உண்மையைப் புரிந்துகொள்ள முடியும் என்பது தெளிவாகிறது. ஆனால், தளை படுத்தப்பட்ட மனம், ஒழுங்குமுறைபடுத்தப்பட்ட மனம், நிர்ப்பந்தங்களால் பிணைக்கப்பட்ட மனம், உண்மையுடன் நேரடி தொடர்பு கொண்ட அனுபவத்தைப் பெற இயலாது. அத்தகைய மனதால் புரிந்து கொள்ளவும் முடியாது. ஒவ்வொரு கணமும் உண்மையை உணரும் அனுபவமே, படைப்பாற்றலை வெளிக்கொணர முடியும்.

**கேள்வி :** உள்ளாழ் மனப்புரட்சி பற்றி நீங்கள் பேசுகிறீர்கள். உள்ளாழ் மனதைப் பற்றி, எண்ணங்கள் அறிய முடியாது. எண்ணத்தின் துணையில்லாமல், என்னால் எப்படி உள்ளாழ் மனதில் புரட்சி ஏற்பட் டுள்ளதா என்பதை அறிந்து கொள்ள முடியும்? எங்களை வசியம் செய்து, அத்தகைய புரட்சி தோன்றுவதாக எங்களைக் கற்பனை செய்ய வைப்பதற்காக, அம்மாதிரி யான வார்த்தைகளை உபயோகிக்கிறீர்களா?

**கிருஷ்ணமூர்த்தி :** உள்ளாழ் மனமும் பிரக்ஞை தானல்லவா? பிரக்ஞை நிலையில் போராட்டங்கள் அதிகமென்று உங்களுக்குத் தெரியும். வாழ்க்கையில் உரசல்கள் ஏற்படும்போது மட்டும்தான் பிரக்ஞை நிலையில் விழிப்புடனிருக்கிறோம். சவால்கள் எதிர்ப் படும்போதும், துன்பத்தில் துவளும்போதும் மனதார ஒன்றைச் செய்ய வேண்டுமென்றோ, செய்ய வேண்டா மென்றோ, முயற்சிகள் எடுக்கும்போதும், பிரக்ஞை நிலை விழிப்புடன் இருக்கிறோம். மனதார எடுக்கும் முயற்சிகளின் பின்னணியில், பலதரப்பட்ட உள் நோக்கங்கள் ஒளிந்திருக்கிறதல்லவா? நான் சுவீகரித் துள்ள தொன்றுதொட்டு வந்த மரபுகள், வேட்கைகள்,

நிர்ப்பந்தங்கள் ஆகியவையும் என் முயற்சியின் பின்னணியில் உள்ளன.

பிரக்ஞை நிலை மற்றும் உள்ளாழ் மனம் என்று நான் இரண்டுமாக இருக்கிறேன். அவை இரண்டுமே எண்ணத்தின் செய்முறைதானே? நான் சடங்குகள், பூஜைகள் செய்கிறேன் என்று வைத்துக் கொள்வோம்; நான் வளர்ந்த பாரம்பரிய மரபின் விளைவாக, நான் செய்யும் செயல்தான் பூஜை, சடங்கு எல்லாம்; பயத்தின் அடிப்படையிலும், மனவமைதி, நம்பிக்கை, பரிசு இவைகளை அடைய வேண்டும் என்ற ஆசைகளின் அடிப்படையிலும், பாரம்பரிய மரபு அமைந்திருக்கிறது; மேற்கூறப்பட்ட ஆழ் மனதிலிருக்கும் உள்நோக்கங்கள் தான் என்னைச் செயல்பட வைக்கிறது. பிரக்ஞையின் செய்முறை முழுமையுமே, எண்ணத்தின் விளைவாக வந்ததுதானே? நீங்கள் செயல்படும்போது, செயலின் உள்நோக்கத்தைப் பற்றி எண்ணியிருக்க மாட்டீர்கள்; உள்ளாழ் மனமும் இதைப் பற்றி எண்ணியிருக்காது. ஆனால், மொத்தத்தில் செயல்பட்டது எண்ணத்தின் செய்முறையால் தானே? பூஜைகளைப் பற்றி நானே சிந்தித்து, திட்டமிட்டிருக்கமாட்டேன். வேறொருவர் திட்டமிட்டிருக்கலாம். அதை நான் பழக்கிக் கொண்டு விட்டேன். இவ்வாறு ஆழ்மனதில், நான் தளைபடு கிறேன். நான் முதலாளித்துவத்திலோ, கம்யூனிஸத் திலோ, சோஷலிஸத்திலோ, ஏதோ ஒரு கொள்கை வழியில், வளர்கிறேன். அந்தக் கொள்கை முறைப்படி, செயல்படுகிறேன்; அந்த கொள்கைப்படி நடந்து கொள்கிறேன். ஆழ்மனதிலிருக்கும் உள்நோக்கங்கள், எனது சிந்தனையின் விளைவாகவோ அல்லது அடுத்த வரின் சிந்தனையின் விளைவாகவோ, சமூகம் அல்லது சூழ்நிலையின் விளைவாகவோ தோன்றுகின்றன.

சிந்தனையால் ஒரு புரட்சியைக் கொணர முடியுமா? தயவுசெய்து கவனித்துப் பாருங்கள். தளைபட்டதாக, கட்டுப்படுத்தப்பட்டதாகவே, சிந்தனை இருக்கிறது. இவ்வாறிருக்கும் நிலையில், சிந்தனையால், புரட்சிகரமான அடிப்படை மாற்றத்தை ஏற்படுத்த முடியுமா? அடிப்படை மாற்றம் தோன்ற வேண்டியது மிகவும் அவசியமாக இருக்கிறது. பொருளாதாரப் புரட்சி மட்டுமோ அல்லது மற்ற பகுதிகளில் ஏற்படும் பகுதி மாற்றங்களோ, பலன் அளிப்பதில்லை; பரிபூரண அடிப்படை மாற்றமே தேவைப்படுகிறது. அத்தகைய புரட்சியை, சிந்தனையால் கொண்டு வரமுடியுமா? எண்ணங்கள், பிரக்ஞை நிலை, ஆழ்மனநிலை இரண்டிலும் இயங்கும் ஒன்றுப்பட்ட செய்முறையாகவே உள்ளது. ஆழ்மனம், மூடப்பட்டு, வெளிப்படாமல் இருக்கலாம்; நான் அதனுடன் பகிர்ந்து கொள்ளாமலிருக்கலாம். ஆனாலும், அது, என்னுள் இருக்கிறது. என் முப்பாட்டனார்களின் சிந்தனை, புனித நூல்களின் கருத்து, என் விஷய ஞானம், என் அனுபவம் ஆகியவைகளின் விளைவாகவே 'எனது, நான்' என்ற உணர்வு, பிரக்ஞை நிலையிலும் ஆழ்மன நிலையிலும், உள்ளது; அது, எண்ணங்களின் விளைபொருளாக இருக்கிறது. ஆக, எண்ணங்களின் செய்முறையை கவனித்துப் புரிந்து கொண்டால், எண்ணங்கள் ஒருவரைக் கட்டுப்படுத்துபவையாக இருப்பதைக் காணலாம். கட்டுண்ட எண்ணங்களால், அடிப்படை மாற்றத்தைக் கொண்டு வர எப்படி முடியும்? ஆனால், எண்ணங்களுக்கெல்லாம் அப்பால் பிரக்ஞை நிலையைத் தாண்டி, அடிப்படை புரட்சி ஒன்று இருக்கிறது.

அன்பு என்பது, வளர்த்துக் கொள்ளப்பட வேண்டிய ஒன்றா? நான் அன்பு காட்டும்போது, 'அன்பு காட்டுகிறேன்' என்று எண்ணிக் கொண்டா அன்பு செலுத்து

கிறேன்? அன்பு என்பது உணர்வுப்பூர்வமானதா? நான் உன்னை நேசிக்கிறேன் என்று உணர்ந்தால், அது அன்பு இல்லை, வெறும் மனக்கிளர்ச்சிதான், அல்லவா? நான் அடக்கமானவன், நான் கருணைமிக்கவன் என்று நான் உணர முடிந்தால், என்னிடமிருப்பது அடக்கமா, கருணையா? அன்பு, கருணை என்னிடம் தோன்றும் போது, அதைப்பற்றிய பிரக்ஞை, எனக்கு இருப்ப தில்லை; அதைப் பற்றிய எண்ணங்கள் தோன்றுவ தில்லை.

நான் எடுத்துரைத்துக் கொண்டிருக்கும் அடிப்படை மாற்றம், எண்ணங்கள் முடிவிற்கு வந்தால் தான் ஏற்படக் கூடும். தளைபட்ட நிலையில் இருப்பதால், எண்ணங்கள், சுதந்திரமானவைகளாக இல்லை; ஒரு கருத்துக்கு எதிர் வினையாகக் கூறப்படும் எண்ணமும் வரையறைக்குட் பட்டதே. ஆகவே, எண்ணங்கள் முடிவிற்கு வந்தால்தான் புரட்சி தோன்றும். ஏதோ வினோதமான யோசனை இது என்று நான் சொல்வதை ஒதுக்கித் தள்ளி விடாதீர்கள். ஐயா! இது பற்றி விசாரணை செய்யுங்கள், கண்டு பிடியுங்கள், உணர்ந்து கொள்ளுங்கள். கம்யூனிஸம், சோஷலிஸம், கத்தோலிகம், மதகுரு என்று சிந்தனை களின் எந்த முறையை எடுத்துக் கொண்டாலும், அது தளைபடுத்தப்பட்டதாகவே இருப்பதைக் காணலாம். தளைபடுத்தப்பட்ட நிலையிலிருந்துகொண்டு செய்யப் படும் செயல்கள், மேலும் பிரச்சனைகளைக் கொண்டு வந்து குவிக்கும். சுதந்திரமற்ற சிந்தனையில் பிறக்கும் செயல்களில், புதிய சிருஷ்டி இருப்பதில்லை, உண்மை பிறப்பதில்லை. மனம், மௌனத்தில் இருக்கும்போது தான், படைப்பாற்றல் வெளிப்படும், உண்மை மலரும். மோனத்தை, முயற்சிகளால் வளர்த்துக் கொள்ள முடியாது. ஏனென்றால், தளைபட்ட எண்ணங்களால், விருப்பங்களால், பலனை எதிர்பார்க்கும் ஆசையால்

உருவானதாக, என் முயற்சி இருப்பதால், மோனம் கிட்டாது. பலனை எதிர்ப்பார்த்து செயல்படும் மனம், புரட்சிகரமானதல்ல. அத்தகைய மனதால் பரிபூரண புரட்சியைக் கொண்டு வரமுடியாது.

ஆக, மௌனமாக இருக்கும் மனதினால் மட்டுமே உண்மையைப் பெற்றுக் கொள்ள முடியும். உண்மை என்றால் அசாதாரணமான ஒன்று என்ற பொருளில் சொல்லவில்லை. ஒருவர் பார்க்கும் பொருளில் பொதிந்திருக்கும் உண்மை, கேட்கும் விஷயத்திலிருக்கும் உண்மை, எண்ணத்திலிருக்கும் உண்மை, உணர்ச்சிகளிலிருக்கும் உண்மை என்று, ஒவ்வொருக் கணமும், உண்மை என்றால் என்ன என்பதையறிந்து அதைப் பெற்றுக்கொள்ள, மனம், மௌனத்தில் ஆழ்ந்திருக்க வேண்டும். நிர்ப்பந்தங்கள் எதுவும் இல்லாமல், எவ்விதமான தூண்டுதலும் இல்லாமல் தோன்றிய மோனத்தில் மனம் இருக்கும்போது மட்டும்தான் புரட்சி மலருகிறது. சொல்லப்படுவதை கவனத்துடன் கேட்கும் போது, எண்ணத்தில் மாற்றம் ஏற்படுகிறது. அந்த மாற்றம், கேட்ட விஷயத்திலிருக்கும் உண்மையை அறிந்து கொண்டதால் உண்டானதே தவிர, எவ்விதமான பயிற்சி முறைகளாலும் உண்டாகக் கூடியதல்ல. என்னுடன் விவாதிக்க முற்பட்டீர்களானால், உங்களால், பேசப்படுவதைக் கவனிக்க இயலாது. இப்படிச் சொல்வதால், நான் உங்களை வசியம் செய்ய முற்படுகிறேன் என்று அர்த்தமில்லை. நாளேடுகளாலும் அரசியல்வாதிகளாலும், சமூக நலத் தொண்டர்களாலும், உங்கள் மதத்தாலும், பகவத் கீதையாலும், பைபிளாலும், அதிகார வர்க்கத்தினராலும், கட்டளைக்குப் பயந்து செய்யும் செயல்களாலும், இலக்கினை அடைய மேற் கொள்ளும் செயல்களாலும், நீங்கள், நாள்தோறும் வசியம் செய்யப்பட்டுதான் வாழ்கிறீர்கள். மேற்கூறியவைகள் எல்லாம் உங்களை மயக்க, வசியம் செய்ய எடுக்கப்படும்

வழிமுறைகள் தானே? பிரச்சாரங்களின் மொத்த செய்முறையும் வசியம் செய்வதற்கான வழியாகவே உள்ளது. நீங்கள் அதில் சிக்கிக் கொண்டு இருக்கிறீர்கள்.

நான் முற்றிலும் வேறுபட்ட விஷயத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறேன். இவை இரண்டும் ஒன்றிற் கொன்று இணக்கமானதல்ல; அவை இரண்டு வேறுபட்ட உலகத்தைச் சார்ந்தவை. நான் சொல்வது என்ன வென்றால் : நாம் கவனத்துடன் செவிமடுத்தால், சொல்லப்படுவதில் பொதிந்துள்ள உண்மையை உணர்கிறோம். அதனால், புதிய சிந்தனை, புதிய செயல் முறைகளை, நமக்குள், உண்மை தோற்றுவிக்கிறது. இவ்வகையான, புதிய படைப்பாற்றல் இல்லாது போனால், நாம் முற்றிலும் ஒழுங்கற்ற முறையில் செயல்பட்டு அழிவுகளைத் தோற்றுவிக்கிறோம். நம் நோக்கம், எவ்வளவுதான் சிறப்பானதாக இருந்தாலும், நம் செயல்கள், துன்பத்தை விளைவிக்கின்றன, விஷமத் தனமானதாய் இருக்கின்றன. உண்மையை உணர்வதால் தோன்றும் புதிய சிருஷ்டி, அன்பு ஆகும். அன்பு இல்லாத இடத்தில், புரட்சி தோன்றாது. அன்பு என்பது முயற்சி செய்து பெறுவதல்ல. எண்ணங்களுக்கு அப்பாற்பட்டது அன்பு. மனம் முற்றிலும் அடங்கி, அமைதியாக மோனத்திலிருக்கும்போது மட்டுமே, அன்பைப் புரிந்து கொள்ள முடியும்; அன்பை உணர முடியும்; அன்பை அறிந்து கொண்டு அனுபவிக்க முடியும். அமைதியி லிருக்கும் மனம், அன்பை உணர்ந்து கொள்ளும்போது மட்டுமே, உலகில் அடிப்படை மாற்றம், பரிபூரண புரட்சி ஏற்பட வாய்ப்பு இருக்கிறது.

பிப்ரவரி 15, 1953
மும்பை.



# 4

# 'ஆதல்' நிலைப்பாட்டால் அடையும் இன்னல்கள்

கருத்துப் பரிமாற்றம் என்பது, மிகவும் கடினமான விஷயம் என்று நினைக்கிறேன். உங்களுடன் சில கருத்துகளை, பகிர்ந்து கொள்ள விரும்புகிறேன். கருத்துகளைச் சொல்ல வார்த்தைகளை உபயோகிப்பது, சகஜமானதுதான். ஆனால், வார்த்தைகளோ, பல வகைப் பட்ட விதத்தில், பொருள் தருபவையாக இருக்கின்றன. அதனால், எதைச் சொல்ல விரும்புகிறோமோ, அதை, நேரடியாக, எளிமையாகச் சொல்வது மிகவும் சிரமமாக வுள்ளது. சொல்வதைச் சரியான விதத்தில் புரிந்து கொண்டு, ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொள்வதுதான், நமக்கிருக்கும் மிகவும் கஷ்டமான பிரச்சனைகளில் ஒன்றாக எனக்குத் தோன்றுகிறது. அதுவும், நிலைநாட்டப் படாத நுட்பமான (subtle) விஷயங்களைப் பற்றி, பேசி, பரிமாறிக் கொள்ளுதல், மேலும் சிரமமாகவுள்ளது. இத்தகைய விஷயங்களைப் பகிர்ந்து கொள்ள, வாய் மொழி மட்டும் போதாது; வார்த்தைகளுக்கு அப்பால் சென்று ஏற்படுத்திக் கொள்ளும் தொடர்பும் தேவைப் படுகிறது. தன் பிடிக்குள் சிக்காததால், நுட்பமான விஷயங்களை எதிர்த்து, மனம், போராடத் துவங்கி விடுகிறது.

நம்மில் பெரும்பாலோர், நன்கு தீர்மானிக்கப்பட்ட செயல்முறையை மட்டுமே ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறோம். நாம் மிகுந்த குழப்பத்திலிருக்கும்போது, என்ன செய்ய வேண்டும், மற்றும், எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைத் தேர்ந்தெடுக்கப் பார்க்கிறோம். நாம் தேர்ந்தெடுக்கும் செயல்முறை, நமது குழப்பத்தின் விளைவாகவே இருக்கிறது. குழப்பத்தில் நாம் தேர்ந்தெடுக்கும் தலைவரோ, கருத்தோ, ஒழுங்கு முறையோ, மேன்மேலும் குழப்பத்தையும், இன்னல் களையும், துயரத்தையுமே தருபவையாக உள்ளது. வெளிப்படையாகத் தெரியும் இந்த உண்மையை, நம்மில் பலர், கருத்தில் கொள்வதில்லை. செயல்பாட்டு முறையைத் தேர்ந்தெடுப்பதில் மிகவும் தீவிரம் காட்டு கிறோம். ஆனால், என்ன செய்ய வேண்டும் என்பதை விட, எப்படிச் சிந்திக்க வேண்டும் என்று எண்ணிப் பார்ப்பதில் தான், நாம் மிகவும் அக்கறை காட்ட வேண்டும் என்று நான் கருதுகிறேன்.

என்ன செய்ய வேண்டும் என்று கண்டுபிடிப்பதை, வழக்கமாகக் கொண்டவர்கள் நாம். முன்மாதிரி செயல் வீரர்கள், குருமார்களின் போதனைகள், கொள்கைகள், முன் உதாரணங்கள் ஆகியவற்றின் துணைகொண்டு, செயல் திட்டத்தை வகுக்கிறோம். ஆனால், முக்கியமாகக் கவனிக்க வேண்டியது நாம் சிந்திக்கும் முறையைதான். ஏனென்றால், சிந்திக்கும் முறையில் புரட்சி ஏற்பட்டால், புரட்சி, நம் செயலிலும் இருக்கும். எனவே, என்ன செய்ய வேண்டும் என்பதைக் கண்டுபிடிப்பதைக் காட்டிலும், எப்படிச் சிந்திக்க வேண்டும் என்பதைக் கண்டு கொள்வது அவசியமானதல்லவா? செயல்முறை கோட்பாடுகள் ஆகியவற்றால் தளைபடுத்தப்பட்ட அந்தக் கணத்திலேயே, நமது செயல்கள் மேலும் மேலும் சிக்கலாகி, மேலும் மேலும் குழப்பமடைந்து, சங்கடங்

களைத் தந்து, கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டதாகவும், ஒழுங்குமுறை ஒன்றில் அடைக்கப்பட்டதாகவும், வடிவமைக்கப்பட்டதாகவும் ஆகிவிடுகிறது. அந்நிலையில், நம் செயல்களால் குழப்பம் தீர்வதில்லை. ஆகவே, எப்படிச் சிந்திக்க வேண்டும் என்று அறிந்து கொள்வதே அவசியமானதாக நான் கருதுகிறேன். அதனால் நம் எண்ணமுறையில் புரட்சி தோன்றி, ஒரு புதிய வகை வாழ்வுநெறி, ஒரு புதிய வகை செயலாக்கம் தோன்றக் கூடும். 'இருத்தல்' (being) என்ற நிலை, புரட்சியாகும். வேறொன்றாக ஆக வேண்டும் என்ற நிலை, குழப்பமாகும். அதுவாக ஆகவேண்டும் என்ற குறிக்கோள், ஒரு குறிப்பிட்ட சித்தாந்தத்திற்கு ஏற்றபடி, செயல்களைத் திருத்தியமைத்தல், தலைவர் ஒருவரைப் பின்பற்றி நடத்தல், நற்பண்புகளை வளர்த்துக் கொள்ளல், பேராசையிலிருந்து பற்றற்ற நிலைக்கு மாற்றம், சிந்தனையை ஒரு வகையில் நெறிப்படுத்துதல் போன்றவை, விருப்பத்திற்கேற்ப 'ஆதல்' (becoming) என்ற எண்ணத்துடன் மேற்கொள்ளப்படும் செயல்களாகும். ஆனால் மேற்கூறிய செயல்களால், புரட்சிகரமான மாற்றம் எதுவும் ஏற்படுவதில்லை. 'ஆதல்' என்பது ஒரு வகைத் தொடர்ச்சியே; அதில், புரட்சிகரமான மாற்றம் எதுவும் இல்லை; மாற்றம் ஏற்படவும், அதில் வழியில்லை. உள்ளபடி இருத்தலில் தான், புரட்சிகரமான மாற்றம் ஏற்பட சாத்தியம் இருக்கிறது. 'ஆதல்' எப்பொழுதுமே 'நான், எனது' என்ற எண்ணமில்லாத 'இருத்தல்' என்பதைப் புரிந்து கொள்ளாது. 'ஆதல்' 'இருத்தலை' கண்காணிக்கும் போது, அங்கு 'இருத்தல்' இருப்பதில்லை.

தயவு செய்து, இதை வார்த்தைக்கு வார்த்தை பின் தொடர்ந்து வாருங்கள். இதைப் புரிந்துகொள்வது மிகவும் முக்கியம் என கருதுகிறேன். நமது மனம், 'ஆதல்' என்பதற்கும், விஷய அறிவைச் சேகரிப்பதற்கும்,

அனுபவங்களை ஒன்று கூட்டி, அதன் துணைகொண்டு முன்னேறுவதற்கும் பழகிப்போனது. நமது சிந்தனையானது, விஷய ஞானம், அனுபவங்கள், உதாரணங்கள், ஞாபகங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்தது. இவை அனைத்தும், தொடர்ச்சி வழிமுறையில் இயங்குபவை. தொடர்ச்சி வழிமுறைச் செயல்பாட்டில் விளையும் மாற்றம், தொடர்வதில் தோன்றும் திருத்தம் மட்டும் தானே தவிர, அது, பரிபூரண அடிப்படை மாற்றம் இல்லை.

'ஆதல்' எப்பொழுதும் 'உள்ளதை' (what is) தாண்டிச் செல்லும் இயல்பு உடையது. காலம், மனப்பதிவுகள், அனுபவங்கள், எந்நேரமும் நடைப்பெற்றுக் கொண்டிருக்கும் தெரிவு, ஒப்பிடுதல், தராதரம் நிர்ணயித்தல் ஆகியவற்றின் ஒட்டுமொத்த விளைவாக நான் இருக்கிறேன்; நான், காலத்தின் தொடர்ச்சியாக இருக்கிறேன். ஏற்றுக்கொள்வது, மறுதலிப்பது, பின்பற்றுவது, எதிர்ப்பது போன்ற, என் மனதின் இயக்கம் எல்லோமுமே, 'ஆதல்' என்ற சிந்தனை வகைப்பட்டதே. 'நான் இன்று இந்நிலையில் இருக்கிறேன் - நாளை அந்நிலையில் இருப்பேன்' என்று சொல்லும்போது, 'நாளை' என்பது இன்றைய தினத்தின் தொடர்ச்சியாக உள்ளது. ஞாபகங்கள், விஷய சேகரிப்பு ஆகியவற்றில் என் மனம் இந்த முறையில் பழக்கப்பட்டிருக்கிறது. இதைப் புரிந்துகொள்வதில், சிக்கல் ஒன்றும் இல்லை. உங்கள் எண்ணவோட்டத்தைக் கவனியுங்கள்; உங்கள் செயல்பாட்டைக் கண்காணியுங்கள்; உங்கள் விருப்பங்களை எண்ணிப் பாருங்கள். நாம் எப்பொழுதுமே விருப்பப்பட்ட ஒன்றாக 'ஆக வேண்டும்' என்றே முயற்சிகள் செய்து கொண்டிருக்கிறோம். உதாரணத்திற்கு, குமாஸ்தா, நிர்வாகியாக முன்னேற, முயற்சி செய்கிறார்; நிர்வாகி, உயர் அதிகாரியாக முன்னேறத் துடிக்கிறார்,

அரசியல்வாதி, பெருந்தலைவராகிவிட நினைக்கிறார் - இப்படி 'ஆகி விடவேண்டும்' என்ற துடிப்பில் எல்லோருமே தொடர்ந்து இருக்கிறோம். இதனால் மாற்றம் பெற்று விட முடியும் என்று நம்புகிறோம். ஆனால், எது தொடர்ச்சியாகத் தொடருகிறதோ, அதனால் அடிப்படை மாற்றத்தை, அதனுள் கொண்டு வருவது என்பது இயலாத காரியம்.

மேற்கூறிய மனோபாவத்துடன், அத்தகைய இயல்பு கொண்ட மனதுடன், சிந்தனை முறையுடன், நமக்குத் தெரியாதவைகளைப் பற்றி, நாம் எண்ணிப் பார்க்கிறோம். 'இருப்பதைப்' பற்றியும் உண்மையான கடவுளைப் பற்றியும் எண்ணிப் பார்க்கிறோம். 'ஆதல்' என்றுமே 'இருப்பதை'ப் பற்றி ஊகித்துப் பார்க்கும்; 'இருப்பதை' கண்காணித்து, அதை வசப்படுத்திக் கொள்ள முயலும், அதனுடன் சரிகட்டிக் கொண்டுபோக முயற்சிக்கும். ஆகவே, 'ஆதல்' - அதாவது 'நான், எனது' என்ற உணர்வு - 'இருப்பதை' வசப்படுத்திக் கொள்ள முயற்சிக்கும் போது, அங்கு 'இருப்பது' இருப்பதில்லை. எனது மனம், காலத்தின் விளைவாக இருப்பதால், என்னால் 'ஆதல்' அல்லது 'ஆகாதிருத்தல்' என்ற முறையில் மட்டுமே எண்ணிப் பார்க்க முடியும். 'ஆதல்' என்ற செயல்பாட்டு முறை, இயல்பாகவே சச்சரவுகளைத் தோற்றுவிப்பதாக உள்ளது, அபிப்பிராய பேதங்களை உண்டாக்குவதாக வுள்ளது. கருத்துகளை மோதவிட்டு, பலனை அடைந்து விட நினைக்கிறோம். இதுதான், நமது வாழ்க்கை. நாம் ஒரு குறிக்கோளை அடைய, பெரிதும் முயல்கிறோம். பலனை அடைந்துவிட, பல வழிகளில் முயற்சி எடுத்துக் கொள்கிறோம். முயற்சிகள் பல செய்கிறோம், போராடு கிறோம், சிக்கல்களில் மாட்டிக் கொள்கிறோம், பல தரப்பட்ட முறைகளிலிருந்து ஒன்றைத் தேர்ந்தெடுக் கிறோம், 'இப்படியெல்லாம் இருக்க வேண்டும்' என்று

விழைகிறோம், வேறு விதமாக அமைந்து விட்டாலும், அதையும் ஏற்றுக் கொள்கிறோம். இப்படிக் கணக்கி லடங்கா வழிகளில் சென்று, எண்ணத்தை நிறைவேற்ற பாடுபடுகிறோம் - இது தான் நம் வாழ்க்கை. இல்லையா? ஆக, 'ஆதல்' என்ற எண்ணம், தலைவர் வழிபாடு, நற்பண்புகளை வளர்த்துக் கொள்ளல் போன்ற செயல் பாட்டு வழிமுறையைப் பின்பற்றி நடக்க, முயற்சி செய்கிறது. அது 'இருத்தல்' நிலையைப் பெற வேண்டும் என்று சதா முயன்று கொண்டிருக்கிறது. 'இருத்தல் நிலையில் அடிப்படை மாற்றம், புரட்சி உள்ளது. அடிப்படையில் புரட்சிகரமான மாற்றத்தை 'ஆதல்' என்ற நிலைப்பாட்டில் அடைய முடியாது என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். அவ்வாறாயின், மாற்றம் பெற ஒருவர் செய்ய வேண்டியது என்ன என்ற கேள்வி எழுகிறது. புரிகிறதா, ஐயா?

உங்களுக்குச் சில விஷயங்களைச் சொல்ல விரும்பு கிறேன். விஷயங்களை விளக்குவதற்காக, சொற்களை உபயோகிக்கிறேன். என் வாய்மொழியை, உங்கள் தளைபட்ட இயல்பிற்கேற்ப, நீங்கள் மொழி பெயர்க்கப் போகிறீர்கள். ஆக, உண்மையில் நம்மிருவருக்கு மிடையே, கருத்துப் பரிமாற்றம் ஏற்பட வழியில்லை. மிகவும் எளிமையான விஷயமொன்றை உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். அது என்னவென்றால் : 'ஆதல்' நிலைப்பாட்டில் சந்தோஷமில்லை, மாற்றம் ஏது மில்லை, புரட்சியில்லை. 'இருத்தல்' நிலைப் பாட்டில் மட்டுமே பரிபூரண அடிப்படை மாற்றம் ஏற்பட வாய்ப்பு உள்ளது. 'ஆதல்' எப்பொழுதுமே இருத்தலை' புரிந்து கொள்வதில்லை. 'இருத்தலை' புரிந்து கொள்ள 'ஆதல்' மேலும் மேலும் முயற்சி செய்யும்போது 'இருத்தல்' அசைவற்று நின்றுவிடுகிறது. ஆகவே, மனம் தேர்ந் தெடுக்கும் எதுவும் 'ஆதல்' நிலைப்பாட்டில் சிக்கிய

ஒன்றாகவே உள்ளது, எதையாவது செய்து 'இருத்தலை' அடைந்து விடவேண்டும் என்பதாகவே உள்ளது. ஆக, பிரச்சனை என்னவென்று உங்களுக்குப் புரிகிறதா?

நான் பெற்ற கல்வி முறையால், நான் வளர்ந்த விதத்தால், நான் சார்ந்திருக்கும் சமயத்தால் கட்டுப் படுத்தப்பட்டிருக்கும் நான், என் முயற்சிகள் எல்லாம், ஏதோவொன்றாக 'ஆதல்' என்ற இலக்கினை நோக்கி யிருக்கும் பட்சத்தில், 'ஆதல்' நோக்கத்தை என்னால் எப்படி நிறுத்த முடியும்? இந்தக் கேள்வி உங்களுக்குள் எழுந்திருக்குமா என்று எனக்குத் தெரியாது. ஆனால், இப்பொழுது, இந்தப் பிரச்சனையைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்? எப்படி உணருகிறீர்கள்? அனைத்து நீதி நூல்களும், அனைத்து சமயங்களும், அனைத்து குருமார்களும், அனைத்து எண்ண வழிமுறைகளும் சொல்வது, இருக்கும் நிலையிலிருந்து மாற்றம் பெற்று உன்னதமான ஒன்றாக 'ஆக வேண்டும்' என்பதே. நீங்கள், முதலில் நீங்கள் சார்ந்த சமூகத்தின் அங்கமாக, பிறகு தேசத்தின் குடிமகனாக, பிறகு உலகப்பிரஜையாக செயல்பட வேண்டும் என்ற முறையில், அவை போதிக் கின்றன. முதலில் மதலையாய் இருந்து பெரியவனாய் வளர்ந்து முதியவராகி இறப்பதுபோல, படிப்படியாகத் தான் உண்மை என்ற சிகரத்தை எட்ட முடியும் என்று பரிணாம வளர்ச்சித் தத்துவத்தில் நம்பிக்கையுடையவராக இருக்கிறோம். உலகத்தை, படிப்படியாகத் தான் மாற்ற முடியும் என்ற எண்ணப் போக்கிற்கு நம் மனம் கட்டுப்பட்டதாக இருக்கிறது. புரட்சியை உடனே தோற்றுவிக்க முடியாது, அது மெல்ல மெல்ல, காலப் போக்கில் உருவாக வேண்டும். புரட்சியைக் கொண்டு வர, நாமெல்லோரும் நம்மை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும், நாம் அனைவரும் தேர்ந்தெடுக்கப்பட்ட முறையில் கல்வி கற்க வேண்டும், நாம் அனைவரும்

தெரிவு செய்த முறையில் செயலாற்ற வேண்டும் என்பது போன்ற இன்னும் பல கருத்துகளுக்கு நம் மனம் கட்டுப்பட்டதாக இருக்கிறது. இந்த வகை எண்ண வோட்டத்திற்கு, நாம் பழகிப் போனவர்கள். ஆனால், இந்த வழிமுறையில் மாற்றம் எதுவும் ஏற்படாது, அடிப்படைப் புரட்சி தோன்றாது, எந்த வகை மாற்றமும் ஏற்பட வழியில்லை என்று நான் கருதுகிறேன். ஆயினும், புதியதோர் உலகைச் சமைக்க, பரிபூரண அடிப்படை மாற்றம், மிகவும் இன்றியமையாததாய் இருக்கிறது.

பட்டினியில் வாடும் பிச்சைக்காரர்களை வீதிகளில் பார்க்கிறோம். வீதியில் கிடக்கும் குழந்தையைப் பார்க்கிறோம். அந்தக் குழந்தைக்கு அரவணைப்பு தேவை, உணவு தேவை, அன்பு காட்ட உறவு தேவை, அதற்கு விழுமியச் சுதந்திரம் தேவை, பயம் அற்ற வாழ்க்கை நடத்த உதவும் கல்விமுறை பயிற்சி தேவை. இவைகளை தரும் வகையில், உலகத்தால், தன்னை உடனடியாக மாற்றிக் கொள்ள முடியுமா? ஒரு சில நூற்றாண்டுகள் எடுத்துக் கொள்ளாமல், உடனடியாக மாற்றிக் கொள்ள முடியுமா? இந்தப் பிரச்சனை உங்களுடையதும் தானே? குழந்தை, அங்கேப் பசியால் வாடிக் கொண்டிருக்கிறது - நாமோ, புரட்சியின் முடிவில் குழந்தையைப் பசியாற வைக்கும் சமத்துவ கம்யூனிஸ தத்துவம் ஒன்றை கண்டுபிடிக்கிறோம் - இதனிடையில் குழந்தை இறந்து விடுகிறது. ஒரு சித்தாந்தத்தை நடைமுறைக்கு கொண்டு வருவதற்காக மேற்கொள்ளப்படும் பணிகளின்போது, மிகப்பெரிய சிக்கல்களும், அழிவுகளும், இன்னல்களும், பூண்டோடு அழிக்கப்படுதலும், காராக்கிருக சிறைகளும் தோன்றுகின்றன. இவைகள் எல்லாம் 'ஆதல்' என்பதின் செயல்பாட்டு வழிமுறைகள் அல்லவா?

ஆகவே, இந்தப் பிரச்சனைக்கு வேறு விதமான அணுகுமுறை இருக்க வேண்டும். 'ஆக வேண்டும்' என்று விழைபவரால், கண்டுகொள்ள முடியாததும், புரிந்து கொள்ள முடியாததுமான, 'இருத்தல்' நிலையை அடையும் ஆற்றலை, என் மனம் பெறக்கூடுமா? நான் காலத்தின் மற்றும் மனப்பதிவுகளின் விளைபொருளாக இருக்கிறேன், மாற்றம் பெற முயன்று கொண்டிருக் கிறேன், சில கருத்துகளை ஏற்றுக் கொள்கிறேன், சிலவற்றை நிராகரிக்கிறேன். சிந்தனையில், மதிப்பீடு களில், விருப்பங்களில், மற்றும், எல்லாவற்றிலும் அடிப்படைப் புரட்சியைக் என்னால் கொண்டு வருவது எப்படி? அத்தகைய புரட்சியைக் கொண்டு வருவதால், மகிழ்ச்சி என்னுள் மட்டுமின்றி, உலகத்துடன் எனக்கிருக்கும் தொடர்பிலும், மற்றவர்களுடன் எனக்கிருக்கும் தொடர்பிலும் மகிழ்ச்சி இருக்கும். தனிப்பட்ட முறையில் மட்டுமின்றி, சமுதாயத் தொடர்பிலும் மகிழ்ச்சியை அளிக்கும் புரட்சியைக் கொண்டு வருவது எப்படி என்பது நமக்குள்ள பிரச்சனை அல்லவா? நாம் எப்படிச் செயல்பட வேண்டும்? 'ஆதல்' செயல்பாட்டு முறையிலா அல்லது 'இருத்தல்' நிலைப்பாட்டிலா? 'ஆதல்' செயல்முறையில் 'இருத்தல்' இருப்பதில்லை.

நான் முன்பே கூறியதுபோல, தயவுசெய்து மொழி பெயர்ப்பு செய்யாமல் கேளுங்கள், சத்தியமான ஒரு விஷயத்தைக் கேட்பது, மிகவும் முக்கியமானதாகும். ஏனென்றால், உண்மையெனப்படுவது எது என்பதைப் பற்றிக் கேட்பது, அசாதாரணமான தாக்கத்தை, நம் மனதில் தோற்றுவிக்கிறது. செவ்விய முறையில் என் னால் செவிமடுக்கக் கூடுமானால், அழகை விமர்சனங்கள் செய்யாமல் என்னால் பார்க்கக்கூடுமானால், அந்த அழகு, ஒரு அசாதாரணமான விளைவை என்னுள்

ஏற்படுத்துகிறது. வாழ்வின் அழகை மட்டுமின்றி அவலட்சணத்தையும் பார்க்கக்கூடிய நுண்ணுணர்வு எனக்கிருக்குமானால், விமர்ச்சிக்காமல் என்னால் உள்ளதைப் பார்க்கக் கூடுமானால், அக்காட்சிகள், விசேஷமானப் பாதிப்பை விளைவிக்கிறது. அதே போல, மொழிபெயர்ப்பு செய்யாமல், பகவத் கீதையுடனோ வேறெந்த புத்தகத்துடனோ ஒப்பிட்டு பார்க்காமல், குருமார்களின் உபதேசங்களுடன் ஒப்பீடு செய்யாமல், உண்மையான ஒன்றைப் பற்றிப் பேசப்படுவதை என்னால் கேட்க முடியுமானால், அப்படிக் கேட்பதே ஒரு சிறப்பான விளைவை உண்டாக்குகிறது, உள்ளாழ் மனப்புரட்சியைத் தோற்றுவிக்கிறது.

தயவுசெய்து இதை கேளுங்கள், ஐயா! உண்மையான செயல், 'இருத்தல்' நிலைப்பாட்டிலிருந்து மட்டுமே பிறக்கும். அத்தகு செயல்கள், புரட்சியை உண்டாக்கும். ஆக, 'இருத்தல்' மட்டுமே புரட்சிக்கு வித்திடும். ஆனால் மனம் 'ஆதல்' என்ற செயல்பாட்டு வழிமுறையில் முடிவில்லாமல் இயங்கிக் கொண்டிருக்கிறது. இப்படி இயங்கிக் கொண்டிருக்கும்வரை, புரட்சி தோன்ற வழியில்லை, மாற்றம் ஏதும் ஏற்படாது, அன்பும் இருக்காது; இன்னல்கள் அதிகரிக்கும், வெறுப்பு மேலோங்கும், போர்களின் எண்ணிக்கை கூடும். இந்நிலையில், மனம் செய்ய வேண்டியது என்ன? 'இருத்தல்' நிலைக்கு அது தாவி சென்றுவிட முடியாது. மனம் 'ஆதலாகவே' இருக்கும் நிலையில், அதனால் 'இருத்தல்' ஆக முடியாது. அதனால் 'இருத்தலை' தேடிச் செல்லவும் முடியாது. 'இருத்தலை'ப் பற்றிய பிரக்ஞை மனதில் ஏற்பட்ட கணத்திலேயே 'இருத்தல்' இல்லாமல் போய் விடுகிறது. பிரக்ஞை நிலையில் 'இருத்தல்' நிலைப்பாட்டை உணர முயன்றால், அது உயிர்ப்புடைய தாக இருப்பதில்லை, ஜீவனுள்ளதாகச் செயல்படுவ

தில்லை. தனக்குள் மாற்றத்தைத் தன்னாலேயே கொண்டு வர முடியாது என்று உணர்ந்து கொண்ட மனம், இப்போது செய்ய வேண்டியது என்ன? தயவுசெய்து, செவிமடுத்துக் கேளுங்கள் - என் கேள்விக்கு விடையளிக்க வேண்டிய அவசியமில்லை.

மேற்கொள்ளப்பட வேண்டிய நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்; போர்கள் நிறுத்தப்பட வேண்டும்; பசி, பட்டினி இருக்கவே கூடாது; இந்த இலட்சியங்கள் நிறைவேற, புரட்சி ஏற்பட வேண்டியது மிகவும் அவசியம் என்று நாம் நன்றாக உணருகிறோம். ஏற்பட வேண்டிய புரட்சி, குறுகிய நோக்கம் கொண்டதாக, அரைகுறையானதாக, வரம்புக்குட்பட்டதாக இல்லாமல், அடிப்படையான மாற்றத்தைக் கொண்டு வரும் பரிபூரண புரட்சியாக இருக்க வேண்டும். இருக்கும் நிலையை சீர்தூக்கிப் பார்க்கும்போது, இத்தகைய விழுமிய புரட்சியை, நம் மனதினால் கொண்டு வர முடியாது என்று அறிந்து கொள்கிறோம். கம்யூனிஸ்ட்டுகளாலோ, மதத்தலைவர்களாலோ, பரிபூரண மாற்றத்தைக் கொண்டு வர இயலாது; அவர்களால் வாழ்க்கையின் சிறு பகுதியில் மாற்றத்தைக் கொண்டு வரக்கூடும். ஆனால், அந்த மாற்றம், புத்தம் புதியதாய் இல்லாமல், இன்றைய வாழ்க்கையின் தொடர்ச்சியாகவே உள்ளது. பரிபூரண மாற்றம் அடிப்படையில் தோன்றினால் மட்டுமே, புதியதோர் உலகைப் படைக்க முடியும். 'என் உலகம்' 'உன் உலகம்' என்றில்லாமல் 'நம் உலகம்' என்பதாக விளங்கக்கூடிய புதிய உலகைத் தோற்றுவிக்க, புரட்சி ஏற்பட வேண்டும் அத்தகைய புரட்சியை 'இருத்தல்' நிலைப்பாட்டினால் மட்டுமே கொண்டு வர முடியும். 'ஆதல்' செயல்பாட்டுமுறை இயங்கும்போது, புரட்சி தோன்றாது. 'இருத்தல்' நிலையில் புரட்சி கொண்டு வர நான் செய்யும் முயற்சிகளால், எதிர்வினைப் பயன்

ஏற்படுகிறது. அதாவது, பரிபூரண மாற்றத்தை உட் கருவாய் கொண்டிருக்கும் இருத்தல் நிலைப்பாட்டைப் புரிந்து கொள்ள, நான் எடுத்துக்கொள்ளும் பிரக்ஞை நிலை முயற்சிகள், அதை மாய்த்து விடுகிறது. இதை, என் மனம் புரிந்துகொள்ளும்போது, அது மிகவும் மௌன மாகி விடுகிறது; இருக்கவோ, இல்லாமல் போகவோ அது முயற்சிப்பதில்லை.தயவுசெய்து இதைப் புரிந்து கொள்ளுங்கள் - மனம் அமைதியுறுகிறது; அதன்பின் 'ஆதல்' செயல்பாட்டின் மொத்த வழிமுறையும், உங்களுக்குத் தெளிவாகிறது.

'இருத்தல்' நிலைப்பாட்டை, மனம், வரவேற்று அழைத்து, அடைந்துவிட முடியாது. மனம், முழு அமைதியில் இருக்க வேண்டும், எவ்விதமான உந்துதலும் இருக்கக் கூடாது, பலனை எதிர்பார்க்கக்கூடாது, நற்பண்பாளராக 'ஆக' செயல்படகூடாது - மேற்கூறிய நிலையில் மனம் இருந்தால், 'இருத்தல்', உயிர்ப்பு பெறுகிறது. ஏனென்றால், 'ஆதல்' என்பது 'தான்' என்ற உணர்விற்குத் தோன்றுகிறது; 'நானே' 'ஆதலாவது' ஆகிறது. 'தான்' என்ற என் உணர்வு, கவிஞராக 'ஆதல்' வேண்டுமென்று விரும்புகிறது - 'நான்' கவிஞராகிறேன். 'நான், எனது' என்ற உணர்வு நீடிக்கும்வரை 'இருத்தல்' இருக்க முடியாது. 'நான், எனது' என்ற எண்ணம், வண்ண வண்ண நிறங்களில் வேறு வேறு ஆடை அலங்காரம் செய்துகொள்வதுபோல, மாற்றங்கள் செய்து கொள்ளலாம்; வண்ணங்களை மாற்றியதால், மாற்றம் அடைந்து விட்டதாக எண்ணிக் கொள்ளலாம், புரட்சியை ஏற்படுத்துவதாகப் பெருமைப்படலாம். ஆனால், எதை மாற்றினாலும் 'நான், எனது' என்ற உணர்வு, மையமாக வுள்ளது; ஒழுங்குமுறை கட்டுப்பாடுகளினாலோ, கட்டுத்திட்டங்களினாலோ, தியாகங்களினாலோ, வழி காட்டிகளைப் பின்பற்றுவதாலோ, 'நான், எனது' என்ற

உணர்வினை முடிவிற்குக் கொண்டு வரமுடியாது. 'இதுவாக இருக்க வேண்டும்' அல்லது 'இதுவாக இருக்கக் கூடாது' என்பது போன்ற சிந்தனையின் 'ஆதல்' செயல்பாட்டு முயற்சிகளே, 'நான், எனது' என்ற மையம் நிலைத்து வாழ வழிவகுக்கிறது.

மனம், 'ஆதல்' செயல்பாட்டு முறையில் முயற்சிகளை மேற்கொள்ளும்வரை, 'நான், எனது' என்ற மையம் பலப்பட்டுக் கொண்டு இருக்கும். முயற்சிகள், 'நான், எனது' என்ற உணர்விற்கு உரமிடுகின்றன. 'நான், எனது' என்ற உணர்வு, தன்னை, தன் நாட்டுடன் இணைத்துக் கொண்டு, அடையாளம் காட்டிக் கொள்கிறது; அரசியல் கட்சியுடன், நற்பண்புகளுடன், சித்தாந்தங்களுடன், சமயங்களுடன், இன்னும் பல தரப்பட்டவைகளுடன், தன்னை இணைத்துக் கொண்டு 'நான், எனது' என்ற உணர்வு, தனக்கு முத்திரை குத்திக் கொள்கிறது. ஆகவே, இத்தகைய குறுகிய சிந்தனைகளினால், புரட்சி ஏற்படாது; அடிப்படையில் பரிபூரண மாற்றம் தோன்றாது; இன்னல்களும், குழப்பங்களும், சண்டைகளும், வெறுப் புணர்ச்சியும் மேலும் தீவிரமடையும். மனம் இதை நன்கு அறிந்து கொண்டால், அங்கு மோனம் பிறக்கும். 'இருத்தல்' நிலைப்பாட்டிற்கு மிகவும் அவசியமான காரணியான மோனம் நிலவும்போது, பரிபூரண புரட்சி தோன்ற வாய்ப்பு இருக்கிறது.

**கேள்வி :** எனக்குத் தற்கொலை செய்து கொண்டு விடலாம் போலிருக்கிறது; என்னைப் பொறுத்தவரை, வாழ்க்கையில் ஒரு இலட்சியமும் இல்லை, அர்த்தமும் இல்லை. எங்குத் திரும்பினாலும், கலக்கமும் கஷ்டங் களும் வெறுப்பும்தான் தாண்டவமாடுகிறது. இந்தப் பயங்கரமான உலகத்தில், நான் எதற்குத் தொடர்ந்து வாழ வேண்டும்?

**கிருஷ்ணமூர்த்தி :** நாம் ஏன் தற்கொலை செய்து கொள்கிறோம்? பல்வேறு விதமான தற்கொலை வழிகள் இருக்கிறதல்லவா? உங்களை, இந்தியன் என்று தேசத்துடன் இணைத்துக்கொண்டு, அடையாளம் காட்டிக் கொள்ளும்போது, நீங்கள் செய்வது தற்கொலை இல்லையா? ஒரு கட்சியின் உறுப்பினராக, ஒரு பிரிவின் அங்கத்தினராகச் சேரும்போது, நீங்கள் தற்கொலை தானே செய்து கொள்கிறீர்கள்? உங்கள் நம்பிக்கையை ஒன்றில் வைக்கும்போது, நீங்கள் தற்கொலை செய்து கொள்ள வில்லையா? அதாவது, உங்களைவிட உயர்ந்ததாக நீங்கள் கருதும் ஒன்றில், உங்களை அர்ப்பணிக்கிறீர்கள்; உண்மையில், நீங்கள் எட்ட நினைக்கும் சிகரம்தான், நீங்கள் பிரகடனப்படுத்தும் உன்னதமான ஒன்றாக இருக்கிறது. மேன்மையுற விழையும் உங்கள் விருப்பம் தான், உன்னதமானதாக, உங்களால் உருவகிக்கப்படு கிறது. உன்னதமான ஒன்றைச் சார்ந்தவராக உங்களை நீங்கள் அடையாளம் காட்டிக் கொள்ளும்போது, அதுவும் ஒரு வகையான தற்கொலை தான். இப்படிச் சொல்வதைத் தூக்கி எறிந்து விடாதீர்கள், ஐயா! தயவுசெய்து கவனியுங்கள்.

உங்களில் பலர் இந்த நாட்டுடன் உங்களை இணைத்துக் கொண்டு இருக்கிறீர்கள். இந்த நாட்டின் நலனுக்காகப் போராடி இருக்கிறீர்கள், சிறைக்குச் சென்றிருக்கிறீர்கள். சிறிய விஷயத்திற்காக நீங்கள் உங்களை இழக்கவில்லையா? மற்றொருவர் - அவருக்கு எதிலும் நம்பிக்கை இல்லை; அவருடைய அறிவு பூர்வமான வாழ்க்கை, அவரைக் கலக்கத்திற்கும் இன்னல் களுக்கும் தான் கொண்டு சேர்த்தது. ஆகவே, அவர் தற்கொலை செய்து கொள்கிறார். நம்பிக்கை வைத்தவரும் தற்கொலை செய்து கொள்கிறார்; நம்பிக்கை இழந்தவரும் தற்கொலை செய்து கொள்கிறார் - இருவரும் அவரவர்

வழியில் தற்கொலை செய்துகொள்கிறார்கள். இதற்குக் காரணம் என்னவென்றால், இருவருமே, தங்கள் சுயநிலையிலிருந்து தப்பித்து ஓட நினைக்கிறார்கள். தேசப்பற்று என்று சொல்லிக் கொண்டு தப்பித்து ஓடப் பார்க்கிறார்கள்; கடவுள் பக்தி என்று சொல்லிக் கொண்டு ஓடப் பார்க்கிறார்கள். தேசம் எந்தக் கொள்கைக்காக நின்றதோ, அது தோற்கடிக்கப்படும்போது, தேசத்தில் நம்பிக்கை வைத்தவர் நிலைகுலைந்து போகிறார்; கடவுள்பக்தி பலனற்று போகும்போது, பக்திமான் பதைபதைத்து போகிறார். நானோ அல்லது நீங்களோ, நண்பர் ஒருவரிடம், அன்பு கொண்ட ஒருவரிடம், நம்பிக்கை வைத்து, அவரைச் சார்ந்து இருக்கிறோம். அந்த நண்பரின் ஆதரவு, இனிமேல் கிடைக்காது என்ற நிலை வரும்போது, நம்பிக்கை இழந்த நிலையில், வாழ்வின் விளிம்பிற்குச் சென்று, இருளில் வீழ்ந்து மாய, நாம் தயாராகி விடுகிறோம்.

ஆக, மேன்மை பெற்றவைகளுடன் நம்மை ஈடுபடுத்திக் கொள்வதின் மூலமும், நம்பிக்கைகளின் மூலமாகவும், வேறு பல வழிகளிலும், சுயநிலையிலிருந்து தப்பித்துக் கொள்ள நாம் முயற்சி செய்கிறோம்; நம் முயற்சிகள் தோல்வியடைந்து, மறுபடியும் நாம் சுயநிலைக்கே தள்ளப்படும்போது, நாம் ஆடிப் போகிறோம், தனிமையில் வாடுகிறோம், நம்பிக்கையிழந்து கலங்கிப் போகிறோம்; தற்கொலைக்குத் தயாராகி விடுகிறோம். இதுதான் நம் நிலைமை, இல்லையா? நீங்கள் விரும்பியவர், உங்களை விட்டு விலகிச் செல்கிறார்; நீங்கள் பொறாமைப்படுகிறீர்கள்; உங்கள் இதயத்தின் வெறுமை வெளிப்படுகிறது - அது உங்களைப் பயமுறுத்துகிறது; அதனால், வேறு வழியில் தப்பித்து ஓடத் தயாராகிறீர்கள் - இது தொடர்ந்து சங்கிலித் தொடராக, நடைபெற்றுக் கொண்டேயிருக்கிறது.

ஆகவே, நம்மை நாம் புரிந்துகொள்ளாதவரை, நாம் இருட்டின் விளிம்பில்தான் எப்பொழுதும் நின்று கொண்டிருப்போம். உலகம், பயங்கரமானது, துக்ககர மானது என்று சொல்கிறோம். ஆனால், உலகம் நாம் எப்படி உருவாக்குகிறோமோ, அப்படிதான் இருக்கிறது; மற்றவர்களுடன் உங்களுக்கிருக்கும் தொடர்பு தான் உலகம். அந்தத் தொடர்பில், ஆதரவு வேண்டி சார்ந்திருக்கும் நிலை இருக்குமானால், அங்குப் பயம் தோன்றுகிறது, ஏமாற்றம் ஏற்படுகிறது, வெறுப்பு அதிகரிக்கிறது. இவைகளால், தற்கொலை எண்ணம் தலை தூக்குகிறது. அசைக்க முடியாத நம்பிக்கை உங்களுக்கு இருக்குமேயானால், அது உங்களைக் கட்டிப் போட்டு விடுகிறது. அந்த நம்பிக்கை, உங்கள் முழு மனதையும் நிரப்பி விடுகிறது. அதனால், உள்முகத் தேடுதலில் உங்களுக்கு அக்கறையில்லை; அந்த நம்பிக்கை, நிஜத்திலிருந்து தப்பித்துச் செல்லும் வழியாக உங்களுக்கு அமைந்து விடுகிறது. எவ்வளவுக்கெவ்வளவு மதப்பற்று அதிகமாக உங்களுக்கு இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு, தற்கொலை செய்து கொள்ளும் எண்ணம், உங்களுக்குக் குறைவாக இருக்கும்.

உள்முகமாய் ஆய்வு மேற்கொண்டு, 'ஏன், எப்படி' என்றெல்லாம் வினாக்கள் எழுப்பி, நீங்கள் ஆராயும் போது, உங்களின் தனிமையை, வெறுமையைப் பற்றிய உண்மைகளை நேருக்கு நேர் சந்திக்க நேரிடுமோ என்ற பயம், உங்களிடம் இருந்து கொண்டேயிருக்கிறது. எதையும் சார்ந்திராமல், வெறுமையைச் சந்திக்கத் தயாராக வேண்டாமா? எந்த ஆதரவையும் தேடாமல், முற்றிலும் தனித்திருக்கும் நிலையை நீங்கள் அடைந்து, அதைப் புரிந்து கொள்ளவும் வேண்டாமா? தனித்து நிற்பதை, மாசு படாததை, எண்ணங்களைக் கடந்ததைக் கண்டு கொள்ள, நீங்கள் தனித்திருக்க வேண்டாமா? உங்கள்

தனிமை உங்களைப் பயமுறுத்துமேயானால், தனித்திருக்கும் நிலையை உங்களால் அடைய முடியாது. நம் இருப்பைப் பார்ப்பதற்கு, நம்மில் பலருக்குப் பயம். அதனால், தப்பிப்பதற்குப் பல வழிகள் வைத்திருக்கிறோம். ஆனால், அவ்வழிகள் பலனளிக்காமல் போகும்போது, நாம் வெறுமைக்கே மீண்டும் தள்ளப்படுகிறோம். நம்மை நாமே அறிந்துகொள்வதற்கு, அந்தக் கணத்தை நாம் பயன்படுத்திக்கொள்ள வேண்டும்; இந்த வெறுமையை நாம் புரிந்துகொள்ள வேண்டும். சடங்குகள் செய்வதின் மூலமோ, விஷய ஞானம் மற்றும் நம்பிக்கைகளை வளர்த்துக்கொள்வதின் மூலமோ, கவனத்தைத் திசை திரும்பும் கேளிக்கைகள் மூலமாகவோ, வெறுமையிலிருந்து தப்பித்து ஓட முயலாமல், அதை நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

வெறுமையைத் திரித்துப் பார்க்காமல், உள்ளவாறு அதைப் புரிந்து கொண்டு, அதை மாற்றம் செய்ய நினைக்காமல், மனம், அதில் முழுமையாக ஆழ்ந்திருக்கும்போது மட்டுமே, நீங்கள் அதைப் பார்க்க முடியும். மனம் அவ்வாறு செயல்படுவது மிகவும் கடினம்தான். நம்மில் பலர் சோம்பேறிகள்தாம். உள்ளதை, நேருக்கு நேர் சந்திக்க மனவலிமையில்லாமல், தற்கொலை முயற்சியில் இறங்கி விடுகிறோம், அல்லது, நம்பிக்கைகளில் மூழ்கி விடுகிறோம். தனித்திருத்தல் என்றால் என்ன என்பதை நன்றாகப் புரிந்துகொண்டு, அன்றாட வாழ்வில் எதிர்ப்படும் தனிமையை அனுபவித்துணரும் ஒருவர், தனித்திருக்க, புடம் போடப்பட்டவராகிறார். தனித்திருத்தல் ஒன்றால் மட்டுமே, 'நான், எனது' என்ற எண்ணங்கள் இல்லாத, 'நான், எனது' என்ற எண்ணத்தின் முயற்சிகளும், முரண்பாடுகளும், குழப்பங்களும் இல்லாத, 'இருத்தல்' நிலைப்பாட்டை உணர முடியும்.

**கேள்வி :** சில நேரங்களில், அமைதியான மன நிலையில் இருந்திருக்கிறேன். மனம், சாந்தமாக சம நிலையில் இருந்திருக்கிறது. ஆனால், அத்தகைய நிலை வெகு சீக்கிரமே மறைந்து விடுகிறது. எப்படிச் சீரான சமநிலையைத் தக்க வைத்துக் கொள்வது?

**கிருஷ்ணமூர்த்தி :** சமநிலையை, அமைதியைத் தொடர்ந்து தக்க வைத்துக் கொள்ள வேண்டும் என்று ஏன் விரும்புகிறீர்கள்? இதுவும், உங்கள் உடைமைகளை நீடித்து வைத்திருக்க வேண்டும் என்ற உங்கள் விருப்பத்தைப் போன்றதல்லவா? ஆனந்தம் என்பது ஒரு அனுபவம், ஒரு அமைதி, ஒரு மோனம். அந்த அமைதியை நீங்கள் அனுபவித்திருக்கிறீர்கள். அதனால், அதை நிரந்தரமாக்கிக்கொள்ள ஆசைப்படுகிறீர்கள். அமைதியைத் தொடர்ந்து அனுபவிக்க ஆசைப்படுவதே அதன் தொடர்ச்சியை நிலைநாட்டத்தானே? தொடர்ந்து நீடிக்கும் எதுவும் புத்துணர்வுடன் இருப்பதில்லையே, சரி தானே? நம் பிரச்சனையும் இதுதானல்லவா?

கடந்த காலத்தின் அழகு கொழிக்கும் கலைக ளாலும், பண்டைய மரபுகளாலும், கடந்த நாட்களின் சோகங்களாலும், நேற்றைய அனுபவங்களாலும், தளை படுத்தப்பட்டு கட்டுண்டவர்கள் நாம். கடந்தகால அனுபவங்களால் விளிம்புவரை நிரம்பி வழிகிறது, நம் மனம்; அதனுள், நூதனம் எதுவும் நுழைய சாத்திய மில்லை; அப்படித் தப்பித் தவறி, எதுவாவது நுழைந்து விட்டால், அதை விடாப்பிடியாகப் பிடித்து வைத்துக் கொள்ளப் பார்க்கிறோம். ஆக, அமைதியை அனுபவ மாக்கி விடுகிறோம், அதனால், மனம், அசைவற்று மோனத்தில் இருக்க கூடுவதில்லை. கடந்த காலத்தின் பதிவுகள் என்ற பெரும் பாரத்தைச் சுமக்கும் மனம், அசைவற்று அமைதியாக இருக்கும் ஆற்றலை இழந்தது.

வயோதிகனைப்போல, அது, மனப்பதிவுகளில் வாழ்ந்து கொண்டிருக்கிறது. கடந்த காலத்தின் சுமையைச் சுமக்கும் பழைய மனம், அசைவற்று மோனத்திலிருக்கும் நிலையை அறிந்து கொள்ள சக்தியற்றது. தயவுசெய்து கவனத்துடன் கேளுங்கள்! அப்படிக் கேட்பதனால், கடந்த காலத்தைத் தூர ஒதுக்கி வைத்து விட்டு, புத்துணர்வுடைய எழுச்சி மிக்க மனதை எப்படி அடைவது என்பதைக் கண்டறியலாம்.

புதிய செயல்முறைகளை, புதிய சித்தாந்தங்களைப் பின்பற்றுவதில் நமக்குச் சிரமமேதுமில்லை. படைப்பாற்றலோடு இருப்பது எப்படி என்பதுதான் நம் பிரச்சனை. நம் வாழ்வில், நாம் சிந்திக்கும் முறையில், நம் செயல்களில், புதிய பரிமாணம் எதையும் நாம் உண்டுபண்ணுவதில்லை. நாம், இயந்திர கதியில், பழக்கப்பட்ட அன்றாட வேலைகளைச் செய்கிறோம். கல்வி முறையும் நமக்கு ஞாபக சக்தியை வளர்த்து, நாம் இயந்திர கதியில் இயங்குவதற்கு உறுதுணை செய்கிறது. புதியதாக எதையும் சிந்திக்காத நாம், புதிய ஒளி தோன்றியவுடனே, அதை, பழைய மரபு வழியில் கொண்டு சென்று, அதன் புத்துணர்வை அழித்து விடுகிறோம். எனவே, இதை நீங்கள் உண்மையில் கவனித்து, புரிந்து கொண்டீர்களானால், நற்பண்புகளை வளர்த்துக்கொள்ளுதல், செல்வத்தைச் சேர்த்தல், உடைமைகளைக் கூட்டுதல் போன்றவை, மனதின் சுமையை அதிகரிக்கச் செய்கிறது என்பதைக் காணலாம். சுமையால் அழுத்தப்படும் மனம், நூதனத்தைப் புரிந்து கொள்ள முடிவதில்லை, புதிய எழுச்சி யுடன் இருக்க முடிவதில்லை. இன்றைய நிலையில், உலகிற்கு மிகவும் தேவைப்படுவது, புதிய மனம், சிருஷ்டிக்கும் மனம். கண்டுபிடித்தல்களால் பலனேதுமில்லை. மனம் 'ஆதல்' செயல்பாட்டு வழியில் இயங்கும்போது சிருஷ்டிக்கும்

மனதிற்கு வழியில்லை. மனப் பதிவுகளிலும் உடைமை களிலும் சிக்கிக் கொண்டிருக்கும் மனதால், புதியதோர் வழியை உருவாக்க இயலாது.

ஆக, மகிழ்ச்சிகரமான அனுபவங்களைச் சேகரிக்கும் மனம், படைப்பாற்றல் கொண்ட மனமாகாது. கடந்த கால அனுபவங்களின் பாரத்தைச் சுமக்கும் மனம், அந்த அனுபவங்களால் பயந்து போயிருக்கிறது. பயந்த மனதிற்கு 'இருத்தல்' நிலைப்பாட்டை வெளிக் கொணரும், புரட்சியைத் தோற்றுவிக்கும் வல்லமை கிடையாது. இந்த உண்மையை உள்ளாழ் மனதில் இயங்க விடுங்கள்; இலக்கினை அடையும் உணர்வோடு செய்யாமல், இயங்க விடுங்கள். இப்படிச் செய்தீர்களே யானால், மனம், கடந்த கால மனப்பதிவுகளிலிருந்து விடுபட்டு, சுதந்திரமாகி விடும்; அதுவும் பல ஆண்டுகள் கழித்து அல்ல, உடனே சுதந்திரம் கிடைத்து விடும். ஆக, உங்களுக்கு மிகவும் கவனத்துடன், வியாக்கியானங்கள் செய்யாமல் செவிமடுக்கத் தெரிய வேண்டும் என்று அர்த்தமாகிறது. அப்போதுதான் புதியதோர் மனம் தோன்ற வாய்ப்புள்ளது.

**கேள்வி :** நம் சிந்தனையில் புரட்சி ஏற்பட வேண்டியதின் அவசியத்தை, நீங்கள் வலியுறுத்திக் கூறுவது, எனக்குப் புரிகிறது. வெற்றுக் கருத்துக்களை ஆதரிக்க கட்டாயமாக மறுக்கும் உங்கள் நோக்கமும் புரிகிறது; ஆனால், நமது சிந்தனை, நாம் வாழும் முறைக்கேற்ப அமைகிறது. நிலத்தையும் செல்வங்களை யும் தன்னார்வத்துடன் எல்லோருக்கும் பகிர்ந்தளிக்குமாறு பரிந்துரைத்து, நீங்கள் ஏன் பிரச்சாரம் செய்யக்கூடாது? பகிர்ந்தளிப்பதால் எல்லோருக்கும் எல்லாமும் கிடைப்பதால், உங்கள் போதனைகளைப் புரிந்துகொள்ள, சரியான சூழ்நிலை ஏற்படும்; சாதாரண மக்களும் நீங்கள்

சொல்வதைப் புரிந்துகொள்வார்கள். சத்தியத்தைத் தேடுபவர், நிறைவேற்ற வேண்டிய குறைந்தபட்ச நிபந்தனைகளை, நீங்கள் ஏன் விதிக்கக் கூடாது?

**கிருஷ்ணமூர்த்தி :** ஐயா, உங்கள் கேள்வியில் எந்த விஷயம் முக்கியம் வாய்ந்தது? ஆன்மீகவாதிக்கு இருக்க வேண்டிய குறைந்தபட்ச தகுதிகளா? உங்கள் புனித நூல்கள், அவற்றையெல்லாம் வரிசைப்படுத்தியிருக்குமே, சரிதானே? பிள்ளைப்பிராயம் முதற்கொண்டே, உங்களுக்குத் தாராள குணம் இருக்க வேண்டும், பிறருக்கு நல்லது செய்ய வேண்டும், உங்களிடம் இருக்கும் சொற்ப பொருளையும் பிறருக்குத் தானம் செய்ய வேண்டும், அன்பாக இருக்க வேண்டும். பேராசைக்காரனாக இருக்கக் கூடாது என்றெல்லாம் எடுத்துச் சொல்லப்பட்டிருக்குமே, உண்மைதானே? அவைகள் எல்லாம் நல்ல கொள்கைகள், இல்லையா? உங்களிடம் தாராள குணம் இல்லை என்பதால், தாராள குணம் என்பது ஒரு கருத்தாக உங்களுக்குத் தெரிகிறது. நிஜத்தில் எப்படி இருக்கிறதோ அதுதான் முக்கியமே தவிர, குறைந்தபட்சம் என்னவாக இருக்க வேண்டும் என்பது முக்கியமல்ல.

நிலத்தைச் சமமாகப் பகிர்ந்தளித்துவிட்டால், தகுந்த சூழ்நிலை உருவாகி விடுமா? தேவையான நிலம், உணவு, உடை, இருப்பிடம் எல்லோருக்கும் இருந்து விட்டால், உண்மையைத் தேட, தகுந்த சூழல் தோன்றி விடுமா? ஐயா, இந்தக் கேள்வியின் சாராம்சம் என்ன? நமது மனம், குறுகியது, அற்பமானது. பொருளாதார புரட்சி, நிலச்சீர்திருத்தம் முதலியவற்றால் ஒழுங்குமுறை படுத்தி, சரியான சூழலை உருவாக்கி, நமது மனதை விரிவுபடுத்திவிடலாம் என்று எண்ணுகிறோம். நமக்கிருக்கும் பிரச்சனை, நிலப்பங்கீடோ அல்லது எந்தவிதமான பொருளாதார கொள்கைகளை நாம்

கடைபிடிக்க வேண்டும் என்பதோ அல்ல; நமது மனங்களின் அற்பத்தனமே நமக்கிருக்கும் பிரச்சனை. ஆனால், நாம் அதைப் பார்ப்பதில்லை.

அற்ப மனதை எது உண்டாக்குகிறது? என்னிடம் கேட்கப்பட்ட கேள்வி முக்கியம் அல்ல. ஆனால், கேள்வியைக் கேட்டவரின் மனதை, இக்கேள்வி சுட்டிக் காட்டுவதால், கேட்டவர் முக்கியமானவராகிறார்; கேள்வியைப் புரிந்துகொள்வது சுலபம். நிலத்தைப் பகிர்ந்தளிப்பதோ, உணவளிப்பதோ, உடை, இருப்பிடம் அளிப்பதோ, சிரமமில்லை - பிரச்சனையைத் தீர்த்து விடலாம். உணவு, உடை, இத்யாதிகளைத் திட்டமிட்டு, ஏற்பாடுகளைச் செய்து, விநியோகித்து விடலாம். ஆனால், திட்டங்களைத் தீட்டிய மனதைப் புரிந்து கொள்வதுதான் அவசியம். திட்டங்களை வகுத்த மனதில், புரட்சி தோன்ற வேண்டும். ஆனால், அற்பத் தனமான மனதால், புரட்சியைத் தோற்றுவிக்க முடியாது. கடவுளைப் பற்றி எண்ணும்போதுகூட, அற்பத்தனமான மனம், அற்பமாகவே இருக்கிறது. அற்பத்தனமான மனம், எண்ணங்களால் தளைபடுத்தப்பட்டிருக்கிறது. அது என்னதான் முயன்றாலும், அது கொண்டுவரும் மாற்றம், அற்பத்தனமானதாகவே இருக்கும். நீங்கள் என்னதான் செய்தாலும், எண்ணங்கள் தளைபட்டவையே, கட்டுப்பட்டவையே. மார்க்ஸ், கிருத்துவக் கோட்பாடு, பௌத்தம், ஹிந்து சமயம் இன்ன பலவற்றிற்கு, எண்ணங்கள் கட்டுப்பட்டிருக்கின்றன. மனம், எண்ணங் களால் தளைப்பட்டு, கட்டுப் பட்டிருக்கும் வரை, அற்ப மானதாகவே இருக்கும். அற்ப மனதால் புரட்சியைக் கொணர முடியாது. அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில சீர்திருத்தங்களை, அதனால் கொண்டுவர முடியலாம். ஆனால், அந்தச் சீர்திருத்தங்களினால் இன்னல்கள் மேலும் அதிகரிக்கும்; அற்பமனங்கள் கொண்டு வந்த

சீர்திருத்தங்கள், கொடுங்கோலாட்சியிலும் காராக்கிருக சிறைகளிலும் முடிந்து போகும்.

ஆகவே, நம் பிரச்சனை, நிலப்பங்கீடோ பொருளாதார சீர்திருத்தமோ அல்ல. குறுகிய மனதினை, நினைக்கவே விடாமல் எப்படி உடைப்பது என்பதுதான் பிரச்சனை. இந்தக் கேள்வியைப் புரிந்துகொள்வது மிகவும் அவசியம். நாமெல்லோருமே இந்த உலகில் எதையாவது சாதிக்க விரும்புகிறோம். துன்பங்கள், பட்டினி, அன்பு கிடைக்காத ஏக்கம், மூர்க்கத்தனம், இரக்கமற்ற கொடூரம் என்று, உலகில், துயரங்கள் மிஞ்சிக் கிடக்கின்றன; நம் அன்றாட வாழ்வில், அன்பு வறண்டுபோன நிலையை நாம் காண்கிறோம். நாம் ஏதாவது நடவடிக்கை எடுத்து, இந்நிலையைப் போக்க விரும்புகிறோம். ஆனால், நம் மனம், புரட்சியை என்றுமே தோற்றுவித்ததில்லை; சீர்திருத்தங்களைக் கொண்டு வந்திருக்கிறது. ஆனால், அந்த சீர்திருத்தங்களோ, மஹா யுத்தங்களையும் சொல்லொணாத் துயரங்களையும் உண்டாக்கி விட்டன. தயவுசெய்து, இந்த உண்மையை, உட்புக அனுமதியுங்கள்; அப்போது நீங்கள் புரிந்துகொள்வீர்கள். ஆக, எண்ணங்களால் மகிழ்ச்சிகரமான உலகை உண்டாக்க முடியாது. தளைபட்ட நம் எண்ணங்களால், குழப்பங்களும், துயரங்களும், மேலும் அதிகரிக்கும். சுதந்திரமான எண்ணம் என்று எதுவும் கிடையாது. ஏனென்றால், ஞாபகங்களின் அடிப் படையில்தான், எண்ணங்கள் பிறக்கிறது. ஞாபகங்கள், அனுபவங்களின் மனப்பதிவுகள்; அனுபவங்கள், பழக்கத் திற்கேற்ப வெளிப்படும் எதிர் வினைகள்; குழந்தைப் பருவத்திலிருந்தே, ஹிந்துவாகவோ, கம்யூனிஸ்ட்டாகவோ, வேறு பிரிவினராகவோ, குறியீடு இடப்பட்டு வளர்க்கப்படுகிறீர்கள்; உங்கள் மனம், பதப்படுத்தப்பட்டு, உருவாக்கப்பட்டு, வேலியிடப்பட்டு, ஒரு சட்டத்திற்குள் பொருந்தும்படி,

இளமையிலிருந்தே வடிவமைக்கப்படுகிறது. ஒரு புரட்சியாளர், தலைவராக வந்து, உங்கள் சட்டம் நன்றாக இல்லை என்று சொல்லிவிட்டு, உங்களைப் புதிய சட்டத்தில் பொருத்துகிறார்; அவர் போடும் சட்டத்தில், நீங்கள் சரியாகப் பொருந்தாவிட்டால், உங்களைத் தீர்த்துக் கட்டி விடுகிறார். ஆக, மாற்றம் அடையும் எண்ணத்தின் ஓயாத செயல்முறை, இப்படித்தான் இயங்குகிறது; இது புரட்சி அல்ல; இது மாற்றம் அல்ல; இது மேற்பரப்பில் ஏற்படும் வெறும் திருத்தம் மட்டுமே. எனவே, எண்ணங்கள், திட்டங்கள், அனுபவங்கள் ஆகியவற்றில் மட்டுமே நாம் அக்கறைக் காட்டிக் கொண்டிருக்கும் வரை, நம் உலகின் நிலை, குழப்பமும் துன்பமும் நிறைந்ததாகவே இருக்கும்.

ஆகவே, நிலத்தை எப்படி பகிர்ந்தளிப்பது என்பதோ, எப்படித் தியாகம் செய்வது என்பதோ, எப்படித் துறந்து விடுவது என்பதோ நம் பிரச்சனையாக இல்லை. ஆனால், புதிய உலகைத் தோற்றுவிக்கக்கூடிய மன அமைதியை எப்படிக் கொண்டு வருவது, எப்படிச் சிந்திப்பது என்பதுதான் நம் பிரச்சனை. பரிபூரண புரட்சி தோன்ற வேண்டுமென்றால் எண்ணங்கள் முடிவிற்கு வரவேண்டும். எண்ணங்கள் எப்படி எழுகின்றன மற்றும் எண்ணங்களின் செயல்பாட்டு வழிமுறைகள் என்ன என்பதை முழுவதுமாகப் புரிந்து கொண்டால்தான், எண்ணங்களை முடிவிற்குக் கொண்டுவர முடியும். ஞாபகங்களின் மூலம், எண்ணங்கள் எழுகின்றன; எண்ணங்கள், வார்த்தைகளாகின்றன. மனப்பதிவுகள் மற்றும் எப்போதுமே தளைப்படுத்தப்பட்ட விஷய ஞானத்தை அடிப்படையாக வைத்துக் கொண்டு, நாம் செயல்படுகிறோம். எண்ணங்களை முடிவிற்குக் கொண்டுவர வேண்டுமென்று செயல்பட்டாலும், அதுவும் தளைபடுத்தப்பட்டதாக, வரையறைகளுக்கு

உட்பட்டதாகவே இருக்கும். மனம், இதைப் புரிந்து கொள்ளும்போது, ஆழ்ந்த மௌனத்தில் அமைதியுறு கிறது; அதுதான் உண்மையான தியானம். ஒழுங்குமுறை களாலோ, நிபந்தனைகளாலோ, எதிர்ப்பினாலோ, எண்ணங்களின் செயல்பாட்டு வழிமுறைகளை அறிந்து கொண்டு, மனதை அமைதியுறச் செய்யாமல், இயல்பாக எண்ணங்களைப் புரிந்து கொண்டு, மனம், அமைதியில் இருக்கும்போதுதான், அடிப்படையான, ஆழமான புரட்சி ஏற்பட வாய்ப்பு உள்ளது. அத்தகைய புரட்சியின் மூலம், வரையறைகளுக்கு உட்படாத, தளைபடாத செயல்கள் நடைபெறும். அதன் காரணமாக, வேறுபட்ட புதியதோர் உலகைச் சமைப்பது சாத்தியமாகக்கூடும். அத்தகைய உலகில், மனிதர்களுக்கிடையே இப்போ திருக்கும் 'உன்னிடம் எல்லாம் இருக்கிறது, என்னிடம் எதுவும் இல்லை' என்பது போன்ற சச்சரவுகள் இருக்காது. ஆனால், புரட்சிக்குப்பின், 'என்னைவிட உன்னிடத்தில் ஏதோ ஒன்று அதிகம் இருந்தாலும், அதை நான் பொருட்படுத்த மாட்டேன். ஏனென்றால், என்னிடம் மற்றொன்று இருக்கிறது' என்பதாக மக்களின் மனோ பாவம் இருக்கும்.

மனம், தன் அதிகாரத்தைப் பெருக்கிக் கொள்ள நினைக்காமல், பலனை எதிர்பார்த்து செயல்படாமல், கருத்துகளின் மூலம் செயல் புரியாமல் இருக்குமே யானால், எண்ணத்தின் விளைவாக இல்லாத, மனம் தோற்றுவிக்காத புரட்சி, உள்ளாழ்மனதில் தோன்ற வாய்ப்பு உள்ளது. அந்தப் புரட்சி, உண்மையின் புரட்சி யாக, இருத்தலின் புரட்சியாக, அன்பின் புரட்சியாக அமைகிறது. இப்படிச் சொல்வது, உணர்ச்சி மிகுதியால் சொல்லப்பட்டதல்ல; மூட நம்பிக்கையால், வீண் பயத்தால் சொல்லப்பட்டதும் அல்ல. இது கட்டுக்கதை அல்ல. மாறாக, இது ஒவ்வொருவராலும் உணர்ந்து

கொள்ளக்கூடிய உண்மையாகும். அந்த உண்மையை உணர்ந்து கொள்ள, நீங்கள் மிகுந்த சிரத்தையுடையவராக இருக்க வேண்டும்; உண்மையாக இருக்கும் ஒன்றை எவ்வாறு கேட்க வேண்டும் என்பதையறிந்து கொண்டு அவ்வாறே கேட்டு, அந்த உண்மை உங்களுள் செயல்பட அனுமதியுங்கள். அந்த உண்மை உங்கள் மனதை அனைத்து எண்ணங்களிலிருந்தும் விடுவித்து தூய்மை படுத்தட்டும்.

பிப்ரவரி 18, 1953
மும்பை.



# 5

# சார்ந்திருத்தல்

ஒருதலைப்பட்சமான விருப்பு வெறுப்புகள், தவறான அபிப்பிராயங்கள் போன்ற உணர்வுகள், நம் வாழ்க்கையில் மிகுந்த தாக்கத்தை உண்டாக்கும் உணர்வுகளாக உள்ளன. அவற்றைப் பற்றிய விழிப்புணர்வு நம்மிடம் இல்லை. நம் வாழ்வை அவை எவ்வாறு கட்டுப்படுத்துகிறது என்பதையும் நாம் அறிவதில்லை. நம் சொந்த அபிப்பிராயங்கள், நமக்குப் பலத்தை அளிப்பதாக எண்ணுகிறோம். ஆக, மனதின் ஒருதலைப்பட்சம், வெறுப்பு, தளைபடுத்தும் தாக்கங்கள் என்ற கனத்த சுவற்றினைத் துளைத்துக் கொண்டு, நூதனமான எதுவும் உள்ளே புகுவதென்பது, இயலாத காரியமாகவுள்ளது. இச்சுவற்றை உடைக்க நாம் எடுக்கும் முயற்சிகள், பாரபட்சத்திற்கு, மேலும் வலிமை கூட்டுவது மட்டுமல்லாமல், புதிய ஒருதலைப்பட்சமான விருப்பு வெறுப்புகளையும் தோற்றுவிக்கின்றன. ஒரு குணத்தை, வெறுப்புணர்ச்சியை, பாரபட்சமான உணர்வை உதறித் தள்ளிவிட வேண்டும் என்று உளமார நாம் செய்யும் முயற்சிகள், வேறு விதமான வெறுப்புணர்ச்சியை நம்முள் வளர்ப்பதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா என்று எனக்குத் தெரியவில்லை. நம் முயற்சிகள், உதறித் தள்ள நினைத்ததை எதிர்த்து மற்றொரு தடுப்புச் சுவற்றை எழுப்புகிறது. எதிர்ப்பதிலிருந்து, இம்முறையில்

செயல்படவும், வாழவும், தொடர்ந்து செயல்படவும், சக்தியைப் பெறுகிறோம்.

கனத்த சுவராக இருக்கும் பல தவறான அபிப்பிராயங்களில், குறிப்பிட்ட ஒன்றை, நீங்கள் இடித்துத் தள்ளி விடுவதால், நான் சொல்பவைகளில் உள்ள அர்த்தத்தையோ முக்கியத்துவத்தையோ அடைந்துவிட முயன்றால், அது மிகவும் துரதிர்ஷ்டவசமானதாகும். சீரிய முறையில் செவிமடுப்பதுதான், மிகவும் அவசியம் என்று நான் நினைக்கிறேன். புதிய எண்ணங்களை உருவாக்குவதையோ, புதிய எதிர்ப்புகளை வளர்ப்பதையோ, நோக்கமாகக் கொண்ட செவிமடுத்தலாக இல்லாத கேட்கும் கலை ஒன்றிருக்கிறது என்பதை நான் திரும்பத் திரும்பச் சொல்லப் போவதில்லை. ஒன்றை அடைய எடுக்கும் முயற்சியாக இல்லாமல், திறந்த மனதுடன் கேட்பதே, உள்மன விழிப்புணர்வாக அமைகிறது. அத்தகைய செவிமடுத்தலினால், ஒரு புதிய கண்ணோட்டம், ஒரு புதிய அர்த்தம் மலர்கிறது. ஆனால், எதிர்பார்ப்புகளுடன் முயற்சி எடுத்துக்கொண்டு கேட்பதால், புதிய கண்ணோட்டம், புதிய அர்த்தபுஷ்டி அழிக்கப்படுகிறது. உங்கள் மனம், சற்றே அமைதியாக இருக்கையில், உண்மையை அறிந்து கொள்வதில் உங்களுக்கு விருப்பம் இருக்கும்பட்சத்தில் மட்டுமே, நீங்கள் உண்மையைப் புரிந்து கொள்கிறீர்கள். ஆனால், முயற்சி, எதிர்ப்பு என்ற முறையில் நீங்கள் செயல்பட்டால், உண்மை வெளிப்படுவதில்லை. அதனால், நான் உங்களுக்குச் சொல்ல விழைவதெல்லாம் இதுதான்: வெறும் வார்த்தைகளாகவோ, வார்த்தையின் இலக்கணங்களையோ மட்டும் கேட்காமல், சொல்லப்பட்ட விஷயத்தின் முழுமையான உட்பொருளையும் அறிந்து கொள்ளும்விதமாகக் கேட்க வேண்டும் என்பதே. சொல்லப்பட்ட விஷயத்தை வாழ்க்கையில் உபயோகித்து பலனடைய வேண்டும்

என்ற குறிக்கோளின் உந்துதல் இல்லாமல் கேளுங்கள். இன்னல்களையும் போராட்டங்களையும் முடிவுறச் செய்யும் கருவியாக, சொல்லப்படுவதை உபயோகிக்காமல், கேளுங்கள். செயல்படும்போது உபயோகிக்கலாம் என்றெல்லாம் எண்ணாமல், கேளுங்கள். முயற்சிகள் செய்து எத்தனிக்காமல் செவிமடுக்க எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாக முடிகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு சாத்வீக விழிப்புணர் வோடு (passive awareness) நம்மால் கேட்க முடியும்; தேர்ந்தெடுத்தல் இல்லாத எளிய விழிப்புணர்வோடு நம்மால் கேட்க முடியும்; நம் பங்கில் எந்த முயற்சியும் இல்லாமல், சொல்லப்பட்ட விஷயத்தின் உட்பொருளையும் முக்கியத்துவத்தையும் வெளிக் கொணரக்கூடிய விழிப்புணர்வோடு, நம்மால் கேட்க முடியும்.

தூண்டுகோல் (influence) என்று நம்மால் அழைக்கப் படுவதைப் பற்றி, இம்மாலைப் பொழுதில் உங்களுடன் கலந்துரையாட விழைகிறேன். உந்துசக்தி, திடநம்பிக்கை, வாழ்க்கையை நடத்திச் செல்லும் சக்தி, சுவாரஸ்யமற்ற தினசரி வேலைகளைச் செய்யும் இயந்திரம், குறிக்கோள் என்று, பல வடிவில், தூண்டுகோல் செயல்படுகிறது. தூண்டுதல், நமக்குள் தன்னை நிலைநாட்டிக் கொண்டபின், நமக்கு ஒரு வித ஆற்றலை, அது அளிக்கிறது. தூண்டுதலாகச் செயல்படும் கருத்து, குறிக்கோள், இலட்சியம், சாதிக்க வேண்டும் என்ற அவா போன்றவை, நமக்கு மிகுந்த பலத்தையளித்து நடவடிக்கைகளைத் தொடரச் செய்கிறது. தனிப்பட்ட முறையிலோ, தேசத்திற்காகவோ, கட்சிக்காகவோ, குழுமத்திற்காகவோ, நாம் விரும்புவதை அடைய வேண்டும், சாதிக்க வேண்டும் என்ற விருப்பம் எல்லோருக்கும் இருக்கிறது. குறிப்பிட்ட ஒரு சித்தாந்தத் துடன், நம்மை நாம் இணைத்துக் கொள்ளும்போது, அந்த உறவின் மூலம், நாம் சக்தியைப் பெறுகிறோம், வலிமை

பெறுகிறோம். அச்சக்தியை அதிக அளவில் உபயோகப் படுத்தும்போது, பலனை அடையும் வல்லமையும் அதிகரிக்கிறது. ஆனால், அத்தகைய வல்லமை பெறும் போது, வலி, துயரம், மனச்சோர்வு போன்றவற்றையும் அனுபவிக்கிறோம். அதன் காரணமாக, மெதுவாக தன்னம்பிக்கையை இழக்கிறோம்.

கொள்கைப் பற்றோடு, உண்மையாக உழைத்தாலும், பலனை அடைய உண்மையாக உழைத்தாலும், உங்களால் வெற்றி பெற முடியும். நீங்கள் சாதிப்பீர்கள் - ஆனால் வெற்றியடைய நீங்கள் உழைக்கும்போது, மனசோர்வும் பயமும் நம்பிக்கையின்மையும் கூடவே இருப்பதை நீங்கள் கவனித்திருப்பீர்களா என்று எனக்குத் தெரியவில்லை. நம்பிக்கையின்மையை உணரும் நீங்கள், உங்களைத் தாங்கி நிற்கக்கூடிய ஒன்றாக, நீங்கள் ஏற்கும் ஒன்றுடன் உங்களை இணைத்துக்கொண்டு, அதிலிருந்து சக்தியைப் பெற்று, உங்கள் செயலைத் தொடருகிறீர்கள், உங்களை அடையாளம் காட்டிக் கொள்கிறீர்கள். எனக்குக் குறிப்பிட்ட குறிக்கோள் என்று எதுவும் இல்லா விட்டாலும், கடவுள் நம்பிக்கை இருக்குமேயானால், அந்த நம்பிக்கை, என்னை நடத்தி செல்கிறது; அனைத்து தொல்லைகளிலும், என் பக்தி, என் கடவுள் நம்பிக்கை என்னைத் தாங்கிக் கொள்கிறது. ஆனால், உண்மையில் நாம் கொண்டிருப்பது நம்பிக்கையே அல்ல; நம்பிக்கையை ஊர்ஜிதம் செய்யும் வாய்மொழிகள், நம்மிடம் உள்ளது. அதனால், குருமார்களை, சித்தாந்தங்களை, அரசியல் கட்சியை, செயல்பாட்டு வழிமுறைகளை, சதா தேடிக் கொண்டிருக்கிறோம்; நம்மை, தேசத்துடன், சித்தாந்தத் துடன், கட்சியுடன் இணைத்துக் கொண்டு, ஒரு அங்கீகாரம் பெறுகிறோம், சக்தியைப் பெறுகிறோம். அந்தச் சக்தியைப் பயன்படுத்தி, நமது முயற்சிகளைத் தொடர ஆற்றல் இருந்தால், அவ்வாறே செய்கிறோம்.

அகத்திலோ புறத்திலோ, நம்பிக்கையைச் சார்ந் திருந்தால், அங்கு, பயம் நிலைக்கொண்டிருக்கும். கடவுள் பக்தியாலோ, விஷய ஞான அனுபவத்தாலோ, ஒழுங்கு கட்டுப்பாடுகளினாலோ, நம் தன்னம்பிக்கையை எழுச்சியுறச் செய்ய வேண்டும் என்று முயற்சிக்கிறோம். நான் குறிப்பிட்ட ஒரு மதநெறியில், கோட்பாட்டில், கடவுளில், நம்பிக்கை வைக்கிறேன்; அந்த நம்பிக்கையி லிருந்து சக்தியை வரவழைத்துக் கொண்டு, என்னை நிலைப்படுத்திக் கொள்கிறேன். என்னைத் தாங்கிக் கொள்ளும் அந்தச் சக்தியை நான் வரவழைத்துக்கொள்ளும் செயல்பாட்டில், 'நான், எனது' என்ற எண்ணமும் முளைத்து விடுகிறது. நம்மிடத்தில் நமக்கு நம்பிக்கை இல்லை. அதனால், சில பயிற்சி வழிமுறைகளைக் கற்றுக்கொண்டு, அதன் மூலம் எண்ணங்களைப் பழக்கப் படுத்தி, அத்தகைய பழக்கம் தரும் பலத்தால், அன்றாட வாழ்க்கையின் சச்சரவுகளையும் போராட்டங்களையும் எதிர்கொள்ள முயற்சிக்கிறோம். அதிக மதிநுட்பத் துடனும், விழிப்புடனும், நாம் இருக்கும் பட்சத்தில், எதன் மேலும், நாம் அதீத நம்பிக்கை வைப்பதில்லை.

தன்னம்பிக்கை இடம் பெறாத வாழ்க்கைமுறை உள்ளதா? இந்த விஷயத்தை மேலும் ஆழமாக ஆராய்வோம். சிறுவனாய் இருக்கும்போது, என் பெற்றோர்களைச் சார்ந்து இருக்கிறேன். வயது வந்ததும், சமூகத்தைச் சார்ந்து வாழ்கிறேன். என் உத்தியோகத்தை, என் ஆற்றலை நம்பி வாழ்கிறேன். இவை எனக்கு உதவாதபோது, மதம், கொள்கை போன்ற ஒன்றில் நம்பிக்கை வைத்து, அதைச் சார்ந்து வாழ்கிறேன். காலமெல்லாம் ஏதோ ஒன்றைச் சார்ந்திருந்தோ அல்லது ஒரு நம்பிக்கையில் பற்று வைத்தோ நம் வாழ்க்கையைத் தொடருகிறோம். அத்தகைய சார்ந்திருத்தல், ஆதரவு, என்னைத் தாங்கிக் கொள்கிறது, சக்தியையும் ஊக்கத்தையும் அளிக்கிறது.

ஆதரவைப் பெறும்போது, கூடவே அதை இழந்து விடுவோமோ என்பது போன்ற பயங்களும் தோன்று கிறது. என் பயத்தால், முரண்பாடுகள் தோன்றி போராட்டங்கள் தொடருகிறது. எதிலும் நம்பிக்கை வைக்காமல், என் சொந்த கருத்துக்களின்படி ஒரே சீராக என் வாழ்வை அமைத்துக் கொள்கிறேன். ஆனால், அந்த ஒரே சீரான வாழ்வும், என் தன்னம்பிக்கையைக் குலைக்கப் பார்க்கிறது. எவ்வளவுக் கெவ்வளவு சீராக இருக்கிறதோ, அந்த அளவிற்கு நான் பலவீனப்படு கிறேன், நிச்சயமற்று இருக்கிறேன், ஊக்கம் குறைந்து இருக்கிறேன். இருந்தாலும், தன்னம்பிக்கையை வளர்த்துக் கொள்ள, நாம் நாடுவது, ஒரே சீரான வாழ்க்கை முறையைத்தான்.

ஒருவர் மீதோ, ஒரு கொள்கை மீதோ, ஒரு அரசியல் கட்சி மீதோ, ஒரு ஒழுங்குமுறை மீதோ, ஒரு அனுபவத்தின் மீதோ, சார்ந்து இருந்து, அதன் ஆதரவைப் பெற்று, அதனால் சக்தி பெறவே, நாம் எப்பொழுதும் விரும்புகிறோம். ஆக, நம்மை நிலை நிறுத்திக் கொள்ள, மற்றவைகளின் ஆதரவைத் தேடிப் பெறுகிறோம். ஆதரவை நம்பி வாழ்வது அதிகரிக்க அதிகரிக்க, பயம் தோன்றுகிறது. நாம் ஏன் பிறவற்றைச் சார்ந்து இருக்கி றோம்? அகத்தில் நமக்குப் பற்றாக்குறை இருக்கிறது, தனிமைப்பட்டு இருக்கிறோம், வெறுமையை உணர் கிறோம் - இதன் காரணமாக, நாம் பிறவற்றைச் சார்ந் திருக்கிறோம். நான் ஆதரவு வேண்டுகிறேன் - ஒன்றில் நம்பிக்கை வைத்து, அதன் ஆதரவைப் பெறுகிறேன். மேலும் மேலும் விஷய ஞானத்தைப் பெருக்கிக் கொண்டு, மேலும் மேலும் நாகரீகத்தை வளர்த்துக் கொண்டு உலகாயதமாகவோ, ஆன்மீகமாகவோ, கற்றுத் தேர்ந்து நம்பிக்கையுடன் இருக்கிறேன் அல்லது குற்றங்குறை கூறிக்கொண்டு நம்பிக்கையில்லாமல் இருக்கிறேன்.

உள்ளூற எதன் மீதும் சார்ந்திருக்காமல், ஆதரவிற்குக் காத்திருக்காமல், வாழ வேண்டும், செயல்புரிய வேண்டும் என்பதான தீவிரம் ஒன்று இருப்பதில்லையா? தன்னம்பிக்கை மிகவும் அவசியம் என்று நம்மில் பலர் நினைக்கிறோம். அனுபவத்தின் தொடர்ச்சியாகவோ அல்லது விஷய ஞானத்தின் தொடர்ச்சியாகவோ தான், தன்னம்பிக்கையை, பலர் கருதுகின்றனர். தன்னம்பிக்கை, எப்பொழுதாவது மனதினை அதன் வரையறைகளின் தாக்கத்திலிருந்து விடுவித்து உள்ளதா? முயற்சியினால் பெற்ற தன்னம்பிக்கையால் சிந்தனைச் சுதந்திரத்தைப் பெற்றுத் தரமுடியுமா அல்லது அதுவே மனதை தளைபடுத்தி விடுமா? மனதிலிருந்து, அனைத்து விதமான சார்ந்திருத்தல்களையும் அகற்றி விட்டு, அதற்கு விடுதலை அளிப்பது சாத்தியமில்லையா? என் தனிமையை, வெறுமையை - அவற்றிலிருந்து தப்பித்து ஓடி விட நினைக்காமல் - என்னால் உணர முடியுமா? அனுபவத்தின் துணை கொண்டோ, விஷய ஞானத்தின் துணை கொண்டோ, வாழ்க்கையை ஒரே சீராக்கி கொண்டு, என் தனிமையை, வெறுமையை உணர்ந்து கொள்ள முற்படாமல் இயல்பாக என்னால் அதை உணர முடியுமா? நம்முடைய யதார்த்த நிலையை உணர முற்படாமல், நாம் தப்பித்துக் கொண்டு ஓடப் பார்க்கிறோம்; ஓட துணை நிற்கும் பல தரப்பட்ட நற்பண்புகளை வளர்த்து விடுகிறோம். பல்வேறு வகைகளில் நம்பிக்கை, விஷய ஞானம், அனுபவம் ஆகியவைகளை வளர்க்கிறோம். நாம், நம்பிக்கையின் ஆதரவில் இருக்கிறோம். ஆனால், அடித்தளத்தில், தன்னந்தனிமையில் இருக்கும் உணர்வு மேலோங்கி யிருக்கிறது. இந்த உண்மை நிலையை நம்மால் பார்க்க முடிந்தால்தான், தனிமையுணர்வுடன் வாழ முடிந்தால் தான், அடித்தளத்தில் தனிமையுணர்வோடு இருக்கிறோம் என்பதைப் புரிந்துகொண்டால்தான், நம்மால் வித்தி

யாசமான, புதிய முறையில் செயல்பட முடியும். ஒரு செயலைப் புரிய, பல்வேறு வழிகளில் முயன்று, மனதை, ஒரு வரையறைக்கு உட்படுத்தி செயல்படும் இந்த நிலையிலிருந்து மாறுபட்டு, செயல்பட முடியும். தயவுசெய்து கவனமாகக் கேளுங்கள், சொல்லப்படும் உண்மையை உங்களால் உணர்ந்துகொள்ள முடியும்.

குறிப்பிட்ட ஒரு சிந்தனை அல்லது சிந்தனா முறையைச் சீராகப் பின்பற்றி நடக்க வேண்டும் என்று வாழ்நாள் முழுதும் நாம் அனைவரும் முயற்சி செய்கிறோம். முரண்பாடில்லாமல் ஒரே சீராக இருக்க வேண்டும் என்ற விருப்பம், நமக்குச் சக்தியளிக்கிறது, ஊக்கப்படுத்துகிறது. ஆனால், இவ்வாறு கட்டுப்பாட்டில் இயங்கும் மனம், குறுகிப் போகிறது. ஒரே சீராக ஒரே தடத்தில் செயல்படும் மனம், மிகவும் குறுகியது, அற்பத்தனமானது. குறுகிய மனதில் சக்தியைச் சேகரித்துக் கொள்ளும் திறன், அபரிமிதமாக உள்ளது; அதன் அற்பத் தனத்திலிருந்து, சக்தியைப் பெறுகிறது. அதன் காரணமாக, நம் வாழ்க்கை, சின்னத்தனப்பட்டு, சுயநலமும் குறுகிய மனப்பான்மையும் மலிந்து, முடங்கிப் போயிருக்கிறது. ஒன்றைச் சார்ந்து, அதன் ஆதரவில் இருப்பது என்பது முரண்பாடுகள், பயம், பொறாமை, போட்டி ஆகியவற்றைத் தூண்டுகிறது. சார்ந்திருத்தல், நமது முயற்சிகளைக் குறுகிய வட்டத்திற் குள் இயங்க வைத்து, எப்பொழுதுமே பயத்தில் நாம் கஷ்டப்படும்படி செய்து விடுகிறது. ஆக, சக்தியைப் பெறுவதற்காக, நாம் ஏற்கும் சார்ந்திருத்தல், எப்படிச் செயல்படுகிறது என்பதைப் புரிந்து கொள்ள முடிகிறதா?

நமக்குள் இருக்கும் தனிமையை வெறுமையை, நம்மால் புரிந்துகொள்ளமுடியாதா? அதிலிருந்து தப்பித்து ஓட முயற்சிக்காமல், வெறுமையை, தனிமையை உற்று

நோக்க முடியாதா? அதை உணர முடியாதா? தனிமையைப் புரிந்து கொள்ளுதல் என்பது, அதற்குத் தண்டனை விதிப்பதற்காக அல்ல - மாறாக, அதைச் சாந்தமாக உணர்ந்து, தனிமையுணர்வில் பொதிந் திருக்கும் முழுப் பொருளையும் உற்றுக் கவனிப்பதற்கே, அதை உணருகிறோம். இவ்வாறு சொல்வதின் பொருள் என்னவென்றால், 'நான், எனது' என்ற உணர்ச்சிகளுக்கு அப்பால் சென்று செயல்பட வேண்டும் என்பதே. 'நான், எனது' என்ற குறுகிய வட்டத்திற்குள் நாம் தற்சமயம் செயல்படுகிறோம். தற்சமயம் நமது செயல்கள் விரிந்து பரந்து இருக்கலாம். ஆனால், ஒரு தலைவருடனோ அல்லது ஒரு கொள்கையுடனோ இணைந்து கொண்ட 'நான், எனது' உணர்ச்சியின் செயல்பாடாகவே, அது இருக்கிறது. எனது அடையாளச் சின்னம் எனக்குப் பெரும் பலத்தையும் அந்தஸ்தையும் கொடுக்கிறது; முடிவுறா போராட்டத்தையும் இன்னலையும் அளிக்கும் 'நான், எனது' என்ற மமதையையும் அது பலப்படுத்து கிறது. அதன் விளைவாக, நமது செயல்கள் அனைத்தும் மனச்சோர்வையும் ஏமாற்றத்தையும் கொடுக்கிறது. இதை அறிவதால், நாம் கடவுளை நாடிப் போகிறோம், மத நம்பிக்கையில் ஈடுபாடு கொள்கிறோம்; அதிலிருந்து பலம் பெற நினைக்கிறோம். ஆனால் அந்த வழியும் 'நான், எனது' என்பதின் விரிவாக்கமாகவும், அதைப் பலப்படுத்துவதாகவும் அமைகிறது. தன்னுள் இருக்கும் தனிமையிலிருந்து தப்பித்துச் செல்ல 'நான், எனது' செய்யும் எந்த வழியாலும், பலனில்லை. கண்டனம் செய்யாமல், முடிவிற்கு வராமல், தனிமை உணர்வையும் 'நான், எனது' என்ற எண்ணத்தையும் முழுமையாகப் பார்த்து புரிந்து கொள்வதற்கு நமக்கு ஆற்றல் இருந்தால் மட்டுமே, 'நான், எனது' என்ற எண்ணத்தால் கிடைத்த சக்தியாக இல்லாத தனி ஆற்றலைப் பெறுவது, சாத்தியமாகலாம். அத்தகைய ஆற்றலினால், புதியதோர்

உலகை, புதியதோர் பண்பாட்டைத் தோற்றுவிக்கக் கூடும்.

**கேள்வி :** *அழகைப் பற்றி நிறைய பேசியுள்ளீர்கள். இப்போது, அவலட்சணத்தைப் பற்றி, எங்களுக்குச் சொல்லுங்கள்.*

**கிருஷ்ணமூர்த்தி :** நாம் அவலட்சணத்தைத் தவிர்க்கிறோம், அதை விட்டு விலகுகிறோம். தீயவை என்று நாம் அழைப்பவைகளைத் தூர வீசி எறிகிறோம், நல்லவை என்று கருதுவதை, வளர்த்துக் கொள்கிறோம். பாவம் என்று அழைக்கப்படுவதை, நம்மை நெருங்க விடாமல் தடுக்கிறோம். பண்புகளை, வளர்த்துக் கொள் கிறோம். அசுத்தமான விகாரமானத் தெருக்களை, அவலட்சணமான முகங்களை, அருவருப்பூட்டும் பழக்கங்களை, அழகற்று இருக்கும் எல்லாவற்றையும் நாம் தவிர்க்கிறோம். அழகு, நல்லவை, பெருந்தன்மை, சிறப்பு என்று நம்மால் அழைக்கப்படுபவைகளைப் பின்தொடர்ந்து, காலமெல்லாம் செல்கிறோம். இவ்வகை செயல்பாட்டின் விளைவு என்ன? அவலட்சணத்திற்கு முகத்தைச் சுளித்து திரும்பிக் கொண்டும், அழகிற்கு முக மலர்ச்சியோடு வரவேற்பு தருவதாலும், என்ன நேரிடு கிறது? நாம், உணர்ச்சியற்ற ஜடங்களாகி விடுகிறோம், இல்லையா?

அவலட்சணத்தை வெறுத்து ஒதுக்கிவிட்டு, அழகை ஆராதிக்கும் உங்கள் செயல், எவ்வாறானது? வாழ்க்கை யின் முழுமையான இயக்கம், அழகு, அவலட்சணம் இரண்டையும் உள்ளடக்கியதாகவுள்ளது. அழகை மட்டும் ஆராதிப்பதால், வாழ்க்கையின் ஒரு பக்கத்தை மட்டுமே பார்ப்பதாகிறது. அவலட்சணம் என்று ஒன்று இருக்கிறதா? அழகு, அழகின்மை இரண்டிற்குமே, மனம், முழுவதுமாக உணர்வுடன் இருக்கலாகாதா?

முரண்பட்ட இரண்டு துருவங்களாக இல்லாமல், இருமை செயல்பாட்டு வழிமுறைகளாக இல்லாமல், அன்பையும் வெறுப்பையும் சிந்தனையால் உணர முடியாதா? தயவுசெய்து, இதைக் கவனியுங்கள். அன்பும் வெறுப்பும் எதிர்மறையான இரண்டாக நாம் காண்கிறோம்; நாம், வெறுப்பைத் தவிர்க்க முயற்சிக்கிறோம், அன்பை வளர்க்க முற்படுகிறோம். வெறுப்பைத் தவிர்க்க முற்படுகையில், எதிர்க்கும் சக்தியை வளர்த்து விடுகிறோம்; அழகின்மையைத் தோற்றுவிக்கிறோம்; நாம் மென்னுணர்வற்ற ஜடங்களாகிறோம்; அவலட்சணம் என்று நாம் எண்ணுவதைத் தவிர்ப்பதால், வாழ்க்கையின் அந்தப் பகுதிக்கு, உணர்வற்றவர்களாகிறோம், அழகு என்று நாம் எண்ணும் பகுதிக்கு மட்டும் உணர்வுள்ளவர்களாக இருக்கிறோம்.

ஆக, அவலட்சணம் என்று கருதப்படுவது தள்ளி வைக்கப்படுகிறது, அழகு எனப்படுவது ஆராதிக்கப்படுகிறது. இப்படிப்பட்ட இரண்டு செயல்முறைகள், தொடர்ந்து நடைபெறுகிறது. இருமையின் விளைவாக மனதில் சச்சரவுகள் தோன்றுகின்றன. அதனால், மனம், சுறுசுறுப்பை இழந்து மந்தமாகிறது; நுட்பத்துடன் புரிந்து கொள்ளாமல் உணர்ச்சியற்று மரத்துப் போகிறது. இவ்வாறிருக்கும் நிலையை, அழகான வானத்தை மட்டுமோ அல்லது வீதியிலிருக்கும் மரங்களை மட்டுமோ அல்லது விண்மீன்களை மட்டுமோ பார்த்துக் கொண்டு, வீதியில் நடப்பதற்கு ஒப்பிடலாம். வானமும் விண்மீன்களும் மரமும் மட்டும் வாழ்க்கையல்ல; புழுதி, நாற்றம், அழுக்கு, விகாரம், கஷ்டங்கள், பட்டினியால் வாடும் குழந்தைகள், கண்ணீர், சிரிப்பு என்று இவையெல்லாமும் கூட, வாழ்க்கை தான். ஒட்டுமொத்த இயக்கம் தான் வாழ்க்கை. ஆனால், மொத்த இயக்கத்தையும் புரிந்து கொள்ளக் கூடிய நுண்ணுணர்வுடன் இருக்க மனம்

இசையவில்லை. அது குறிப்பிட்ட ஒரு சிந்தனைக் கிரமத்தைப் பின்பற்ற முயற்சிக்கிறது. குறிப்பிட்ட ஒரு சிந்தனைக் கிரமத்தைப் பின்பற்றுவது, சிறப்பு மிக்கதாக, நல்லதாக, பண்புள்ளதாகக் கருதப்படுகிறது; அது அந்தஸ்தை, மதிப்பை, செல்வாக்கைப் பெற்றுத் தரு கிறது. மதிப்பிற்குரிய மனம், என்றுமே கடவுளைக் காண முடியாது. (சிரிப்பு) இல்லையில்லை, சிரிக்காதீர்கள் ஐயா! நாம் எல்லோரும் மதிப்பானவர்களாக இருக்க ஆசைப்படுகிறோம். தன்னம்பிக்கையைத் தரும் மாற்றம் இல்லாத ஒரே சீரான வாழ்க்கையானது, 'நான், எனது' என்ற உணர்வைப் பலப்படுத்தி, மதிப்பையும் அந்தஸ்தை யும் பெற்றுத் தருகிறது. பண்புகளினாலோ அல்லது அவைகளை மறுதலிப்பதாலோ, 'நான், எனது' என்ற உணர்வு பலப்படுகிறது.

ஆகவே, அழகானவைகளைப் பின்தொடர்ந்து செல்வது மட்டுமே வாழ்க்கையல்ல; பாவம், மற்றும் அழகின்மை இவைகளைப் பற்றித் தெரிந்து கொள்வது அவசியம். அபரிமிதமான நுண்ணுணர்வும் முழு கவன மும், அழகு, அழகின்மை ஆகிய இரண்டையும் பற்றிய சாத்வீக விழிப்புணர்வும் நமக்குத் தேவைப்படுகிறது. அவையிருந்தால், அழகு என்று ஒன்றுமில்லை, அவ லட்சணம் என்று ஒன்றுமில்லை, எல்லாம் நம் மனதின் நிலைப்பாடே என்பதை நாம் கண்டு கொள்ளலாம். ஆனால், இந்த நிலைப்பாட்டை, குறிப்பிட்ட ஒரு நற்பண்பை வளர்த்துக் கொள்வதின் மூலமாகவோ, அழகான சிந்தனை எனக் கருதப்படும் குறிப்பிட்ட சிந்தனையைப் பின்தொடர்ந்து செல்வதின் மூலமாகவோ அடைந்துவிட முடியாது. கோபம், பொறாமை, காழ்ப் புணர்ச்சி, அன்பு, வெறுப்பு, அவநம்பிக்கை, வாழ்வின் கோரங்கள், கண்ணீர், சிரிப்பு என்று நம் வாழ்வின் மொத்த இயக்கத்தையும் நாம் புரிந்துகொள்ளும்

போதுதான் அழகு, அழகின்மை என்பதெல்லாம், நம் சிந்தனையின் நிலைப்பாடே என்பதைப் புரிந்து கொள்வது இயலும். அசிங்கத்தைத் தவிர்க்கும் ஒருவர், தனது அறையில் அழகான படத்தை மாட்டி, அதற்குப் பூஜை செய்தாலும், மனரீதியிலோ உடல்ரீதியிலோ, அவர் நிறைவு பெறுவதில்லை.

நிச்சயமாக, எது முக்கியம் என்றால், நம்மை முழுமையாகப் புரிந்து கொள்வதும், நம் வாழ்வின் பரிபூரண இயக்கத்தை அறிந்து கொள்வதுமேயாகும். அழகை வளர்ப்பதும், அவலட்சணத்தைத் தள்ளி வைப்பதும் தேவையற்றவை. நம்மில் பலர், பிறரை நல்லவர்/ கெட்டவர் என்று மதிப்பிட்டு தீர்ப்பு கூறுவதிலிருந்தும், நம் சொந்த நிலையையே எண்ணிப் பார்த்து சரி/தவறு என்று தீர்ப்பு வழங்குவதிலிருந்தும், நம் ஒழுக்கத்தைச் சீர்தூக்கிப் பார்த்து எடைபோடுவதிலிருந்தும் மிகுந்த பலத்தைப் பெறுகிறோம். ஆனால், இத்தகைய மதிப்பீடுகளில் கவனம் வைத்தால், நம்மால், நம்மைப் பற்றி அறிந்து கொள்வது என்பது இயலாத காரியம். நாம், குறிப்பிட்ட சிலவற்றை, விழுமைப் பொருட்களாக ஏற்றுக் கொள்கிறோம். நம் கணிப்பில் விழுமைப் பொருளாக இருப்பதின் அடிப்படையில், பிறரை எடை போடுகிறோம், அனுபவம் மற்றும் கருத்துகளை எடை போடுகிறோம். நாம் வழங்கும் தீர்ப்பு, நமக்குப் பலத்தை அளிக்கிறது; அந்தப் பலத்தில் நாம் வாழ்கிறோம்; தன்னம்பிக்கையுடன் செயல்புரிகிறோம். ஆக, நாம் ஏற்றுக் கொண்ட விழுமைப் பொருட்கள் - அதன் அடிப்படையில் நாம் வழங்கும் தீர்ப்பு - தீர்ப்பு நமக்களிக்கும் சக்தி - சக்தியிலிருந்து நம் செயல் என்ற வழிமுறையின் இயக்கம், நம் வாழ்வின் முழுமையை அறியவிடாமல் நம்மை முடமாக்குகிறது. மனோ ரீதியில், மதிப்பீடுகள், தீர்ப்புகள், பலனை

அடைய எடுக்கும் முயற்சிகள், நற்பண்புகள், பாவங் களை ஒதுக்குதல் போன்றவைகளைச் சேகரித்து குவித்து வைத்துக் கொண்டிருக்கிறோம். இவைகள், பின்னணி யிலிருந்து கொண்டு, நம்மைச் செயல்பட வைக்கிறது. இந்த காரணத்தினால், நம்மால், நிகழ்காலத்தில் கணத்திற்குக் கணம் உயிர்ப்புடன் இருந்து கொண்டு செயலாற்ற முடிவதில்லை. மனதளவில், பல கட்டுப்பாடுகளை வைத்துக் கொண்டிருப்பதால், உள்முகச் சுதந்திரத்தோடு, ஞாபகம், மதிப்பீடு போன்ற பின்னணிகளின் தலையீடு இல்லாமல் வாழ்வது, நமக்கு மிகவும் கடினமாக இருக்கிறது. பரிபூரணத்துவத்தைப் பற்றிய விழிப்புணர்வு நம்மிடம் இல்லை.

உங்களிடம் அன்பு, வெறுப்பு இரண்டுமே இருக்கிறது. ஆனால், அன்பை நற்பண்பாகக் கருதுவதால், அதை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று முயற்சித்து வளர்த்துக் கொள்வதால், அத்தகைய அன்பு, அன்பாக பரிமளிப்பதில்லை. 'இதுதான் அன்பு' என்ற பிரக்ஞை யுடன் இருக்கும் ஒருவருக்கு, அன்பைப் பற்றி உண்மையில் தெரியாது; அதே போல், தனது பணிவு, அடக்கம் பற்றிய உணர்வுடன் இருக்கும் ஒருவர், உண்மையில் பணிவற்றவராகிறார்; வாழ்க்கையின் ஒரு பகுதியை வளர்த்துக் கொள்ள இருக்கும் அக்கறையைக் காட்டுவதாக, அது இருக்கிறதே தவிர, உண்மையில் அதுவே அன்போ பணிவோ இல்லை. ஆக, கேட்கப்பட்ட கேள்வியில், முக்கியமாகப் புரிந்துகொள்ள வேண்டியது, எது அழகு மற்றும் எது அழகில்லை என்பதல்ல. வாழ்க்கையின் அங்கங்கள் அனைத்திற்கும், தொடர்புகள் அனைத்திற்கும், நுண்ணுணர்வுடன் ஈடுபாடு கொள்ள வேண்டும் என்பதைதான் முக்கியமாகப் புரிந்து கொள்ள வேண்டும். சமூகம் என்பது சமூகத்தினரிடையே இருக்கும் தொடர்பு, அவ்வளவே. சச்சரவு, களிப்பு, வலி,

துக்கம், விகாரங்கள், கசப்பு இவையனைத்தும் நிறைந்த இந்தச் சமுதாய தொடர்பை என்னால் புரிந்து கொள்ள முடிந்தால், நான் சிந்தனை முதிர்ச்சி பெற்ற மனிதனாகி றேன். ஆனால், வாழ்வை முழுமையாக அறிந்து கொள்ள, என்னை முழுமையாக அறிந்து கொண்டால் தான் முடியும். உணர்வுப் பூர்வமானதையும், உள்ளாழ் மனதையும் சேர்த்து முழுமையான வாழ்க்கையைப் புரிந்து கொள்வதற்கு நிந்தனை செய்யாமல், தீர்ப்பு வழங்காமல், முழுமையாக என்னைப் பற்றிய விஷயங் களை, என்னால் பார்க்க முடியுமேயானால், வாழ்க்கை யையும் முழுமையாக என்னால் பார்க்க முடியும்.

நிந்தனை செய்யாமல், ஒப்பிட்டுப் பார்க்காமல் வாழ்வது எவ்வளவு சிரமமாக இருக்கிறது என்று பாருங்கள். ஏனென்றால், நமது மனம் சதா சர்வ காலமும் ஒப்பிட்டுக் கொண்டும் சீர்தூக்கிப் பார்த்துக் கொண்டும் இருக்கிறது. அவ்வாறு செய்வதில் சக்தியையும், ஊக்கத்தையும் பெறுகிறோம். அழிவைத் தேடித் தரும் அந்தச் சக்தியைப் பெறுவதால், திருப்தியும் அடை கிறோம். நான் புரிந்து கொள்ள வேண்டுமென்றால், ஒப்பிட்டுப் பார்த்தலும் தீர்ப்பு அளிப்பதும் இருக்கக் கூடாது. புரிந்து கொள்ள, நான் சரியான முறையில் கேட்டறிய வேண்டும், விஷயத்தை ஆழமாகச் சென்று பார்க்க வேண்டும். இவ்வாறு செய்ய, அபரிமிதமான பொறுமை வேண்டும், அன்பு வேண்டும், பொறுப்பு வேண்டும் - அதாவது, விசாலமான திறந்த மனம் வேண்டும் என்று அர்த்தமாகிறது. திறந்த மனம் என்றால் வெற்று மனம் அல்ல; அது, மனதின் சலனமற்ற நிலை யாகும். ஆனால், மனம், மேற்கூறியவற்றை எதிர்க்கும். மனம், ஒப்பிடுதலாலும் சீர்தூக்கிப் பார்ப்பதாலும்தான் இயங்குகிறது; அவற்றை, அது, தன் கடமைகளாகக் கருதுகிறது. ஒப்பிடுதலையும் சீர்தூக்கிப் பார்ப்பதையும்

மனதிற்குத் தராமல் மறுத்துவிட்டால், மனம் இல்லாமல் போய்விடும். ஒப்பிடுதல், தீர்ப்பு அளித்தல் என்ற நங்கூரத்தில் நிலை கொண்டிருக்கும் மனம், அவை மறுக்கப்பட்டால், ஆடிப் போய்விடும். மனம் கலங்கிப் போகும் நிலை ஏற்படும் என்றால் நமக்குப் பயமாக இருக்கிறது. அதனால், விதவிதமான அழகு வகைகளை உருவாக்குகிறோம், மற்றும், பல தரப்பட்ட அழகின்மை களைத் தவிர்க்கிறோம். ஆகவே, மனம் ஓயாமல் 'இது அழகு, அது அழகில்லை' என்று ஒப்பிட்டுக் கொண்டும் தீர்ப்பு வழங்கி கொண்டும், இருமை நிலைப்பாட்டின் போராட்டத்தில் இயங்கிக் கொண்டிருக்கிறது. ஆனால், வாழ்க்கையின் பகுபடாத ஒருமை நிலையை, பூரணமாகப் புரிந்து கொண்டால், அங்கு இருமை நிலையின் போராட்டம் இருப்பதில்லை; அப்போது, மனம், தன் நிலைக்கு அப்பால் செல்லக்கூடிய சாத்தியம் உள்ளது. அந்நிலையில் அமைதியும் மோனமும் மனதில் குடி கொள்ள, சத்தியமான ஒன்றை, நீங்கள் பெறக்கூடிய வாய்ப்பும் உள்ளது.

**கேள்வி :** பொறாமை உணர்விலிருந்து எப்படி நான் விடுபடுவது?

**கிருஷ்ணமூர்த்தி :** பொறாமை என்றால் என்ன? இன்னும் அதிகமாக வேண்டும் என்ற ஆசையில் பிறந்ததல்லவா பொறாமை? இன்னும் அதிகமாக விஷய ஞானம், அதிகமாக அதிகாரம், அதிகமாக அன்பு, அதிகமாகப் பாராட்டுதல்கள், அதிகமான தெளிவு - மேலும் அதிகமாகப் பொருட்கள், அதிகமாகக் கருத்து கள், அதிகமாக விஷய ஞானம் என்று ஆசைப்படு கிறோம். 'மேலும் அதிகமாக' என்றால் ஒப்பிடுதல் என்றாகிறதல்லவா? தயைகூர்ந்து, கேளுங்கள்.

'மனம் தான் பொறாமையின் அரியணை' என்ற வாக்கியத்தின், உண்மைப் பொருளை அறியக் கூடிய வகையில், ஒருவரால் அதைக் கேட்க முடிந்தால், பொறாமையிலிருந்து முற்றிலுமாக அவரால் விடுபட முடியும். அதுவும் தொலைதூரத்து எதிர்காலத்தில் அல்ல, இப்பொழுதே, இக்கணமே பொறாமையிலிருந்து விடுதலை பெற முடியும். மனம், முடிவில்லாமல், 'இன்னும் அதிகம் வேண்டும்' என்று கேட்டுக் கொண்டே இருக்கிறது. நமது நாகரிகங்கள் அனைத்துமே அதிக பணம், அதிக சொத்து, அதிகம், அதிகம், மேலும் அதிகம் என்று சம்பாதிப்பதின் அடிப்படையில் அமைந்திருக் கிறது; இதன் விளைவாக, 'உன்னைவிட என்னிடம் அதிகம் உள்ளது' போன்ற ஒப்பிடுதலும், அதனால் போராட்டங்களும் ஓயாமல் நிகழ்ந்து கொண்டிருக் கின்றன. பொறாமையை விரட்ட பொறாமையின்மையை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்று சொல்கிறோம். ஆனால், அதுவும், எதிர்மறையாக அதிகம் கோரும் வேறொரு வகையே. ஆகவே, இன்னும் அதிகம் வேண்டும் என்ற விதத்தில் எண்ணாமல், மனதால் இருக்க முடியுமா? ஒப்பிட்டுப் பார்க்காமல் ஒன்றைப் பற்றித் தீர்ப்பு கூறாமல், மனதால் இருக்க முடியுமா? இப்படி இருந்தால், அது தேக்க நிலை என்றாகாது; மாறாக இன்னும் அதிகம் வேண்டும் என்று மனம் தேடாத நிலையில், ஒப்பிடுதல் இல்லாதபோது, நீங்கள் காலத்தைப் பற்றிக் கவலைப்படுவதில்லை.

'நாளை நான் பெரிய செல்வாக்குடன் இருப்பேன்', 'நான் எதிர்காலத்தில் சந்தோஷமாக இருப்பேன்', 'நான் பெரிய பணக்காரனாவேன்', 'என் இலட்சியத்தை நிறைவேற்றுவேன்', 'நான் விரும்பப்படுவேன்', 'நான் விரும்புவேன்' - இப்படியெல்லாம் சொல்வதில் குறிப்பிடப்படும் 'நாளை' என்னும் கால நிர்ணயம்

உணர்த்துவது 'இன்னும் அதிகம் வேண்டும்' என்பதையே. இன்றைய தன் நிலையை, பிறவற்றுடன் ஒப்பிட்டு பார்த்து, தனக்கு அதிகம் வேண்டும் என்று எண்ணும் மனம், காலத்தின்பாற்பட்ட நாளைய பொழுதின் மனமாக உள்ளது, அல்லவா? அத்தகைய காலத்தின்பாற்பட்ட மனம், 'நான் பொறாமைப் படக்கூடாது' என்று சொல்லும்போது, அதுவும் காலத்தைச் சார்ந்த மற்றொரு வகையாகவுள்ளது இல்லையா? 'நான் இப்பொழுது இதுவாக இருக்கிறேன், இதற்கும் குறைந்து, வருங்காலத்தில் இருப்பேன்' என்ற மற்றொரு வகை ஒப்புமையும் உள்ளது. அதிகம் வேண்டும் என்று கேட்கும் மனம், அப்படிக் கேட்பதை நிறுத்தி விட முடியுமா? அதிகம் வேண்டும் என்ற கோரிக்கை தான் பொறாமை. ஐயா, பிரச்சனையைப் புரிந்து கொண்டீர்களா?

பொறாமையிலிருந்து எப்படி விடுபடுவது என்பது பிரச்சனையல்ல; அது மிகவும் சுலபமான விஷயம். அதிகம் தேவை என்ற விதத்தில் சிந்திக்காமல் இருப்பது எப்படி, ஒப்பிடுதல் செய்யாமல் சிந்திப்பது எப்படி, கால அளவைகளின்படி சிந்திக்காமல் எப்படி இருப்பது, 'நான் இப்படி ஆவேன்' என்ற விதத்தில் சிந்திக்காமல் இருப்பது எப்படி என்பதெல்லாம்தான், உண்மையில் பிரச்சனைகளாக உள்ளன. 'அதிகம்' என்ற கணக்கின்படி சிந்திக்காமல், மனம் எப்பொழுதாவது இருக்கிறதா? அது இயலாத காரியம் என்று சொல்லி விடாதீர்கள். அது உங்களுக்குத் தெரியாத காரியம். உங்களுக்குத் தெரிந்தது எல்லாம் 'அதிகம்' - அதிக விஷய ஞானம், அதிக செல்வாக்கு, அதிக ஆடை அணிகலன்கள், அதிக சொத்து, அதிக அன்பு - எல்லாவற்றிலும் அதிகம் வேண்டும். வேறு சிலவற்றில் குறைவு, மேலும் குறைவு வேண்டுமென்று எண்ணுவீர்கள்.

இவ்வாறு, அதிகம் அல்லது குறைவு என்ற அளவின்படி சிந்திக்காமல் இருப்பது மனதிற்கு சாத்திய மாகுமா? முதலில் இந்தக் கேள்வியைக் கேளுங்கள். பொறாமையிலிருந்து விடுபட எனக்கு நீங்கள் உதவ வேண்டாம். அளவைகள் இல்லாமல் சிந்திப்பது இயலுமா? இந்தக் கேள்வியை எழுப்பி, அதைக் கவனியுங்கள் - இப்பொழுது மட்டுமல்ல, நீங்கள் வீடு திரும்பும்போதும், மின்சார ரயிலில் பயணிக்கும் போதும், பஸ்ஸில் போய் கொண்டிருக்கும்போதும், தனியாக நடந்து போய் கொண்டிருக்கும் போதும், துணிரகங்களைப் பார்க்கும்போதும் - இப்படிப் பல நேரங்களிலும் இந்தக் கேள்வியைப் பற்றி எண்ணிப் பாருங்கள். பெரிய காரில் ஒருவர் போய் கொண்டி ருப்பதைப் பார்க்கும்போது, உங்களை இந்த கேள்வியைக் கேட்டுக் கொள்ளுங்கள். பெரிய அரசியல்வாதியை, பெரிய தொழிலதிபரைப் பார்க்கும்போது இந்தக் கேள்வியை கேட்டுக்கொள்ளுங்கள். அப்பொழுது உங்களுக்கு உண்மை புரிந்துவிடும்; நீங்கள் புரிந்து கொண்ட உண்மை, உங்கள் மனதை 'அதிகம் வேண்டும்' என்ற மனப்போக்கிலிருந்து விடுவிப்பதை உங்களால் காண முடியும். உண்மையை உணர்ந்து கொண்ட மனம், அதிகம் வேண்டுவதிலிருந்து கழற்றிக் கொண்டுவர முயற்சிக்கும் உணர்வுநிலை மனதிலிருந்து, வேறுபட்ட தாக இருக்கிறது. அதிகம் வேண்டும் என்று எண்ணு வதைத் தவிர்க்க வேண்டும் என்று மனதார எண்ணி முயற்சிப்பதும், மற்றொரு வகையான வேண்டுதலே - ஒன்றில், பொருளை அடைய ஆசைப்படுகிறோம், மற்றொன்றில், பேராசைப்படக்கூடாது என்று ஆசைப் படுகிறோம். கேள்வியை, சரியான முறையில் கவனிக்க வேண்டுமென்றால், நீங்கள் 'இது சரி, அது தவறு' என்று தீர்ப்பு வழங்க முற்படக்கூடாது. மேலும், பலனை எதிர்பார்க்காமலும், கிடைக்கும் பலனால் குறிப்பிட்டச்

செயலை நடத்தி முடிக்கத் திட்டமிடாமலும் இருந்தீர் களானால், கேள்வியை உங்களால் அறிந்து கொள்ள முடியும். ஆக, உள்ளபடி, கேள்வியைச் செவிமடுக்கும் போதுதான் பொதிந்திருக்கும் உண்மை வெளிப்படுகிறது. அந்த உண்மை, மனதை 'அதிகம் வேண்டும்' என்ற வேட்கையிலிருந்து விடுவிக்கிறது, பொறாமை அகலுகிறது.

**கேள்வி :** நீங்கள் அடையாளப்படுத்தாமலிருக்கும் (non-recognition) நிலையைப் பற்றிப் பேசியிருக்கிறீர்கள். அந்த நிலை எப்பொழுது வரும்?

**கிருஷ்ணமூர்த்தி :** அடையாளம் காணல் எப்படி வருகிறது என்பதை முதலில் பார்ப்போம். ஞாபகங்கள் இல்லாமல், மனம் இல்லை. பெயரிட்டு அழைக்காத போது, அங்கு மனம் இல்லை. எனக்கு ஒன்றைப் பற்றிய முந்தைய அனுபவம் இல்லாத பட்சத்தில், என்னால் அந்த ஒன்றை அடையாளம் கண்டு கொள்ள முடிவதில்லை, இல்லையா? தெரிந்து கொள்வதால், அனுபவம் கிடைக்கிறது. உங்களை எனக்கு அடையாளம் தெரியாவிட்டால், உங்களைச் சந்தித்த அனுபவம் எனக்கு இல்லை என்று தானே அர்த்தம். அனுபவங்கள் அனைத்தும், அடையாளம் தெரிந்து கொள்வதற்கான வழிமுறையாக இருக்கிறது. மனம், அடையாளம் காட்டும் வழிமுறையாகவுள்ளது. பெயரிடுதல், வாய் மொழியாக்கல், ஞாபகம் ஆகியவை யாவும் அடையாளங்களாகச் செயல்படுகிறது. அடையாளம் கண்டு கொள்ளும் இயந்திரமாய் இருக்கும் என் மனம், எதையும் அடையாளப்படுத்திப் பார்க்குமே தவிர, புதியதை என்றுமே பார்க்க முடியாது. கடந்த காலத்தில் பார்த்ததைக் கொண்டு, மனம் ஒன்றை அடையாளம் காண்கிறது. அனுபவங்கள் அனைத்துமே வரையறைக்குட்பட்டவை. நல்லவை, அழகானவை, அழகற்றவை, மதிப்பு

மிக்கவை, மதிப்பில்லாதவை என்ற முறையில் வகைப் படுத்தி, அடையாளம் கொடுத்து, மனம், அனுபவங் களைப் பெறுகிறது. ஆக, அனுபவங்கள், நமக்கு, சுதந்திரத்தை அளிப்பதில்லை. மாறாக, வரையறைக்குட் படுத்துகிறது. அடையாளம் காணல், மற்றும் அடையாளம் கண்டு கொள்வதால் ஏற்படும் அனுபவம் ஆகியவை, மனதைக் கட்டுப்படுத்தும் தளைகளைப் பலப்படுத்துகிறது. அடையாளம் காண்பது, வெறும் அனுபவமாக மட்டுமே இருப்பதால், அனுபவத்தின் மூலம் சுதந்திரமாகச் செயல்பட, நம்மால் முடியாது. கடந்த காலத்தில் பார்த்ததுடன் இப்போது பார்ப்பது, குணம், தோற்றம் முதலியவைகளால் ஒரே மாதிரியாக இருப்பதால், இதை நான் அடையாளம் காண்கிறேன். அடையாளப்படுத்துதலின் செய்முறையாக, கடந்த காலம் அமைகிறது. அனுபவம் நமக்கு உறுதுணையாக இருந்து பிரச்சனைகளிலிருந்து நம்மை விடுவிக்கும் என்று நாம் சொல்கிறோம். எவ்வளவுக்கெவ்வளவு அனுபவம் அதிகமாகப் பெறுகிறோமோ, அவ்வளவுக் கவ்வளவு விவேகம் அதிகரிக்கிறது என்று கூறுகிறோம். கூடுதல் அனுபவமும், அனுபவத்தால் பெறும் அறிவும், அனுபவச் சேகரிப்பும், நமக்கு விவேகத்தை அளிப்பதாக எண்ணுகிறோம். இந்த எண்ணம் சரியானதா? அனுபவம் ஒவ்வொன்றும் என் சிந்தனையைக் கட்டுப்படுத்துகிறது, சரிதானே? சிந்தனை என்பது அடையாளம் காணல், வாய்மொழி, பெயரிடுதல் ஆகியவற்றின் செய்முறையாக உள்ளது. இக்காரணத்தால், மனம் தன்னை வரையறைக் குட்படுத்திக் கொள்கிறது. பின்னணியில், சேகரிக்கப் பட்டு வைத்துள்ள அனுபவத்தின் மூலம் அடையாளம் கண்டு கொண்டு, அந்தக் குறுகிய வட்டத்திற்குள் மனம் செயல்படுகிறது. இப்படி அடையாளம் காணும் இயந்திரமாய் இயங்கும் மனதால், சத்தியம் என்றால் என்ன, உண்மை நிலை என்ன என்பதையெல்லாம், ஒரு போதும் அறிந்து கொள்ள முடியாது.

உண்மை நிலை என்பது அசலானது, மூல காரண மானது, புதியது, பிறிதொன்றுடன் ஒப்புமைப்படுத்தி அடையாளம் காட்ட முடியாதது. நான் உண்மை நிலையைக் கண்டு கொண்டேன் என்று சொன்னால், நான் கண்டு கொண்டது, என் மனம் தோற்றுவித்த பிம்பத்தை தான். முன்பே நானறிந்திருந்தவைகளில் ஒன்றாக நான் காணும் உண்மை நிலை இருக்கும் பட்சத்தில், அது உண்மையானது அல்ல. தயவுசெய்து உன்னிப்புடன் கேளுங்கள், ஐயா! இப்படிச் செய்வதால் மகிழ்ச்சியுடன் இருக்கலாம் என்ற ஆசையில், மனிதன் பின்பற்றும் அனைத்து கடவுளர்களும், அனைத்து அனுபவங்களும், அனைத்து பிரதிபிம்பங்களும், அனைத்து அடையாளச் சின்னங்களும், அவனுடைய அனுபவங்கள், அடையாளங்கள் ஆகியவற்றின் வெளிப் பாடே ஆகும். விஷயஞானம், மற்றும், அனுபவத்தின் செய்முறையாக விளங்கும் அடையாளம் காணல் ஆகியவற்றால் ஒருவருக்குச் சுதந்திரம் கிடைப்பதில்லை.

எதிர்படும் விஷயத்தை அடையாளம் கண்டு கொண்டு தெரிந்து கொள்ளும் அந்தக் கணத்திலேயே, அந்த அனுபவம் புதியது அல்ல என்பது விளங்கி விடுகிறது. மனம், எப்பொழுதாவது அடையாளம் காணாதிருக்கும் நிலையில் இருக்க முடியுமா? 'முடியாது' என்று உடனே பதில் சொல்லிவிடாதீர்கள். கவனமாய்க் கேட்டு, அதற்கான பதிலைக் கண்டுபிடியுங்கள். மனம், அத்தகைய நிலையில் இருப்பது சாத்தியமில்லை யெனில், புத்தம் புதியது எதுவும் இருப்பதற்கு இடமில்லை, சத்தியம் அல்லது கடவுள் இருப்பதற்கும் இடமில்லை. என்னால் அடையாளம் காணக்கூடிய சத்தியம் என்றால், அது சத்தியமே இல்லை; என்னால் அறிந்து கொள்ளக்கூடிய கடவுள் என்றால், அது கடவுள் அல்ல. நான் அடையாளம் கண்டு கொண்ட சத்தியமும்

கடவுளும், என் கடந்தகால அனுபவத்தின் வெளிப்பாடு, பிரதிபலிப்பு. மனம் அடையாளப்படுத்தும் எதுவும், புதியவையாக இருக்க முடியாது என்ற உண்மையை நீங்கள் உணர வேண்டும். அனுபவங்களின்படி அறிந்து கொள்ளும் மனதால் புதிய சிருஷ்டி, மற்றும், அடையாளச் சின்னங்களைத் தாண்டிய விஷயம், எதையும் செய்ய முடியாது. அடையாளப்படுத்த முடியாதது என்று ஏதாவது இருக்கிறதா? 'ஆமாம், இருக்கிறது' என்று நான் சொல்லும் பதில், உங்களுக்கு உபயோகமில்லை. ஆனால், நான் சொல்வதிலிருக்கும் உண்மையை, நீங்கள் கண்டுபிடிக்க வேண்டும். உண்மையைக் கண்டுபிடிக்க, உங்களையே கேள்வி கேட்டுக் கொள்ள வேண்டும், ஆழமாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்; உள்ளாழ் மனமானது, அடையாளப்படுத்த முடியாதவைகளைப் பற்றி, குறிப்புகள் தர அனுமதிக்க வேண்டும். இம் முறையில், குறிப்புகள் பெற்ற அனுபவம், உங்களுக்கு ஏற்பட்டிருக்கிறதா? ஒரு சில கணங்களாகவே இருக்கலாம் - மனம் சலனமற்று அமைதியாக இருக்கிறது. புதுமை, இங்கு உள்முகமாகத் தோன்றுகிறது. ஆனால், புதியதாக, அறியப்படாததாக இருக்கும் அந்த நிலை, கடந்த கால அனுபவங்களால் உடனடியாக அடையாளம் காணப்படு கிறது. தோன்றிய மோன நிலை புதியதுதான் - ஆனால், மனம், அதை அடையாளப்படுத்தியும், மேலும் அதிகமாக அந்த அனுபவம் வேண்டும் என்று ஆசைப் பட்டும், அந்த நிலையை அனுபவமாக்கி கைப்பற்றி விடுகிறது. ஆக, மனதின் அக்கறை முழுவதும் 'அதிகம்' பெற்று விட வேண்டும் என்பதே.

எதையும் அடையாள முத்திரையுடன் பார்க்காமல், கொஞ்சமும் சலனமில்லாமல், அனுபவங்களைப் பெற ஏங்காமல், அதிகம் வேண்டும் என்ற ஆசையில்லாமல், எதையும் திரட்டி சேகரிப்பதில் தீவிரமில்லாமல், ஆழ்ந்த

அமைதியில் மனம் இருக்கும் நிலை உண்டல்லவா? அப்படிப்பட்ட நிலையில், மனம் இருக்கும்போது மட்டுமே, அடையாளப்படுத்தாத நிலை இருப்பதற்கு வாய்ப்புள்ளது. அமைதியுடன், சலனமற்று, கடந்த கால நினைப்பில்லாமல் மனம் இருக்கும்போது மட்டுமே, சத்தியம், உயிர்ப்புடன் வெளிவரும். ஆனால், அது தான் சத்தியம் என்று நீங்கள் அடையாளம் கண்டுகொண்ட மாத்திரத்தில், அது இருப்பதில்லை; காலத்தின் வலையில், அது, சிக்கிக் கொண்டு விடுகிறது. சத்தியம் என்பது, கணத்திற்குக் கணம் தோன்றி, உயிரோட்டமுள்ள தாக உள்ளது. அதைச் சேகரித்து சேமித்து வைத்துக் கொண்டு, உபயோகிக்க முடியாது. சேமித்து வைத்த சத்தியம், ஜீவனற்றது; அது நடந்து முடிந்து போன விஷயத்தின் ஞாபகம்தானே தவிர, சத்தியம் இல்லை. சத்தியத்தைச் சேமித்து வைக்க முடியாது. மனம், அடையாளப்படுத்தி அறிந்து கொள்ளும் செய்முறையாக இருப்பதால், சத்தியத்தை, அதனால் அறிந்து கொள்ள முடியாது. சத்தியத்தின் அனுபவத்தை, மனதால் பெற முடியாது. சத்தியம் உயிர்ப்பு கொண்டது, ஜீவனுள்ளது. ஜீவனுள்ள ஒன்றை, கடந்த காலத்தின் விளைவாக இருக்கும் ஜீவனற்ற மனதால், புரிந்து கொள்ள முடியாது.

உண்மை நிலையில், சத்தியம் காலத்தின் பாற்பட்டது அல்ல; காலத்தை கடந்த ஒன்றை, மனதால் புரிந்து கொள்ள முடியாது. பொய்த் தோற்றங்களை, மனதால் தோற்றுவிக்க முடியும். பல தரப்பட்ட ஆசைகளின் பிரதிபிம்பங்களை, மனம் உருவாக்க முடியும். அடை யாளச் சின்னங்களை, பிரதிமைகளை, மனம் உருவாக்கக் கூடும். ஆனால், அத்தகைய மாயத் தோற்றங்கள், உண்மை நிலையாகாது. மனம், அடையாளப்படுத்தாத நிலையிலிருக்கும்போது மட்டுமே, உண்மை நிலை உருவாகும். ஆனால், அத்தகைய நிலையை வளர்த்துக்

கொள்ள முடியாது. நீங்கள் அறிந்து கொள்ளாததை, உங்களால் வளர்த்துக் கொள்ள முடியாது. நீங்கள் அறிந்ததாக இருப்பது, சத்தியமாகாது. நீங்கள் அறிந் திருப்பது, குறிப்பிட்ட செயலைச் செய்ய வைக்கும் கட்டுப்பாடாக விளங்கும் ஞாபகம் தானே தவிர, சத்திய மாகாது. ஆக, சத்தியம் என்றால் என்ன, உண்மை நிலை என்றால் என்ன என்றெல்லாம் ஆராயும் மனதால் ஒரு போதும் சத்தியத்தைக் காண முடியாது. அத்தகைய மனதால் சத்தியம் என்ற பெயரில் பொய்த் தோற்றங்களை உண்டாக்க முடியும், சத்தியத்தைப் பற்றித் தத்துவ விளக்கங்கள் தர முடியும். ஆனால், சத்தியத்தை ஒருபோதும், அதனால் அறிந்து கொள்ள முடியாது.

அடையாளப்படுத்தி அறிந்து கொள்ளும் அதன் செய் முறையையும், தளைப்பட்டிருக்கும் அதன் நிலையை யும், மனம் புரிந்து கொண்டால் மட்டுமே உண்மை நிலை வரக்கூடும். உண்மை நிலை தோன்றின், அடையாளம் காண்பதிலிருந்து விடுபட்டு விடுதலையாக முடியும். விடுதலை பெற்ற மனம், சலனமற்று ஆழ்ந்த மோனத்திலிருக்கும். அப்போது, சத்தியத்தை, கரம் நீட்டி பெற்றுக் கொள்ளும் வலிமைப் பெற்றதாக அது உயரக் கூடும். காலத்தைக் கடந்தது சத்தியம். அது எந்த காலத்தையும் சார்ந்ததல்ல. ஆகவே, அதைக் கைப்பற்ற முடியாது, நாளைய உபயோகத்திற்காகச் சேர்த்து வைத்துக் கொள்ள முடியாது, மனதில் பதிவு செய்து வைத்துக் கொள்ள முடியாது, அதற்குப் புதிய பெயர் கொடுக்க முடியாது. ஆக, சத்தியம், சிருஷ்டித்திறன் பெற்றது; அது புத்தம் புதியதாய் என்றென்றும் இருப்பது; ஒரு நாளும், மனம், அதைப் புரிந்துகொள்ள முடியாது.

பிப்ரவரி 22, 1953
மும்பை.

■■■

# 6

# மனிதநேயம் மலர...

மனக்குறை (discontent) என்ற பிரச்சனையைப் பற்றிப் புரிந்து கொள்வது, மிகவும் முக்கியம் என்று நான் நினைக்கிறேன் மனக்குறை என்ற பிரச்சனையின் ஆழமான முக்கியத்துவத்தைத் தேடிக் கண்டுபிடித்து விட்டால், கணக்கற்ற மற்ற பிரச்சனைகளுக்கு, தகுந்த பதிலை, நம்மால் தெரிந்து கொள்ளக் கூடும். நம்மைப் பற்றியே நமக்கு மனக்குறை உண்டு; நமது சுற்றுப்புறச் சூழல், நமது கருத்துகள், நமது உறவுமுறைகள் ஆகிய எல்லாவற்றிலுமே நமக்குத் திருப்தியில்லை. மாற்றத்தைக் கொண்டு வர ஆசைப்படுகிறோம். பாமர மக்களிலிருந்து படித்த மேதைகள் வரை எல்லோருக்குமே திருப்தி யின்மை. பரவி வரும் திருப்தியின்மையால், நாம் பல்வேறு வழிகளில் செயல்படுகிறோம். மனத் திருப்திக்கு வழி காண, பெருமுயற்சி எடுக்கிறோம். உங்களுக்குத் திருப்தி இல்லையென்றால், மகிழ்ச்சி கிட்ட வழி தேடுகிறீர்கள். மனப் போராட்டத்தில் சிக்கித் தவித்தீர்களானால், அமைதிக்கான வழியைத் தேடு கிறீர்கள். மன நிறைவு இல்லாமல், மனக்குறையோடு இருக்கும் நீங்கள் உங்களுக்குத் திருப்தியளிக்கும் பதிலைக் கண்டுபிடிக்க முயற்சி செய்கிறீர்கள். மனக் குறைக்குச் சரியான தீர்வைக் கண்டுபிடிக்க மனம் ஓயாமல் அலைபாய்ந்து கொண்டிருக்கிறது. வாழ்க்கை

யில் ஒரு குறிக்கோளை ஏற்றுக் கொண்டு, அதற்காக உழைப்பதில் திருப்தி காண்பவர்கள் சிலர். தங்கள் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்வதற்கான வழிமுறைகளைக் கண்டு பிடிப்பதில் திருப்தி அடைபவர்கள் சிலர். மனக் குறைக்குத் தீர்வாக, குறிக்கோள், இலட்சியம் ஆகியவற்றை ஏற்றுக் கொண்டு திருப்தியடைய முயற்சிக்கிறோம்.

மனத்திருப்தி என்பது கண்டுபிடிக்கக் கூடிய ஒன்றா? அறிவின் மூலம், அமைதியைக் கண்டுபிடிக்க முடியுமா? அறிந்துகொள்வதால் கிடைப்பதா மகிழ்ச்சி? அல்லது உள்ளதற்கு எதிர்மறையாக ஒன்றை உருவாக்குவதால், மகிழ்ச்சி கிட்டுமா? இந்தத் திருப்தியின்மையும் இன்னல்களும் நம் வாழ்விற்கு மிகவும் அவசியமா? உண்மையில், 'உள்ளது' பற்றி நமக்குத் திருப்தியில்லை. நம் உடைமைகளும் நமக்குத் திருப்தியளிக்கவில்லை. நாம் இருக்கும் விதமும் மனக்குறையைத் தருகிறது. மற்றவர்களுடன் ஒப்பிட்டு நம்மைப் பார்த்துக் கொள்வதாலேயே, நமக்கு மனக்குறை உண்டாகிறது. நீங்கள் படித்தவர், பணக்காரர், அதிகாரமுள்ளவர், மகிழ்ச்சியாக வாழ்பவர். உங்களைப் பார்க்கும் எனக்கு, மனக்குறை உண்டாகிறது. உங்கள் மேன்மையான நிலையா என் மனக்குறைக்குக் காரணம்? அல்லது உள்ளதை மாற்ற வழி தேடும்போது, மனக்குறை உண்டாகிறதா? திருப்தியின்மையைப் பற்றி நன்றாக அறிந்து கொண்டேனென்றால், மகிழ்ச்சி கிடைக்கலாம்; திருப்தியாக இருக்கக் கூடும். திருப்தியுடன் இருப்பதற்கும் மகிழ்ச்சியாக வாழ்வதற்கும், நிர்ணயிக்கப்பட்ட வழிகள் எதுவும் கிடையாது. மனக்குறையைப் பற்றி அறிந்து கொள்வதால் கிடைக்கும் மகிழ்ச்சியும் திருப்தியும், தேக்க நிலைக்கான வழிமுறை அல்ல. ஆனால், திருப்தியற்ற நிலையிலிருக்கும் நான், திருப்தி பெற்றுவிட வேண்டும் என்று மட்டும் எண்ணினால்,

அதுதான் தேக்கநிலைக்கான வழியாகும். நாமெல்லோரும் அந்த வழியைத்தான் விரும்புகிறோம்; மனக் குறையைப் பற்றி அறிந்து கொள்வதற்கு முற்படுவதில்லை. தேக்க நிலையை ஏற்படுத்தாத வழி ஒன்று இருக்கிறதா?

திருப்தியின்மைக்கு எதிர்மறையான ஒன்றை உருவாக்காமல், எதிர்மறையைத் தேடிச் செல்லாமல், திருப்தியின்மையைப் பற்றி ஆராய்ந்து பார்த்து, அதைத் தீர்ப்பதற்கான வழியைக் கண்டுபிடிக்க முடியுமா? இளைஞராக நாமிருக்கும்போது சமுதாயத்தின் நிலை நமக்குத் திருப்தியளிப்பதில்லை. சமுதாயத்தைச் சீர்திருத்தவும் மாற்றியமைக்கவும் எண்ணுகிறோம். அதற்காக, ஒரு குழுமத்திலோ, கட்சியிலோ, மத கூட்டமைப்பிலோ, அங்கத்தினராக சேருகிறோம். அதன்பிறகு, நாம் சார்ந்துள்ள கூட்டமைப்பின் கொள்கையால் பலனடைந்து, சமுதாயத்தை மாற்றிவிட வேண்டும் என்ற நினைப்பில், கொள்கை ஒன்றே நமது அக்கறையாக இருக்கிறது. ஆக, திருப்தியின்மையை, ஒரு கொள்கை வழியில் மடக்கி, கொள்கைக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து, துவக்கத் தில் நமக்கு இருந்த உணர்வை அழித்து விடுகிறோம். நமக்கிருக்கும் முக்கியமான பிரச்சனைகளில் இதுவும் ஒன்றல்லவா? எவ்வளவு எளிதாக நாம் திருப்தியடைந்து விடுகிறோம்!

எது நிஜம், எது உண்மை, வாழ்க்கைக்கு அத்தியாவசியமானது எது போன்ற கேள்விகளை எழுப்பி, ஆராய்ந்து விசாரணை செய்வதற்குத் திருப்தியின்மை இருக்க வேண்டாமா? நான் கல்லூரி மாணவனாக இருக்கும்போது, கொழுந்துவிட்டு எரியும் திருப்தியின்மை என்னிடம் இருக்கிறது. நல்ல உத்தியோகம் கிடைத்தவுடன், என்னிடமிருந்த திருப்தியின்மை,

மாயமாய் மறைந்து விடுகிறது. வேலை கிடைத்ததில் திருப்தியடைந்து விடுகிறேன். என் குடும்பத்தை நடத்தப் போராடுகிறேன். குடும்பம் நடத்த நான் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. அதனால், என் திருப்தியின்மை, சமாதானப்படுத்தப்படுகிறது, அழிக்கப்படுகிறது. எனக்குக் கிடைக்கும் பொருட்களால் திருப்தியடைந்து, மாற்றம் எதுவுமில்லாமல், செக்குமாடாய் வாழ்கிறேன். அற்பப் பொருட்களால் திருப்தியடைந்து மனக்குறை யில்லாமல் இருக்கிறேன். ஆனால், மனக்குறை என்ற நெருப்பு அணையாமல், முதலிலிருந்து கடைசி வரை, பராமரிக்கப்பட வேண்டும்.

திருப்தியின்மை என்றால் என்ன என்ற ஆராய்ச்சியை, விசாரணையைச் செவ்வனே நடத்த திருப்தியின்மை என்ற தீ அணையாமலிருப்பது அவசியம். நற்பண்புகளாலும் நல்ல குணநலன்களாலும் கொள்கைகளாலும் செயல்களாலும், மனம், ஒரு பழக்கவழக்கத்தை நிறுவிக் கொண்டு, அதையே மனக்குறைக்கு மருந்தாக, எளிதில் ஏற்றுக் கொண்டு, கட்டுப்பட்டு இருந்து விடுகிறது. இது, நமக்குப் பழக்கப்பட்ட வழிமுறைதான். ஆனால் நமக்குள்ள பிரச்சனை எப்படித் திருப்தியின்மையை சாந்தப்படுத்துவது என்பதல்ல; மாறாக எப்படி அதைக் குமுறும் நெருப்பாக, துடிப்புள்ளதாக, உயிர்நிலையான தாக வைத்திருப்பது என்பதே. அனைத்து சமய நூல்களும், குருமார்களும், அரசியல் முறைகளும், மனதைச் சாந்தப்படுத்துவதாகவே உள்ளன. மனதை அமைதியாக்கி, தணிந்து போகச் செய்து, திருப்தி யின்மையை ஒரு புறமாக ஒதுக்கி வைத்து, ஏதோ ஒரு வகை மனத்திருப்தியில், மனதை உழலச் செய்வதாகவே சமயமும் அரசியலும் உள்ளது. எது உண்மை என்பதைக் கண்டறிய திருப்தியின்மையுடனிருப்பது மிகவும் அவசியமானது அல்லவா?

நாம் ஏன் மனத்திருப்தியில்லாமல் இருக்கிறோம்? புரட்சி, மாற்றம் - இவைகளை, திருப்தியின்மை தோற்றுவிக்க முடியுமா? திருப்தியின்மையின் இயல்பை அறிந்து கொண்டால்தான், மாற்றம் ஏற்படக்கூடுமா? எதில் திருப்தியில்லாமல் இருக்கிறோம்? இந்தக் கேள்விகளை ஆராய்ந்து பார்த்தால், பதில் கிடைக்கலாம். எந்த விஷயத்தில் திருப்தியில்லாமல் இருக்கிறோம்? 'உள்ளது' பற்றி நமக்குத் திருப்தியில்லை. 'உள்ளது' என்பது சமுதாய நடப்பாக இருக்கலாம், 'உள்ளது' என்பது உறவு முறையாக இருக்கலாம், 'உள்ளது' என்பது நம்மைப் பற்றிய கணிப்பாக இருக்கலாம் - நாம் எப்படி இருக்கிறோம் என்பது, அலைபாயும் நம் எண்ணங்கள், நம் ஆசைகள், நம் மனச் சோர்வுகள், நம் எண்ணிலடங்கா பயங்கள் இவற்றின் ஒட்டுமொத்தமே. உள்ளவற்றிலிருந்து வெளியேறிவிட்டால், மனக்குறைக்குத் தீர்வு கண்டு விடலாம் என்று எண்ணுகிறோம். ஆக, நம் மனம் விழைவதெல்லாம், 'உள்ளதை' மாற்றியமைக்கத் தேவையான ஒரு வழிமுறையே. எனக்கு அதிருப்தி ஏற்பட்டால், நான் திருப்தி அடைய தேவைப்படும் வழியை நாடுகிறேன். உடனே, என் மனம், அந்த வழிமுறையில், மற்றும், அதைக் கடைப்பிடிப்பதில், முழு கவனமும் செலுத்துகிறது. ஆகவே, தகிக்கும் திருப்தியின்மையைப் பற்றி, நான், இப்போது அக்கறை காட்டுவதில்லை - திருப்தி வேண்டி, வழிமுறைகளில் கவனம் செலுத்துகிறேன். திருப்தியின்மைக்குப் பின்னால் இருப்பதைக் கண்டுபிடிப்பதில்லை. நாம் தகிக்கும் மனக்குறைத் தீயிலிருந்து, எரியும் மனக்கவலையிலிருந்து தள்ளிப் போகவே துடிக்கிறோம். - தீயின் காரணத்தில், நமக்கு அக்கறையில்லை.

'உள்ளதை'ப்பற்றி நாம் திருப்தியில்லாமல் இருப்பது உண்மை. 'உள்ளதை' உள்ளபடி ஆராய்வது

என்பது மிகவும் கடினமான விஷயம். கணத்திற்குக் கணம், நான் எப்படி இருக்கிறேன் என்ற ஆராய்ச்சி தேவை. இது, மனதின் கற்பனைத்திறத்தால் இட்டுக் கட்டப்பட்ட 'உன்னத ஆன்மா'வைப் பற்றிய ஆராய்ச்சி இல்லை. இது 'உள்ளதை' பற்றிய ஆராய்ச்சி. இந்த ஆராய்ச்சி மிகவும் கடினமானது. ஏனென்றால், நம் மனம், எப்பொழுதும் உள்ளதைப் பற்றிய பரீட்சையில் திருப்தி அடைவதில்லை. 'உள்ளதை' மற்றொன்றாக மாற்றுவதில், அது குறியாக இருக்கிறது. 'உள்ளதை' குற்றஞ்சாட்டியோ நியாயப்படுத்தியோ அல்லது ஒப்பிட்டுப் பார்த்தோ, அதை வேறொன்றாக மாற்ற மனம் எந்நேரமும் ஆசைப்படுகிறது. உங்கள் மனதின் செயல் பாட்டை ஊன்றிக் கவனித்தீர்களானால், அது, 'உள்ளதை' நேருக்கு நேர் சந்திக்கும்போது, உள்ளதைக் கண்டனம் செய்கிறது. பிறகு 'உள்ளது' என்னவாக இருக்க வேண்டும் என்று, மற்றவைகளுடன் ஒப்பிட்டுச் சொல் கிறது அல்லது 'உள்ளதின்' நிலையை நியாயப்படுத்து கிறது. இவ்வாறெல்லாம் செய்வதால், மனக்கலக்கமும், வேதனையும் கவலையும் ஏற்படுவதால், 'உள்ளதை' தள்ளி வைக்கிறது.

'உள்ளதை' அறிந்து கொள்வதால், மனக்குறை நீங்குகிறது. 'உள்ளதை' அறிந்து கொள்ள, திருப்தி யின்மையைப் பற்றி ஆராய வேண்டும். ஆகவே, திருப்தி யின்மையை அடக்கி வைக்காமல், எரியும் நெருப்பாக வைத்திருப்பதற்கான ஊக்கத்துடன் இருக்க வேண்டும். உள்ளதை அறிந்து கொள்வதால் கிடைக்கும் திருப்தி, எண்ண வழிமுறைகளால் வந்ததல்ல. கலக்கத்துடனும் சிதைக்கப்பட்டும் உள்ள மனதின் விளைவாகவும், அது இல்லை. அமைதியை நாடிப் போவதாகவும், உள்ளதி லிருந்து விலகிச் செல்ல வழியைத் தேடும் மனதின் விளைவாகவும் அது இல்லை. கண்டனம், ஒப்புமை,

நியாயப்படுத்துதல் மூலமாக, உள்ளதை மாற்றி விட, மனம் முயற்சி செய்கிறது. அப்படிச் செய்வதால், தொந்தரவு இல்லாத, அமைதியான, சாந்தமான நிலையை அடைந்து விடலாம் என்று நம்புகிறது. மனம், சமுதாயப் பிரச்சனைகளாலும் கலக்கம் அடைகிறது. சமுதாயத்தில் வறுமை, பட்டினி, சீர்கேடு மற்றும் பயங்கரமான இன்னல்களைப் பார்க்கும் மனம், இந்த அவல நிலையை மாற்ற விரும்புகிறது; ஆனால், மாற்ற எடுத்துக் கொள்ளும் வழிமுறைகளில், அது, சிக்கிக் கொண்டு விடுகிறது. ஒப்பிடுதல், சீர்தூக்கிப் பார்த்தல், வேறொன்றாக மாற்ற ஆசைப்படுதல் போன்றவைகளைச் செய்யாமல், 'உள்ளதை' பார்க்க மனதிற்கு ஆற்றல் இருந்தால், அவ்விதமாகப் பார்க்கும்போது, மனக்குறை மறைந்து திருப்தி ஏற்படுவதைக் காணலாம். இத்தகைய திருப்தி, மனதின் விளைவாகத் தோன்றியதல்ல - மனக் குறையைப் பற்றி அறிந்து கொண்டதால் விளைந்தது.

மனம் தோற்றுவிக்கும் திருப்தி, உண்மையில் ஒரு தப்பித்தலே ஆகும். அது பலனளிக்காது. அது ஜீவனற்றது. ஆனால், உள்ளதை அறிந்து கொள்வதால் ஏற்படும் திருப்தியானது, சமுதாயத்திலும் தனி நபர் உறவு முறையிலும் தாக்கத்தை ஏற்படுத்தவல்ல ஆழமான புரட்சியைக் கொண்டுள்ளதாக இருக்கிறது. ஆகவே, எண்ண வழிமுறைகளால், திருப்தியின்மையைச் சாந்தப் படுத்தவோ தள்ளி வைக்கவோ, உறங்க வைக்கவோ கூடாது. திருப்தியின்மை என்பது மிகவும் அவசியமான ஒன்று. விளக்கம் பெற, அதைக் கொழுந்துவிட்டு எரிய விட வேண்டும், உயிர்ப்புடன் வைத்திருக்க வேண்டும்.

நமக்குள் சச்சரவுகள் ஏராளம். அதனால், உலகம் அழிவை நோக்கிச் சென்றுக் கொண்டிருக்கிறது. ஆபத்தான நிலைமை தொடருகிறது, போர்கள் தொடரு

கின்றன; பட்டினியும் இன்னல்களும் கோரத் தாண்டவம் ஆடுகின்றது; நிறைய செல்வாக்கும் அந்தஸ்த்தும் பெற்ற பெரும் பணக்காரர்கள் ஒரு பக்கம், பசி பட்டினியால் வாடும் ஏழைகள் ஒரு பக்கம். இந்தப் பிரச்சனைகளுக்குத் தீர்வு காண தேவைப்படுவது, புதிய சிந்தனை முறையோ பொருளாதாரப் புரட்சியோ அல்ல; தேவைப்படுவது என்னவென்றால், 'உள்ளதை'ப் பற்றி அறிந்துக் கொள்ளு தலும் திருப்தியின்மையைப் பற்றி ஆராய்ந்து அறிவதும் தான். அத்தகைய அறிதல், புரட்சிகரமான கொள்கை களால் சாதிக்க முடியாத அளவிற்கு, மிகப் பெரிய அளவில் புரட்சியைக் கொண்டு வரக்கூடியது. மாறுபட்ட பண்பாடு, வேறுபட்ட மதநெறிகள், மாந்தருக்கிடையே புதியதோர் உறவுமுறை, மனிதநேயம் ஆகியவற்றைக் கொணர, 'உள்ளதை' அறிதலாலும் மனக்குறையைப் புரிந்து கொள்வதாலும் உண்டாகும் புரட்சி, மிகவும் தேவைப்படுகிறது.

**கேள்வி :** நீங்கள் யார்? நான் கேட்டுக் கொண்டு இருப்பது, யாருடைய உரையை? 'எந்தக் குருவையும் சார்ந்து இருக்காதீர்கள்' என்று சொல்கிறீர்கள்; 'நான் சொல்வதைக் கேளுங்கள்' என்றும் சொல்கிறீர்கள்; உங்கள் உரையைக் கேட்பது என்பது எல்லோரையும் விட மிகவும் மேன்மையான குருவின் உரையைக் கேட்ப தாகும். எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது. நான் என்ன செய்ய?

**கிருஷ்ணமூர்த்தி :** பேச்சாளர் யார் என்று தெரிந்து கொள்வது, உண்மையிலேயே அவ்வளவு முக்கியமான விஷயமா? நிச்சயமாக, ஒலி பெருக்கியைக் கண்டு பிடித்தவர் யார் என்பது முக்கியமில்லை. ஆனால், ஒலி பெருக்கி மூலம், உங்கள் காதுகளை வந்தடையும் விஷயம் மிகவும் முக்கியமானது. விஷயத்தை ஒலிக்கும்

குரலுக்கு எந்தவித முக்கியத்துவமும் இல்லை. குரலுக்குச் சொந்தக்காரர் யார், படித்தவரா, பண்பாளரா என்பதெல்லாம் கணக்கில் எடுத்துக் கொள்ளவே வேண்டாம். ஆனால், குரல் வெளிப்படுத்தும் விஷயங்களும், அவை எதை உணர்த்துகின்றன என்பதே மிகவும் முக்கியமாகும். சொல்லப்படும் விஷயத்தைப் புரிந்துகொள்வது உங்களைப் பொறுத்தது, குருவையோ குரலையோ சார்ந்ததில்லை. சொல்லப்படுவதை நீங்கள் எப்படிப் புரிந்து கொள்கிறீர்கள், உங்கள் இயல்பிற்கேற்ப எப்படி மொழிபெயர்ப்பு செய்கிறீர்கள், நடைமுறையில் அதை எப்படிச் செயல்படுத்துகிறீர்கள் என்பதெல்லாம் உங்களைப் பொறுத்தது. ஆகவே, மறுபடியும் சொல்கிறேன் - குரல் முக்கியமானதல்ல; எது முக்கியம் என்றால் சொல்லப் படுவதைக் கேட்பதே.

நீங்கள் எந்த விதத்தில் கேட்கிறீர்கள்? பேச்சை, உங்கள் திட்ட வடிவமைப்புகளோடு இணைத்துக் கேட்கிறீர்களா அல்லது அவைகளின் தாக்கத்தின் மூலமாகக் கேட்கிறீர்களா? உங்கள் குறிக்கோள்கள், ஆசைகள், பயங்கள், கலவரங்கள் ஆகியவை பின்னணி யில் இருக்க, அவற்றின் மூலமாகப் பேச்சைக் கேட்கி றீர்களா? உங்களுக்கு இதமாக இருப்பவைகளை மட்டும் தேர்ந்தெடுத்துக் கேட்கிறீர்களா? உங்களுக்கு மனநிறைவு, திருப்தி, சுகம் அளிப்பவைகளையும், அந்த நேரத்திற்கு உங்கள் கஷ்டத்தைத் தீர்க்கக் கூடியவைகளையு ம் மட்டும் கேட்கிறீர்களா? உங்கள் ஆசைகளின் திரை வழியாக நீங்கள் கேட்டீர்களேயானால், நீங்கள் உங்கள் குரலைத் தான் கேட்கிறீர்கள் என்பது தெளிவு; உங்கள் விருப்பங் களைதான் கேட்கிறீர்கள். இப்படிக் கேட்பதிலிருந்து வேறுபட்டு, வேறு வகையில் கேட்கக்கூடுமா? சொல்லப் படுவதை மட்டுமே கேட்காமல் எல்லாவற்றையுமே கேட்பது எவ்வாறு என்று கண்டுபிடிப்பது முக்கிய

மல்லவா? தெருவின் இரைச்சல், பறவைகளின் குரலொலி, ரயிலின் சப்தம், ஆர்ப்பரிக்கும் கடலின் அலையோசை, உங்கள் கணவர் / மனைவியின் பேச்சு, பிஞ்சுக் குழந்தையின் அழுகை போன்ற பல தரப்பட்டவைகளை எவ்வாறு செவிமடுக்க வேண்டும் என்று அறிந்து கொள்வது முக்கியமல்லவா? கேட்கப்படும் விஷயத்தை, தன் சொந்த விருப்பு வெறுப்புகளின் வெளிப்பாடாகத் திரிக்காமல் கேட்பதுதான் முக்கியம். நமக்குள் இருக்கும் அனுபவம், ஞாபகம், விருப்பு, வெறுப்பு போன்றவை திரைச்சீலைகளாக நடுவிலிருந்து கொண்டு, கேட்பதை, உள்ளபடி கேட்கவிடாமல் தடுப்பதால், அவைகளை ஒதுக்கி வைத்துவிட்டு, உண்மையில் கேட்க, நம்மால் முடியுமா?

உண்மையில் கேட்பது என்றால் என்ன என்பதுதான், கேட்கப்பட வேண்டிய முக்கியமான கேள்வி. அதற்கான விடையைக் கண்டுபிடிப்பதில்தான், நம் அக்கறை இருக்க வேண்டும். பேச்சாளர் யார், அவர் நல்லவரா, கெட்டவரா, அவர் பெரிய குருவா சின்ன குருவா என்ற கேள்விகள் சம்பந்தமில்லாதவை, பொருத்தமற்றவை. நீங்கள் எந்த முறையில் கேட்கிறீர்கள், உங்களை நீங்கள் எவ்வாறு உற்று நோக்குகிறீர்கள் என்பன போன்றவற்றை இந்த உரையைக் கேட்பதால் தெரிந்து கொள்ளப் போகிறீர்கள். நான் பேசுவதைக் கேட்டால் மட்டும் போதாது; உங்கள் எண்ணவோட்டத்தின் போக்கையும் கவனியுங்கள். எவ்வாறு உங்களுக்குப் பிடித்ததை முன்நிறுத்திக் காட்டுகிறீர்கள், பிடிக்காததை ஒதுக்கி வைக்கிறீர்கள், சொல்லத் தகாததைச் சொல்லியதற்காக எவ்வாறு வெட்கப்படுகிறீர்கள், எவ்வாறு வெறுப்பதைத் தடுக்க முயற்சிக்கிறீர்கள், புதிய கருத்துகளை எவ்வாறு தள்ளி வைக்கிறீர்கள், புதிய கண்ணோட்டத்தை எவ்வாறு தவிர்க்கிறீர்கள் போன்ற உங்கள் எண்ணங்களைக் கூர்ந்து

கவனித்தால், உங்கள் மனம் எப்படிச் செயல்படுகிறது என்பது வெளிப்படும் அல்லவா? இவ்வாறான மனதின் செயல்பாட்டை நிறுத்தி வைத்துவிட்டு, வேறு முறையில் கேட்பது என்று ஏதாவது உண்டா? ஒருவரால் மனதின் செயல்பாட்டை ஒதுக்கி வைத்துவிட்டு, உண்மையில் பேசப்படுவதைக் கேட்பது சாத்தியமாகுமா?

குருவாக யாராவது இருக்கிறார்களா? எந்த நேரத்தி லாவது குரு எனப்படுபவர் தேவைப்படுகிறாரா? ஆரம்பத் திலிருந்து, புரிந்து கொள்வதின் தலை வாசலுக்கு வந்து சேரும் வரை, குருவின் உதவி நமக்கு அவசியம் என்று நாமெல்லோருமே நினைக்கிறோம். தலை வாசலை அடைந்த பிறகு, குருவின் துணை தேவையில்லை என்றால், அத்தகைய துணையின் பங்கு சிறிதளவே. ஆக, ஆரம்பத்திலும் குருவின் துணை அவசியமில்லை என்றாகிறது. முடிவு என்பது ஆரம்பம் என்பதில் உள்ளடங்கி இருக்கிறது. சத்தியத்தைத் தேடிச் செல்லும் ஒருவர், தலைவாசலை அடைந்த பிறகு அதைத் தேடுவதில் பலனில்லை. துவக்கத்திலிருந்தே, தேடுதல் தொடங்க வேண்டும். நாம் சோம்பேறிகளாக, அவசர புத்திக்காரர்களாக, சந்தேகப் பிராணிகளாக, திருப்தி யற்றவர்களாக இருப்பதால், நமது மனக்குறையிலிருந்து விடுபட, பிறர் உதவியை நாடிச் செல்கிறோம். அவர், நம்மைத் திருப்தியுறச் செய்வார் என்று நம்புகிறோம் திருப்தியின்மையிலிருந்து விடுவிக்கக்கூடிய ஒருவரைக் கண்டுபிடித்து குருவாக ஏற்றுக்கொள்ள விரும்புகிறோம். இந்த மனப்போக்கைப் புரிந்துகொள்வதுதான் மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். திருப்தியின்மையிலிருந்து விலகிச் செல்ல உதவும் குருவோ, சித்தாந்தமோ, அல்லது, நாம், உண்மையில் எப்படியிருக்கிறோம் என்ற விசாரணையைச் செய்து அறிவதிலிருந்து நம்மைத் தடுக்கும் எண்ணங்களோ, முக்கியமானவை அல்ல.

ஆக, எத்தகைய முறையில் கேட்கிறீர்கள் என்பதை அறிந்து கொள்வது முக்கியமல்லவா? மனதின் மேற் கூறிய முன் நிறுத்தல்கள், துருத்தல்கள் இல்லாமல் செவிமடுக்கும்போது, நிகழ்வது என்ன? தயவுசெய்து கவனியுங்கள், கேட்கப்படும் விஷயத்தை, உங்கள் விருப்பங்களுக்கேற்றவாறு சரிகட்டிக் கொண்டு கேட்பதால் என்ன நிகழ்கிறது? கேட்பதை, உங்கள் இயல்பிற்கேற்றவாறு மாற்றம் செய்து கேட்பதால், என்ன நேரிடுகிறது? உங்கள் விருப்பங்களை முன்னிலைப் படுத்தாமல் இருக்கும்போது, எப்படிக் கேட்கிறீர்கள்? உங்களால் அப்படிக் கேட்க முடிகிறதா? கேட்பதற்கு மனம் அனுமதிக்கிறதா? மனம் அனுமதித்து, அப்படிக் கேட்கும் ஆற்றல் உங்களுக்கிருந்தால் என்ன நிகழ்கிறது? அவ்விதமாகக் கேட்பதால் மனதிற்கு ஏற்படும் தாக்கம் என்ன? இது போன்ற கேள்விகளும் ஆராய்ச்சியும் தான் முக்கியமானது. குரு இருக்கிறாரா இல்லையா, சத்தியத்தைப் பிரகடனப்படுத்தும் குருவின் குரலை நீங்கள் கேட்கிறீர்களா இல்லையா என்பதெல்லாம் அவசியமற்றவை. உங்களுடைய விருப்பு, வெறுப்பு, குறிக்கோள் போன்ற திரைகளின் ஊடே கேட்காமல் நீங்கள் முன்னிலைப்படுத்தும் விஷயங்களின் மடிப்புகள் வழியாகக் கேட்காமல், உள்ளதை உள்ளவாறு கேட்கும் போது, நீங்கள் எதைக் கேட்கிறீர்கள்? இதைப் புரிந்து கொள்ள முடிகிறதா?

சப்தத்தையோ, குரலையோ, கடலோசையையோ, எதையாவது நாம் சதா கேட்டுக் கொண்டேயிருக்கிறோம். எண்ணங்களை முன்னிலைப்படுத்தி, அதன்படிக் கேட்காமல், உள்ளதைக் கேட்கும்போது, நீங்கள் எதை யாவது கேட்கிறீர்களா? தயவுசெய்து, உங்கள் மனதின் செயல்பாட்டினைக் கவனியுங்கள், நான் சொல்வதை யல்ல. என் பேச்சை மட்டும் கவனித்தீர்களானால்,

என்னை நம்பி இருப்பவராகிறீர்கள்; என்னைச் சார்ந் திருப்பதால், ஆதரவு கிடைக்காமல் போய் விடுமோ என்றெல்லாம் பயப்படுகிறீர்கள்; சார்பினால் பிணைக்கப் பட்டு அடிமைத்தளைப்படுகிறீர்கள்; இந்த இடர்பாடு களையெல்லாம் தாண்டிச் செல்ல வேண்டி யிருக்கிறது. ஆகவே, துவக்கத்திலிருந்தே யாரையும் சார்ந்து இருக்கா தீர்கள். எவரையும் பின்பற்றிச் செல்லாதீர்கள். முடிவில் எப்படி இருக்கிறீர்கள் என்பது மட்டுமல்ல, ஆரம்பத்தில் எப்படி இருக்கிறீர்கள் என்பதும் கவனத்துக்குரியது தான்.

யாரையும் பின்பற்றிச் செல்லாமல், எண்ணங்களின் குறுக்கீடு இல்லாமல், மனதின் விருப்பு வெறுப்புகள், நிறைவுகள் ஆகியவற்றின் குரலுக்குச் செவிசாய்க்காமல் இருக்கும்போது, மனம் செவிமடுப்பது என்ன? எதையாவது கேட்டுக் கொண்டு இருக்கிறதா? அப்போது, முற்றிலும் திறந்த மனம் அங்கிருக்கிறதல்லவா? அந்த பூரண நிலையில், எதிர்தாக்கங்கள் இல்லை, எதையும் கேட்பதில்லை. ஒருமுகப்பட்ட சிந்தனையில்லை, கருத்தினால் ஈர்க்கப்படுதல் இல்லை, எந்தக் கொள்கை யாலும் கவரப்படுவதில்லை. அது முற்றிலும் சலனமற்ற நிலையல்லவா? அந்நிலையில், மனம் ஆழ்ந்த அமைதி யில் இருக்கிறது, காது கேட்டுக் கொண்டிருக்கிறது. ஆனால், பொதுவாகக் கேட்கிறது, எந்தக் குறிப்பிட்ட ஒன்றையும் கேட்பதாக இல்லை, எதையும் முன்னிலைப் படுத்துவதில்லை. மனம், கொஞ்சமும் சலனமில்லாமல், ஆழ்ந்த மோனத்தில் இருக்கிறது. இத்தகைய நிலையில், குரு என்று யாராவது இருக்கிறார்களா? அங்குக் குரு விற்கு அவசியம் இருக்கிறதா? மனக்குறையைப் பற்றி அறிந்து கொள்ள எடுத்துக் கொள்ளும் முயற்சியின் துவக்கத்திலேயே, மேற்குறிப்பிட்ட நிலையைக் கொண்டு வருவது சாத்தியமில்லையா? அதாவது, அடிப் படையான, மிக முக்கியமான விஷயங்களை, நான்

புரிந்துகொள்ள விரும்பினால், மேற்கூறிய நிலையில், நான் எப்பொழுதும் இருக்க வேண்டாமா? உங்கள் விருப்பங்களையே முன்னிலைப்படுத்தி, அதன் வழியாகச் சொல்லப்படுபவைகளைக் கேட்பதால், உண்மையில் நீங்கள் கேட்கவே இல்லை - நீங்கள் ஏதோ ஒன்றைக் கேட்கிறீர்களே தவிர, உண்மையைக் கேட்ப தில்லை. நீங்கள் கேட்பது, உங்கள் குரலை மட்டும் தான். அந்த உங்கள் குரல், கலக்கத்தின் குரலாக, களிப்பின் குரலாக, பாதுகாப்பின் குரலாக, தன்னைக் கற்பனை செய்துகொள்கிறது. கலக்கம், களிப்பு, பாதுகாப்பு என்பதாக இல்லாமல், குறிப்பிட்ட ஒன்றைக் கேட்பதாக இல்லாமல், வெறுமனே கேட்கும் போது, மனம் பரிபூரண அமைதியில் இருக்கிறதல்லவா? இத்தகைய அமைதி, ஒழுங்குமுறைப் பயிற்சியின் பலனாக, முயற்சியின் முடிவில் கிடைக்கப்பெறும் ஒன்றல்ல. மாறாக, இது, ஆரம்பத்திலேயே புரிந்துகொள்ள வேண்டிய ஒன்று, வாழ்நாள் முழுமைக்கும் கொண் டிருக்க வேண்டிய ஒன்றாகும்.

சத்குரு, விழிப்புணர்வு தருபவர், நல்வாழ்வு தருபவர், சத்தியத்தை அடைய துணையாய் வருபவர் என்றெல்லாம் நீங்கள் கொண்டிருக்கும் கருத்துகளை மொத்தமாகவும் முழுவதுமாகவும் உங்களால் தூர வீசி எறிய முடியுமா? உங்களால் முடியும் என்று நான் சொல்கிறேன். எப்படியென்றால் ஒன்றைச் செவி மடுக்கும்போது, நீங்கள் கேட்பது உங்கள் விருப்பு, வெறுப்பு, திருப்தி ஆசைகள் போன்ற உங்கள் உணர்வுகளே என்பதையும், அவ்வுணர்வுகள், நீங்கள் கேட்பதை உங்களுக்குப் பொருத்தமாக இருக்கும் வகையில் மாற்றம் செய்கிறது என்பதையும் நீங்கள் புரிந்து கொண்டால், அப்போது ஒன்றைக் கேட்பது என்பதில்லை; அங்கிருப்பதெல்லாம், கேட்பது என்ற ஒன்று மட்டுமே. அத்தகைய கேட்டல், காலத்தின்பாற்

பட்டதல்ல, மனதினால் விளைந்ததல்ல.

**கேள்வி :** மகிழ்ச்சி என்றால் என்ன? புதிய அனுபவங்களுக்காக மனம் ஏங்குவது, மகிழ்ச்சியைத் தேடிப் போவதால்தானே? மனவெளிக்கு அப்பால் இருக்கும் மகிழ்ச்சி நிலை என்று ஏதாவது இருக்கிறதா?

**கிருஷ்ணமூர்த்தி :** 'மகிழ்ச்சி என்றால் என்ன?' என்று நாம் எதற்காக ஆராய்கிறோம்? இது சரியான அணுகுமுறையா? இது சரியான விசாரணையா? நாம் மகிழ்ச்சியாக இல்லை. நாம் மகிழ்ச்சியாக இருந்தால், இந்த உலகம் முற்றிலும் வேறுபட்டதாக இருக்கும்; நமது நாகரீகம், நமது பண்பாடு ஆகியவை முற்றிலும் அடிப்படையிலேயே வேறுபட்டதாக இருக்கும். நாம் மகிழ்ச்சியற்ற மனிதர்கள், அற்பமானவர்கள், இன்னலுக்கு ஆளானவர்கள், போராட்டத்தில் சிக்கிக் கொண்டவர்கள், தற்பெருமைக்காரர்கள், உபயோகமற்ற பொருட்களால் சூழப்பட்டவர்கள், அற்ப குறிக்கோள் கள், பணம், பதவிபோன்றவைகளால் திருப்தியடையும் மனிதர்கள். விஷய ஞானம், செல்வம், மாட மாளிகைகள், மக்கட் செல்வங்கள், சொகுசு கார்கள், இனிய அனுபவங்கள் என்று எல்லாம் இருந்தாலும், நாம் சந்தோஷமில்லாத, இன்னல்களால் துன்புறும் மனிதர்கள் தாம். கஷ்டப்படுவதால், சந்தோஷம் வேண்டுமென்று விரும்புகிறோம். எத்தகைய சந்தோஷமாக இருந்தாலும் - சமுதாயம், பொருளாதாரம், ஆன்மீகம் - போன்று எத்துறையைச் சார்ந்ததாக இருந்தாலும், அத்தகைய சந்தோஷத்தை நமக்கு அளிப்பதாக உறுதிமொழி அளிப்பவர்களால், நாம் நடத்திச் செல்லப்படுகிறோம். இன்னல்கள், வலி, தனிமை, கலக்கம் ஆகியவையே 'உள்ளவை'யாக இருக்கின்றன. 'உள்ளவை'யிலிருந்து தப்பித்துச் செல்ல விரும்புகிறோம். அவ்விதம் தப்பித்து ஓடும் ஓட்டமே, நமக்கு அனுபவங்களைத் தருகிறது.

அந்த அனுபவங்களை, நாம் மகிழ்ச்சி என்று சொல்கிறோம். இதைத் தவிர, வேறு விதமான மகிழ்ச்சி இருக்கிறதா?

நான் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும்போது, மகிழ்ச்சி என்று ஏதாவது இருக்கிறதா என்ற என் கேள்வியால் என்ன பயன்? என்னால் கஷ்டத்தைப் பற்றி அறிந்து கொள்ள முடியுமா? எப்படிச் சந்தோஷமாக இருப்பது என்பதில் எனக்குப் பிரச்சனை இல்லை. ஆனால், கஷ்டத்தைப் பற்றி அறிந்து கொள்வதுதான், என் பிரச்சனை. நான் கஷ்டப்படாமலிருக்கும்போது, சந்தோஷமாக இருக்கிறேன். ஆனால், சந்தோஷமாக இருக்கிறேன் என்ற உணர்வு தோன்றிய கணமே அது சந்தோஷம் இல்லை என்றாகி விடுகிறது, இல்லையா? நான் மிக்கப் பண்பாளன் என்று நானே அறியும்போது, பண்பாளனாக நான் நீடிப்பதில்லை. எந்த நிமிடத்தில் நான் மிகவும் பணிவானவன், தைரியசாலி, தயாள குணம் கொண்டவன் என்று நானே கண்டுகொள்கிறேனோ, அந்த நிமிடமே, நான் அவ்வாறாக இருப்பதில்லை. ஆக, நற்பண்பைப் போல, மகிழ்ச்சியும் தேடிச் சென்று அடையக்கூடிய பொருள் அல்ல, வரவேற்று அழைக்கக் கூடிய பொருளும் அல்ல. நற்பண்பை வளர்த்துக் கொள்ள முயற்சிகள் மேற்கொள்ளும்போது, அது ஒழுக்கக் கேடாகிறது. இதன் காரணம் என்னவென்றால், 'நான், எனது' என்ற உணர்வுகள், பண்பை வளர்த்துக் கொள்ள மேற்கொள்ளப்படும் பயிற்சிகளால், வலுவடைகின்றன - 'தான்' என்ற உணர்வு, அந்தஸ்தைப் பெறுகிறது. ஆகவே, துன்பம் என்றால் என்ன என்பதைத் தான் அறிந்து கொள்ள வேண்டும். என் மனதின் ஒரு பகுதி, மகிழ்ச்சியைப் பெற்று விட ஓடிக் கொண்டிருக்கும் போது, துன்பத்திலிருந்து தப்பிக்க வழி தேடிக் கொண்டிருக்கும்போது, என்னால் துன்பத்தைப் பற்றி

அறிந்து கொள்ள முடியுமா? துன்பத்தைப் பற்றி அறிந்து கொள்ளவேண்டுமென்றால், நான் முழுவதுமாகத் துன்பத் துடன் ஒன்றியிருக்க வேண்டாமா? துன்பத்தை ஏற்க மறுக்காமல், அதைக் கண்டனம் செய்யாமல், அதை நியாயப்படுத்தாமல், அதை ஒப்பிட்டுப் பார்க்காமல், முழுவதுமாக அதனுடன் ஒன்றியிருந்து, அதைப் பற்றிப் புரிந்து கொள்ள வேண்டும்.

மனதின் உணர்வுகளை முன்னிலைப்படுத்தாமல், துன்பத்தின் குரலைக் கேட்க, என்னால் முடியுமா? நான் மகிழ்ச்சியை நாடிச் சென்று கொண்டிருந்தால், என்னால் அந்தக் குரலைக் கேட்க முடியாது. ஆக, என் விசாரணை, 'மகிழ்ச்சி என்றால் என்ன?' என்பது இல்லை. மனவெளிக்கப்பால் மகிழ்ச்சி இருக்கிறதா, அந்த மகிழ்ச்சி, நிரந்தரமானதா தற்காலிகமானதா, மகிழ்ச்சி என்பது அனுபவமா இல்லையா, அதைச் சேமித்து வைக்க முடியுமா முடியாதா என்பதெல்லாம் ஆராயப் படத் தேவையில்லை. இது போன்ற ஆராய்ச்சிகளில் இறங்கினாலே, மகிழ்ச்சி காணாமல் போய்விடும் - அப்படி மறையும் மகிழ்ச்சி, மகிழ்ச்சியே அல்ல. துன்பத்தின் குரலை எவ்வாறு கேட்க வேண்டும் என்று எனக்குத் தெரிந்திருந்தால், மகிழ்ச்சி என்றால் என்ன என்பதும் எனக்கு விளங்கிவிடும். துன்பத்தைக் கவனிக்கத் தெரிந்திருந்தால், மகிழ்ச்சியைக் கவனிக்கவும் என்னால் முடியும். ஏனென்றால், மகிழ்ச்சி நான்தான்.

நான் துன்புறுகிறேன்; சாவைக் கண்டு பயப்படு கிறேன்; இறந்த பின்னும் பாதுகாப்புடன் இருக்க விரும்பு கிறேன்; நான் நிரந்தரமானவனாக இருக்க விரும்பு கிறேன்; பதவி, பணம், சுகம் எல்லாம் பெற்று வாழ வேண்டுகிறேன்; நான் தனிமையின் வேதனையால் தவிக்கிறேன். இவற்றையெல்லாம், கூர்ந்து கேட்க என்னால் முடியுமா? அதன்பிறகு, என் பிரச்சனை

மகிழ்ச்சிக்கான வழியைக் காண்பதாக இருக்காது. துன்பத்தின் குரலை எவ்வாறு கேட்பது என்பதுதான் பிரச்சனையாக இருக்கும். எந்தவிதமான விளக்கங்களும் சொல்லாமல், துன்பத்தின் குரலைக் கேட்பதென்பது மிகவும் சிரமமான காரியம்தான். ஏனென்றால், மனம், இன்னல்களுடன் வாழ்க்கை நடத்த மறுக்கின்றது. அப்படிப்பட்ட மனதை, கஷ்டங்களைக் கண்டனம் செய்யாமலும், விமர்சிக்காமலும், நியாயப்படுத்தாமலும் மாற்றாமலும் பார்க்கச் செய்வது, சிரமமான காரியம் தான். ஆனால், இன்னல்களை ஊன்றி கவனித்து, அவற்றின் உட்பொருளை அறிந்து கொண்டு, அதனோடு ஒன்றி அதை நேசித்தால், துன்பத்தின் குரலைக் கேட்க முடியும். வெற்றுத்தனமான கற்பனைகளிலும், திருப்தி யடைய வேண்டி மனம் நாடிச் செல்லும் விருப்பங் களிலும் மூழ்கி விடாமல், துக்கங்களிலிருந்து விலகி ஓடாமல், மனம் இருக்கும்போது மட்டுமே, துன்பத்திற்கு அப்பாலிருக்கும் அந்தக் குரலைக் கேட்பது, சாத்தியமாகும்.

மகிழ்ச்சி இருக்கிறதா என்ற ஆய்வு முக்கியமான தல்ல. துன்பம் என்றால் என்ன என்ற விசாரணையை ஆரம்பத்திலிருந்தே ஊன்றி கவனித்து அதற்கான சரியான விடையைக் காண்பதே மிகவும் முக்கியமானதாகும். சரியான விடையைக் கண்டுபிடிப்பது மட்டும் குறிக்கோளாக இருந்தால், சரியான விடை கிடைக்காது. ஏனென்றால், சரியான விடையைத் தேடத் தொடங்கும் அக்கணத்திலேயே, மனம், அவ்விருப்பத்தை முன்நிறுத்திச் செயல்படுகிறது. அதனால், துன்பத்தின் குரலைக் கேட்பதில், அது அக்கறை காட்டுவதில்லை. மனம், துன்பத்தைப் பற்றி அறிந்து கொள்வதில் கவனம் செலுத்துவதில்லை. ஆனால், துன்பத்தை ஒதுக்கிக் தள்ள வழிவகுக்கும் முறையை அறிய, மனம், அதிக கவனம் செலுத்துகிறது. எதையாவது ஒதுக்கித் தள்ள நினைத்தால்,

அப்படிச் செய்ய உதவும், திருப்தி தரக்கூடிய முறையை, உங்களால் கண்டுபிடிக்க முடியும். ஆக, மனம் நாடுவது திருப்தியைத் தானே தவிர, துன்பத்தைப் பற்றி அறிந்து கொள்வதையல்ல. சொல்லப்போனால், நாம் அனைவரும் வேண்டுவது திருப்தியைத் தானே! பட்டம் பதவியில், உறவுமுறையில், கொள்கைகளில், நாம் எதிர்நோக்குவது திருப்திகரமான நிலையை. எவ்வளவுக்கெவ்வளவு திருப்தி அடைகிறோமோ, அந்த அளவிற்கேற்பக் கஷ்டமும் இருக்கிறது. வாழ்க்கையின் எல்லாப் பக்கங்களிலிருந்தும் சவால்கள் எதிர்படுவதால், திருப்தியிருந்தாலும், மனம் துன்பத்தையும் அனுபவிக்கிறது. மனத்திருப்தி அடைய வேண்டி, துன்பத்திற்கு விடை காண விழைகிறோம். ஆனால், திருப்தியோடு துயரமும் இருப்பதைக் கண்ட மனம், திருப்தி பெற விழைவதை ஒதுக்கி வைக்கிறது. பிறகு, எப்படித் துயரத்திலிருந்து விலகி ஓட நினைக்கிறது, எப்படித் துக்கத்தோடு சேர்ந்து இருக்க இயலாதிருக்கிறது என்பதையெல்லாம், மனம் ஊன்றிக் கவனிக்கிறது. பயத்தை எதிர்கொள்ள இயலாதிருப்பதையும் பார்க்கிறது. அதிலிருந்து விலகி ஓட நினைத்தால்தான், பயம் அதிகரிக்கிறது. பயம், தப்பி ஓடும் உங்கள் ஓட்டத்தில் உயிர்ப்புடன் இருக்கிறது - பயத்தை எதிர்கொள்ளும் போது, அது நிலைப்பதில்லை. 'உள்ளதை' ஊன்றிக் கவனிக்கும்போது தோன்றாத பயம், உள்ளதிலிருந்து தப்பித்து ஓடும்போது தோன்றுகிறது.

ஆக, துயரத்திலிருந்து விலகி ஓட முயற்சிக்காமல், அதைப் பார்க்க என்னால் முடியுமா? விலகி ஓடுதல், துயரத்தையும், பயத்தையும் தோற்றுவிக்கிறது. விலகி ஓடுதல், துயரத்தை என்னால் எதிர்கொள்ள முடியாதவாறு செய்கிறது. துயரத்தை என்னால் ஊன்றிக் கவனிக்க முடிந்தால், விமர்சனங்கள், தீர்ப்புகள், மொழி பெயர்ப்புகள் செய்யாமல், பலனை எதிர்பார்க்காமல் இருந்தால்,

துன்பத்தின் குரலைக் கேட்பது சாத்தியமாகலாம். மனவெளிக்கு அப்பால் சென்று கண்டுபிடிப்பதற்கும் முடியலாம்.

'உள்ளது' பற்றி அறிந்திராமல் இருந்தாலோ, 'உள்ளதை' எதிர்நோக்க ஆற்றல் இல்லாதிருந்தாலோ, மனதைத் தாண்டி அப்பால் சென்று பார்க்க முடியாது. அப்படிப் பார்க்க, மிகுந்த கவனமும், நியாயப்படுத்தாம லும், தீர்ப்பு வழங்காமலும், உள்ளதை உள்ளபடி பார்க்கும் சீரிய சலனமற்ற விழிப்புணர்வும் தேவைப்படு கிறது. அத்தகைய சீரிய நிலையில், பரிபூரண மாற்றம் நிகழ்கிறது; காலத்தாலும் மனதினாலும் அளவிடப்படாத மகிழ்ச்சி அங்குத் தோன்றுகிறது.

**கேள்வி :** பேரறிவைப் பற்றி நீங்கள் நிறைய பேசியிருக்கிறீர்கள். பேரறிவுடன் (intelligence) இருப்பது என்றால் என்ன?

**கிருஷ்ணமூர்த்தி :** மடமை மிக்க மனதால், பேரறிவு என்றால் என்ன என்று தெரிந்து கொள்ள முடியுமா? ஆழமற்ற அற்பத்தனமான மனதால், உயர்வானது, புகழ் பெற்றது என்றால் என்ன என்று தெரிந்து கொள்ள முடியுமா? தயவுசெய்து கவனியுங்கள். ஐயா, கடவுளைப் பற்றி ஒரு அற்பத்தனமான மனம் ஆராய்கிறது. அது எப்படியிருக்கிறதென்றால், பொதுமக்களைச் சுரண்டி பணம் சம்பாதித்த பணக்காரர் கோயில் கட்டியது போல இருக்கிறது; கோயிலைக் கட்டிவிட்டு, கடவுள் யார் என்று பணக்காரர் ஆய்வு செய்கிறார். அத்தகைய மனிதரால், கடவுளைக் காண முடியுமா? அவருடைய மனம், கறைபடிந்தது, கொடுமை மிக்கது, கருமித்தன முடையது, கருணையற்றது, அற்பமானது, குறுகியது, அவருடைய நம்பிக்கைகளால் மூடப்பட்டது; இப்படிப் பட்ட மனிதரால் சத்தியம் என்றால் என்ன, எது நிஜம்,

கடவுள் என்பது என்ன என்பதையெல்லாம் கண்டுபிடிக்க முடியுமா? சிலைகளாலும், சின்னங்களாலும், வழிபாடு களாலும், நூல்களாலும் தன்னைச் சுற்றி அவர் நிரப்பிக் கொள்ளலாம். ஆனால், அவரால் கடவுளைக் கண்டு பிடிக்க முடியுமா? அவர் மனம் அற்பத்தனமானது. அவருடைய கடவுளும் அற்பமானவரே. ஆக, பேரறிவு என்றால் என்ன என்று விசாரணை செய்யும் மடமை மிக்க மனதால், அதனை ஒரு போதும் புரிந்து கொள்ள முடியாது. ஆனால், தான் மடமைமிக்கது என்பதை அது அறிந்திருந்தால், அது ஏற்கனவே பேரறிவுடையதாக வுள்ளது. தயவு செய்து கவனியுங்கள். இது உணர்ச்சி வயப்பட்டு சிரிப்பதற்கான விஷயமில்லை.

நம்மில் பெரும்பாலானோர், குறுகிய, அற்பத் தனமான மனப்பான்மையுடையவர்களாக இருக்கிறோம். ஆகவே, நம்மைப் போன்ற அற்பமான உலகத்தையே நாம் உருவாக்குகிறோம். நாம் சமைக்கும் உலகம், கடவுளின் பிரதிபலிப்பாக இல்லை. பேரறிவு என்றால் என்ன என்று வினவுவது முக்கியமானதல்ல. ஆனால், நம்முடைய குறுகிய மனப்பான்மை, மடமை, அற்பத் தனம் ஆகியவற்றை மாற்றம் செய்ய எண்ணாமல், 'அதை நான் பேரறிவாக ஆக்கவேண்டும்', 'அதை நான் புத்திசாலியாக ஆக்க வேண்டும்' என்றெல்லாம் கூறாமல், நம் மடமையைப் பற்றிய விழிப்புணர்வுடன் இருப்பது தான் முக்கியமானது. தான் அற்பத்தனமாக இருப்பதை உணர்ந்து கொண்ட மனம், அதை மாற்ற எடுத்துக் கொள்ளும் நடவடிக்கைகளும் அற்பத்தனமாகவே இருக்கும். நான் முட்டாளாக இருப்பதை நான் உணர் கிறேன். முட்டாள்தனத்தை ஒழிக்க நான் எடுக்கும் முயற்சிகளும், என் முட்டாள்தனத்தில் பிறந்தவைகளே, இல்லையா? ஆனால், முட்டாளாக இருப்பதைப் புரிந்து கொண்டு, அதற்கு எதிராகச் சவால்விடாமல் அதன்

வழியில் நான் இருக்க முடியுமா? மடமையிலிருந்து மாற்றம் பெற எடுக்கும் முயற்சிகளும், மடத்தன மானவையே என்பதைப் புரிந்து கொள்வது ஒன்றைத் தான் முட்டாள் மனம் செய்யமுடியும். மடமையின் வழியை மாற்ற மடமையால் முடியாது. இதைக் கேட்கும்போது, உங்கள் மனவோட்டத்தையும் கூடவே கவனித்து, நான் சொல்வதில் உள்ள உண்மையைப் புரிந்து கொள்ளுங்கள்.

நமது கலாச்சார பண்பாட்டிலாகட்டும், சமயமுறை களிலாகட்டும், சீர்தூக்கிப் பார்த்துத் தெரிவு செய்யும் வழிமுறைதான் வலியுறுத்தப்படுகிறது. சீர்தூக்கிப் பார்த்து, உயர்ந்ததைத் தெரிவு செய்து ஏற்றுக் கொண்டு, நாம் உயர வேண்டும், மீண்டும் மீண்டும் தொடர்ந்து தெரிவு செய்து, மேலும் மேலும் வளரவேண்டும் என்பதே சமயமும் பண்பாடும் நமக்குத் தரும் போதனைகள். ஆனால், தெரிவு செய்தல் என்பது அழிவிற்கான காரணியாகும். தெரிவு செய்தல், எல்லா நேரங்களிலும் அற்பமானதாகவே உள்ளது. பெரிய உன்னதமான தெரிவு, குறுகிய சிறிய தெரிவு என்றெல்லாம், அதில் வகைகள் இல்லை. தெரிவு செய்யும் மனம், அற்பத்தனமானது. ஏனென்றால், எங்கெல்லாம் தேர்ந்தெடுத்தல் உள்ளதோ, அங்கெல்லாம் மனதின் அற்பத்தனம் உள்ளது. வெறுப்பு, காழ்ப் புணர்ச்சி, தப்பான அபிப்பிராயம், கட்டுப்பாடு ஆகியவைகளின் விளைபொருளாய் இருக்கும் மனம் தேர்ந்தெடுக்கும் எதுவும், தளைபட்டதாகவே இருக்கும். அத்தகைய மனம் பெற்றிருக்கும் அனுபவம், எத்தகையதாக இருந்தாலும், அந்த அனுபவங்களும் தளைபட்டவைகளே. அற்பமான மனம், சீர்தூக்கிப் பார்த்து, உயர்ந்ததாக அது கருதுவதைத் தேர்ந்தெடுப்ப தால், அதன் அற்பத்தனத்திலிருந்து, அதற்கு விடுதலை

கிடைப்பதில்லை. அற்ப மனம் தேர்ந்தெடுத்த மிகச் சிறந்ததும், அற்பமானதே. குறுகிய மனம், ஒரு குறிப்பிட்ட குருவைத் தேர்ந்தெடுத்து அவரைப் பின்பற்ற எண்ணுகிறது. அற்ப மனம் தேர்ந்தெடுத்த குருவும், அற்பமானவரே. உங்களால் தேர்ந்தெடுக்கப்படுவதால், குருமார்கள் எல்லோரும் அற்பமானவர்களே.

ஆகவே, பேரறிவு என்பது தெரிவு செய்யும் வழிமுறைகளாலோ, அனுபவங்களின் மூலமாகவோ, விஷய ஞானத்தின் மூலமாகவோ, வளர்த்துக் கொள்ளக் கூடிய ஒன்றல்ல. கணக்கிலடங்கா அனுபவங்களைப் பெறினும், அற்பத்தனமாக இருக்கும் மனம், அற்பமாக வேதான் நீடிக்கிறது. அது, மையத்தில் அற்பமாக இருப்பதுதான், அதற்குக் காரணம். நீங்கள் வேதங்கள் அனைத்தையும் கற்கலாம்; உபநிஷதங்கள், பகவத் கீதை, கிழக்கத்திய மற்றும் மேற்கத்திய புனித நூல்கள் எல்லாவற்றையும் படிக்கலாம்; இருப்பினும் மனம் அற்பத்தனமாய் இருக்கிறது. ஆகவே, உங்கள் படிப் பறிவும், அற்பமாகவே உள்ளது. எப்பொழுதுமே மனம் அற்பமானதாகவே இருக்கிறதல்லவா? அதனால், அற்பமாகவும் குறுகிய மனப்பான்மை இல்லாமலும் இருக்க முடியுமா என்ன? பேரறிவு என்றால் என்ன என்று விசாரணை செய்வது முக்கியமல்ல. ஆனால், மனம் எப்படித் தெரிவு செய்கிறது, எப்படிச் சீர்தூக்கிப் பார்க் கிறது. எப்படிச் செயல்படுகிறது என்று கண்டுபிடிப்பது மிகவும் முக்கியமல்லவா? என் உரையைக் கேட்பது முக்கிய மல்ல; பேரறிவு பற்றிய நூல்களைப் படிப்பதும் முக்கிய மல்ல. உங்கள் மனதின் இயல்பை ஊன்றிக் கவனித்து, அதைப் பற்றி நீங்கள் அறிந்து கொள்வது மிகவும் முக்கியமல்லவா? 'உள்ளது' பற்றிய திரையை விலக்கினால் மட்டும்தான், பேரறிவு உயிர்த்தெழும். 'உள்ளது' பற்றிய அறிதலில், படைப்பாற்றல் கொண்ட பேரறிவு இருக்கிறது.

**கேள்வி :** பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று அனைத்து சமயங்களுமே வற்புறுத்துகின்றன. பிரார்த் தனையின் சக்தியைப் பற்றி, தயவுசெய்து, நீங்கள் விளக்கிக் கூற வேண்டும். தியானத்திலிருந்து, பிரார்த்தனை எப்படி வித்தியாசப்படுகிறது?

**கிருஷ்ணமூர்த்தி :** நீங்கள் பிரார்த்தனை செய் கிறீர்கள், இல்லையா? எப்பொழுது பிரார்த்திக்கிறீர்கள்? நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கும்போது, பிரார்த்தனை செய்கிறீர்களா? அல்லது மிகுந்த பிரயாசை, துயரம் இருக்கும் வேளைகளில் பிரார்த்தனை செய்கிறீர்களா? காலை வேளையில், பூஜை செய்யும்போது பிரார்த்தனை செய்கிறீர்கள். அது ஒரு நியதி; அது அதிக முக்கியத்துவ மில்லாத, சுவாரஸ்யமில்லாத, ஒரு பாரம்பரியச் செயல் முறை. நீங்கள் கஷ்டத்திலிருக்கும் போது, பிரார்த்தனை செய்கிறீர்கள், இல்லையா? உங்கள் துயரங்களுக்குத் தீர்வு காண, நீங்கள் இறைஞ்சுகிறீர்கள், விண்ணப்பிக்கிறீர்கள். ஆனால், இதிலிருந்து வேறுபட்ட வகை பிரார்த்தனை ஒன்று இருக்கிறது. அது எந்த நியதிக்கும் உட்பட்டதல்ல, அது இறைஞ்சுதலும் அல்ல. அது முழுவதுமாக ஊன்றிக் கேட்பது ஆகும்.

வார்த்தைகளைத் திரும்பத் திரும்பச் சொல்லி, துதிக்கும் அன்றாட வழிப்பாட்டுமுறை, சில வகையான பலனை அளிக்கிறது என்பது வெளிப்படை; ஜபம் செய்யச் செய்ய, நீங்கள் மேலும் மேலும் அமைதி யாகிறீர்கள். ஆனால், வார்த்தைகளை ஜபிப்பதால் வரும் அமைதி, தேக்கம் அடைந்த மந்தமான அமைதி. ஒரு சொற் றொடரை ஜபிப்பதால், மனம் உறங்கிப் போகிறது. ஜபத்தினால் மனதை அமைதிப்படுத்திவிட்டால், நீங்கள் ஏதோ பெரியதாகச் சாதித்துவிட்டதாக எண்ணிக்கொள் கிறீர்கள். ஆனால், அந்த அமைதிக்குப் படைப்பாற்றல்

இல்லை, சரிதானே? அது மந்தமான, சுவாரஸ்யமற்ற அமைதி; வீட்டு விவகாரங்களில் மட்டுமே அக்கறை யுடைய அற்ப மனிதன், குறுகிய வீட்டுச்சூழலில் அமைதி பெற, பிரார்த்தனையும் ஜபமும் செய்வதை ஒத்திருக்கும் அமைதி, அது.

துயரங்கள் தோன்றும் போது, பிரார்த்தனைகள், இறைஞ்சுதல்கள், விண்ணப்பித்தல்கள் எல்லாம் செய்யப் படுகின்றன. தயவு செய்து இதைக் கவனத்துடன் கேளுங்கள். நான் கஷ்டப்படும்போது, அதற்கான தீர்வை எதிர்பார்க்கிறேன். என் மகன், மரணப்படுக்கையில் இருக்கும்போது, நான் ஆறுதலை நாடிச் செல்கிறேன்; அவன் நன்றாகயிருக்கிறான் என்று சொல்ல எனக்கு ஒருவர் தேவைப்படுகிறார். என் வயோதிகத்தில், நான் மரணப்படுக்கையிலிருக்கும்போது, குருவினிடமிருந்தோ, புனித நூல்களிடமிருந்தோ, நண்பர்களிடமிருந்தோ, நான் பாதுகாப்புடன்தான் இருக்கிறேன் என்ற உறுதி மொழியை, நான் எதிர்பார்க்கிறேன். உறுதி மொழியைப் பெற, நான் கெஞ்சுகிறேன், விண்ணப்பிக்கிறேன், விசாரணை செய்கிறேன், கேட்கிறேன். அவ்வாறு கேட்கும்போது, நான் வேண்டும் பாதுகாப்பும், ஆறுதலும், எனக்குக் கிடைக்கிறது. மரணம் என்ற பயங்கரமான இருளை, தன்னந்தனிமையில், முற்றிலு மாக அணைந்து போகப்போகும் நிலையில், மரணத்தைப் பற்றி ஒன்றுமே தெரியாத நிலையில் நானிருக்கும்போது, தெளிவாக எனக்கு எடுத்துரைக்கும்படி, பிறரைக் கெஞ்சுகிறேன். மரணத்திற்குப் பிறகு, அக்கரையில், ஒளி இருப்பதாகவும், துணையிருப்பதாகவும், தகப்பன்சாமி இருப்பதாகவும், எனக்குத் திருப்தியளிக்கும் வகையில் எடுத்துரைக்க, யாராவது எனக்கு வேண்டும். ஆக, நான் கஷ்டப்படும்போது, பிரார்த்தனை செய்கிறேன். என் விருப்பத்திற்கேற்ப என் பிரார்த்தனைக்குப் பதில்

கிடைக்கிறது. இது நம்பிக்கையற்றவனின் கூற்று அல்ல - இதுதான் உண்மை.

நான் துயரத்தில் உழல்கிறேன். ஆயிரக்கணக்கான மக்களுக்கு, நான் இழைத்த கொடுமைகளாலும், நான் நடந்து கொண்ட விதத்தாலும்தான், இப்பொழுது நான் துயரத்தில் இருக்கிறேன் என்று ஒருவர், என்னிடம் சொல்கிறார். அவர் சொல்வதிலிருக்கும் உண்மையை, என்னால் எதிர்கொள்ள முடியவில்லை; என் கலக்கம் தீர்ந்து அமைதியுற வேண்டுகிறேன், எனக்கு ஆறுதல் தேவை - எனக்குத் திருப்தியளிக்கக்கூடிய வகையில் பேசியவரைத் தேடிச் செல்கிறேன், அல்லது, கஷ்டத்தி லிருக்கும்போது, நான் பிரார்த்தனை செய்கிறேன். அப்பிரார்த்தனையில், ஒளியைப் பற்றியோ, பறவையைப் பற்றியோ, கடலைப் பற்றியோ ஒரு படத்தைப் பற்றியோ தியானிக்கிறேன் - என் கஷ்டம், தற்காலிகமாக விலகு கிறது. நீங்கள் உடல்நலக்குறைவோடு இருக்கும்போது, வலியைப் பற்றி எண்ணுவதிலிருந்து மாற்றி, உங்கள் மனதைத் திசை திருப்புவதால், உங்கள் உடல்வலி குறைந் திருப்பதாக நீங்கள் உணர்வதைக் கவனித்திருக்கிறீர்களா? இன்று அனுபவித்துக் கொண்டிருக்கும் துயரங்களி லிருந்தும், போராட்டங்களிலிருந்தும், மனதை விலக்கி, அதைப் பிரார்த்தனையில் திசை திருப்பிவிட்டால், மனதிற்கு அமைதி கிடைக்கிறது. இப்படிக் கிடைக்கும் அமைதியால் பலனில்லை. பிரார்த்தனை, மனதிற்கு ஒரு விதமான சாந்தத்தை, அமைதியைக் கொடுக்கிறது. அந்த அமைதி, சாந்தப்படுத்தும் மருந்தாகச் செயல்படுகிறது. இதற்கு நீங்கள் 'விஸ்கி' சாப்பிட்டால்கூட, அமைதி கிடைக்குமே! 'நான் கஷ்டப்படக்கூடாது, அவ்வளவுதான். கஷ்டத்தைப் பற்றிய ஆராய்ச்சி எல்லாம் வேண்டாம், எதையும் கண்டுபிடிக்க வேண்டாம்' என்று நீங்கள் நினைக்கிறீர்கள்; உங்கள் அக்கறையெல்லாம்,

எப்படியாவது சுகமும் ஆறுதலும் பெற்றுவிட வேண்டும் என்பதில்தானிருக்கிறது. ஆகவே பிரார்த்தனை, நீங்கள் வேண்டும் ஆறுதலை அளிக்கிறது. உங்கள் விருப்பம் தீவிரமாக இருக்கையில், நீங்கள் பெறும் திருப்தியும் அதிகமாகவுள்ளது.

இன்று, பிரார்த்தனை என்ற வார்த்தை, மிகப் பெரிய அளவில் துஷ்பிரயோகம் செய்யப்பட்டுள்ளது. நடைமுறையில் பொருள்படும் விதத்திலிருந்து மாறுபட்டு, முற்றிலும் வேறான பொருள் கொண்டதாக 'பிரார்த்தனை' என்ற வார்த்தையை உபயோகிக்கக் கூடுமா? தியானம் என்றால் என்ன என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியுமேயானால், பிரார்த்தனை என்றால் என்ன என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியலாம் - அற்பமான மனதின், மடத்தனமான பிரார்த்தனையைப் பற்றி அல்ல, மிகச் சிறந்த பிரார்த்தனையைப் பற்றி, புரிந்து கொள்ள முடியலாம்.

தியானம் என்றால் என்ன? இதைக் கண்டு பிடிப்பதற்குத் தியானிப்பவர் யார் என்பதை, நீங்கள் அறிந்து கொள்ள வேண்டும். தியானிப்பவர் என்றால், ஏதோ சிகரத்தில் இருப்பவராக இல்லை, உட்கார்ந்து கொண்டு, கண்களை மூடி, தியானம் செய்ய தொடங்குபவரைப் பற்றி, அறிந்து கொள்ள வேண்டும். தியானிப்பவரைப் பற்றி அறிந்து கொள்ளாமல், தியானத்தைப் பற்றி அறிந்து கொள்ள முடியாது. ஏனென்றால், தியானத்தைத் தியானிப்பவரிடமிருந்து பிரித்துப் பார்க்க முடியாது. தியானிப்பவர் இல்லாமல் தியானம் இல்லை. தியானிப்பவர், தன்னை அறிந்து கொள்ளாமல் அமைதி தோன்றுவதில்லை. ஆக, தியானத்தைப் பற்றி அறிந்து கொள்ள, தியானிப்பவரை அறிந்து கொள்வது அவசியம். தியானிப்பவரை அறிந்து கொள்வதால், தன்னைப் பற்றி அறிதலும், விவேகமும்

உண்டாகிறது. பேச்சைக் கேட்பதோடு மட்டும் நிறுத்தி விடாதீர்கள். உங்களைப் பற்றி அறிந்து கொள்ளுங்கள்.

தன்னையறிதலே, விவேகத்தின் துவக்கம். குறுகிய மனம், தியானம் செய்தாலும், பத்து வருடங்களுக்கு அது தியானம் செய்த பின்னும், அது குறுகிய மனமாகவே இருக்கும். இதுபோன்றுதான் தியானம் செய்யும் பலருடைய சோகக்கதையும் உள்ளது. பாரம்பரியம், கொள்கைகள் போன்றவைகளில் தங்களை முற்றிலுமாக அடைத்துக் கொண்டிருக்கும் இவர்களுக்குள், எந்த நூதனமான கருத்துகளும் நுழைய முடியாது. அவர்கள் அற்பமானவர்களாக, கலக்கம் மிக்கவர்களாக, ஓயாமல் எதையோ தேடிக் கொண்டிருப்பவர்களாக வாழ்கிறார்கள். தியானம் செய்பவர், தன்னைப் பற்றி அறிந்துகொள் வதைத் தொடர்ந்து கணத்திற்குக் கணம், நாள்தோறும் செய்து கொண்டிருக்க வேண்டும் - அவர் எப்படியிருக் கிறார், எப்படியில்லை, அவர் ரயிலில் பயணிக்கும் போதும், அவர் தன் மனைவியிடம் பேசிக் கொண்டிருக் கும் போதும், அவர் தன் வேலைக்காரனைத் திட்டும் போதும், பகட்டுத்தனமாக நடந்து கொள்ளும் போதும் - இப்படி எல்லா சந்தர்ப்பங்களிலும், அவர், தன்னைப் பற்றி அறிந்து கொள்வதை, தொடர்ந்து செய்ய வேண்டும்.

இவ்வாறாக தன்னை அறிந்து கொண்டதின் மூலம், அவரால், தியானிப்பவரின் செயல்முறையையும் தியானிப்பவர் எப்படி உருவாகிறாரென்பதையும் அறிய முடியும். தியானிப்பவர், தியானம் செய்கிறார் என்று, இரண்டுபட்டு எதுவுமில்லை என்பதும், தியானம் ஒன்று மட்டும்தான் அங்கு இருக்கிறது என்பதும், தியானத்தி லிருந்து தனித்து தியானிப்பவர் என்று தனியாக ஒருவர் இல்லை என்பதும் அவர் அறிந்து கொள்கிறார். தியானம் மட்டுமே இருப்பதால், அங்கு அமைதி தோன்றுகிறது.

அங்கு, மனம், ஏதோ ஒன்றை நினைத்துக் கொண்டு, அதனைத் தியானம் செய்யவில்லை. மேலும், தியானம் செய்து, அதன் பலனாக ஒன்றை அடைய வேண்டு மென்று எதிர்பார்த்தும், மனம், தியானம் செய்யவில்லை. ஒப்பிடுதல் செய்யாமல், விமர்சனங்கள் செய்யாமல், திறந்த மனதுடன் கேட்பது ஒன்றுமட்டும் இருப்பது போலவே, தியானம் மட்டுமே இருக்கிறது. தியானிப்பவர் என்ற ஒருவர், ஒன்றை நினைத்து தியானம் செய்வது என்று எதுவுமில்லை. காண்பவரே காட்சிப் பொருளும் ஆகும். அங்குப் பயம் இல்லை. பயமில்லாத தால், அமைதி இருக்கிறது. அந்த அமைதியை, குறுகிய, அற்பமான மனதால் நாடிச் செல்ல முடியாது. மனம், எந்த நாளிலும் உன்னதமானதாக இருக்க முடியாது. உன்னதமானது எதுவோ, அதை, மனம் வரவேற்று அழைக்க முடியாது. மனம், தனது அற்பத்தனத்தை மட்டும் தான் அழைக்க முடியும். மனதால் உன்னதத்தை அழைக்க முடியாது. அதனால், சத்தியத்தை, நிஜத்தை அழைக்க முடியாது. ஆகவே, மனதால், நிசப்தமாகவும் எளிதில் ஏற்றுக்கொள்ளும் இயல்போடும், தனித்திருந்து கொண்டும், கேட்டுக் கொண்டும் மட்டுமே இருக்க முடியும்.

பிப்ரவரி 25, 1953
மும்பை.



# 7

# தனித்திருத்தல்

இரண்டாம் தரத்தினராக இருப்பது (mediocrity) என்பது நமக்கிருக்கும் பிரச்சனைகளில் ஒன்று என கருதுகிறேன். இழிவு படுத்தும் அர்த்தத்தில் 'இரண்டாம் தரம்' என்ற சொல்லை நான் உபயோகிக்கவில்லை. ஆனாலும், நம்மில் பெரும்பாலோர் இரண்டாம் தரத்தவர்கள் தாம் என்பது வெளிப்படை. இரண்டாம் தரத் தன்மையிலிருந்து வெளிவர, மத சம்பந்தமான அல்லது வேறு நுட்பமான வழி, ஏதாவது இருக்கிறதா? அல்லது, வழிமுறை என்ற கருத்துக்கு எதிராகவே, போராட்டம் தொடங்க வேண்டுமா? ஏனென்றால், மிகச் சிலரே படைப்பாற்றலுடன் இருப்பதை, நாம் உன்னிப்பாக கவனித்துப் பார்த்தால் தெரிகிறது. ஓவியரையோ, புலவரையோ, நூதனப் பொருட்களைக் கண்டுபிடிப்ப வரையோ, அதிமேதாவியையோ குறிக்கும் அர்த்தத்தில், 'படைப்பாற்றல்' என்ற சொல்லை நான் உபயோகிக்க வில்லை. படைப்பாற்றலுடன் இருப்பது என்றால் என்ன என்பதை, இந்தக் கலந்துரையாடலின்போது கண்டு பிடிக்கப் பார்ப்போம்.

படைப்பாற்றலுடன் இருப்பது என்றால் என்ன என்பதைக் கண்டுபிடிக்கும் முன், நம்மில் பலர், ஏன் பிறரால் எளிதில் கவரப்பட்டு, வசப்படுத்தப்படுகிறோம் என்பதைப் பற்றி ஆராய்வோமா? நம் வாழ்க்கையில் பிறர்

தலையீட்டினை ஏன் அனுமதிக்கிறோம்? நாம் ஏன் பிறர் விஷயத்தில் தலையிடுகிறோம்? பிறரை எடைபோடு வதில், நாம் ஏன் இவ்வளவு கெட்டிக்காரர்களாக இருக்கிறோம்? பிறரைப் பற்றித் தீர்ப்பு வழங்குதல், மத சம்பந்தமானதோ அல்லது இயந்திரமயமானதோ, ஏதோ ஒரு நுட்பமான வழியை உருவாக்கும் ஆற்றல் என்பன போன்ற நாம் உண்டாக்குபவைகளில் இரண்டாம் தரத் தன்மையின் ஆணிவேர் இருக்கக் கூடும் என்பதை, நம் விசாரணையின் மூலம் காணக்கூடும். நாம் உருவாக்கும் வழிமுறைக்கு எதிராகப் போராட்டம் செய்யவில்லை யென்றால், அங்குப் போலித்தனம், நடிப்பு, அதிகாரம், ஆற்றல் மேம்பாடு, கொள்கை பின்பற்றல், இயந்திரத் தனமான மனம் ஆகியவை இருக்கும். அவை இரண்டாம் தரத்தன்மையுடைய மனதின் வடிவமைப்பைச் சுட்டிக் காட்டுபவையாக இருக்கிறது.

குறிப்புகள் எடுத்துக் கொண்டிருக்காமல், தயவு செய்து கவனமாகக் கேளுங்கள். இது பாட வகுப்பு அல்ல; சொற்பொழிவிலிருந்து நீங்கள் குறிப்புகள் எடுத்துக் கொண்டு, பிறகு, அதைப் பற்றி எண்ணிப் பார்ப்பதற்கு, நான், பேராசிரியர் போல் உங்களிடம் பேசிக் கொண்டிருக்கவில்லை. நாம் அனைவரும் சேர்ந்து, எண்ணிப் பார்க்கலாம். நான் சொல்வதெல்லாம், மிகத்தெளிவாக, வெளிப்படையாக இருக்கும் விஷயங் களே. இரண்டாம் தரத்தன்மையை உண்டாக்குவது எது என்பதை அறிந்து கொள்ள, கலந்துரையாடுகிறோம். அதைப் பற்றி அறிந்து கொண்டு விட்டால், படைப் பாற்றல் நிலையை, நம்மால் உணர முடியும். ஆனால், நீங்கள் குறிப்பு எடுத்துக் கொண்டிருந்தால், அந்த அனுபவத்தை உங்களால் உணர முடியாது.

படைப்பாற்றல் என்பது, தனித்திருக்கும் ஏகாந்த நிலை. மனம் தனித்திருக்காவிட்டால், அங்குப் படைப்

பாற்றல் இல்லை. எல்லாவிதமான பாதிப்புகளையும் உதறித் தள்ளும் ஆற்றல் மனதிற்கு இருந்தால் தான் படைப்பாற்றல் இருக்க முடியும். தலையீடுகள் எதையும் அனுமதிக்காமல், முற்றிலும் தனித்திருக்கும் மனம், படைப்பாற்றலுடன் இருக்கிறது. எதையும் சார்ந்திருக் காமல், துணை எதுவும் இல்லாமல், எதனாலும் கவரப் பட்டு வயப்படாமல், சரி/தவறு என்று தீர்ப்பு வழங்காமல் இருக்கும் மனம், ஏகாந்த நிலையில் படைப் பாற்றலுடன் இருக்கிறது. பயிற்சி முறைகளை வளர்த்துக் கொண்டும், நுட்பமான செயல்முறைகளையும், ஒன்றை அடைவதற்கான வழிமுறைகளையும் உருவாக்கும் இரண்டாம் தரத்தன்மை கொண்ட மனதால், ஏகாந்தமான தனித்திருக்கும் நிலையைப் புரிந்து கொள்ள முடியாது.

மக்களைக் கவருவதற்குப் பல புதுப்புது நுட்பமான வழிகளைக் கையாளுகிறார்கள். பிரச்சாரங்கள், கட்டாயப் படுத்துதல், போலித்தனம், உதாரணங்கள், உருவ வழிபாடு, தலைவன் வழிபாடு ஆகிய வழிகளில் மக்களைக் கவருவதற்கு முயற்சிகள் நடைபெறுகிறது. செய்முறை விளக்கங்களுடன், எப்படி வீடு கட்டுவது, எப்படி இயந்திரத்தின் பாகங்களைப் பொருத்துவது, எப்படித் திறமையாகச் சிந்திப்பது, எப்படி ஒரு செயலை செய்து முடிப்பது என்பது போன்ற தலைப்புகளில், கணக்கிலடங்காப் புத்தகங்கள் வெளியிடப்படுகின்றன. ஆக, நிலைமை இவ்வாறிருப்பதால் நாமே சுயமாகச் சிந்தித்துச் செயல்படுவதற்கான ஊக்கமும் முயற்சியும் குறைந்து கொண்டே வருகிறது. நமது கல்வி முறை யானது, போதிக்கப்படும் கருத்துகளுக்கு நம்மை இணங்கச் செய்யும் விதமாகவும், அதன்படி செயல்படும் விதமாகவும், நமக்குள்ளே தாக்கத்தை ஏற்படுத்துகிறது. நமது அரசாங்கமும், நம்மை, அதன் கருத்துகளுக்கு இணங்கச் செய்வதற்காக, பல விதங்களில் செயல்

படுகிறது. ஒரு உந்துதலால் கவரப்பட்டு, குறிப்பிட்ட மனோபாவத்திற்கோ, செயலுக்கோ, நம்மை நாம் ஆட்படுத்திக் கொள்ளும்போது, மற்ற உந்துதல்களுக்கு எதிராக, நாம் செயல்பட வேண்டியிருக்கும். அவ்வாறு எதிர்க்கும்போது, அதன் வலையில் வீழ்ந்து விடுகிறோம், அல்லவா?

கணக்கிலடங்கா உந்துதல்களின் விளைவாக, நாம் இருக்கிறோம் என்பது உண்மைதானே? பொருளாதாரம், சீதோஷ்ண நிலை, சமூகம், பண்பாடு, சமயம் போன்ற பல துறைகளோடு சம்பந்தப்பட்ட உந்துதல்களின் வலைப் பின்னல் அல்லவா நமது சிந்தனை, மற்றும், நமது வாழ்க்கை அமைப்பு? பலவிதமான எண்ணங்களின் கூட்டுக்கலவை, நம் மனம். அதனால், பொருட்களை, விஷயங்களைக் கூட்டி, பொருத்தி, ஒன்றைப் போல் பிறிதொன்றைச் செய்து செயலாற்ற முடியும். இக் காரணத்தால்தான், உலகம், தொழில்நுட்பத்தில் மேலும் மேலும் வளர்ந்து கொண்டு வருகிறது. தொழில் நுட்பக் கலையில் பயிற்சி பெற்றவர், படைக்கும் திறனுடையவ ராக இருப்பதில்லை. அவர் பிரமாதமான வீட்டைக் கட்டலாம், விமானத்தைக் கட்டமைக்கலாம். ஆனால், அவர் படைப்புத் திறனற்றவர். பலவற்றின் தொகுப்பாக அவர் மனம் இருப்பதால், அவர் மனம், பூரணமான மனம் இல்லை; அவர் மனம், முழுமையாக்கப்பட்டதாக இல்லை.

பல வகைப்பட்ட உந்துதல்களின் தாக்கங்களால் நமது மனம், சிறு சிறு பகுதிகளாக இயங்குகிறது. இந்நிலையில், முழுமையான மனம் நமக்கு இருப்பது எப்படிச் சாத்தியமாகும்? நமது மனம், உந்துதல்களின் தாக்கங்களால், ஹிந்து என்றோ, முஸ்லீம் என்றோ, கிருத்துவர் என்றோ, தளைபடுத்தப்பட்டு இருக்கிறது;

நமது மனம், உந்துதல்களின் விளைவாக உள்ளது. கட்டுப்படுத்தப்பட்டு, பல உந்துதல்களால் கவரப்பட்டு, நாம் இருப்பதால், நாம் இவ்வாறு சொல்கிறோம் : ''நான் இந்தக் குறிப்பிட்ட உந்துதலை, தெரிவு செய்வேன், இந்தக் குருவை தேர்ந்தெடுப்பேன், அந்த மேன்மையான வரை ஏற்றுக் கொள்வேன், இந்தப் பிரபுவைப் பின்பற்று வேன், பல்வேறு பயிற்சிகளாலும், பல்வேறு வழிமுறை களாலும், மேன்மையான குணங்களை வளர்த்துக் கொள்வேன்''. ஆனால், என்னதான் மேன்மையை நாடினாலும், நம் மனம் என்னவோ கவர்ச்சிகளால் மயங்கும் தன்மையுடையதாகவும், கட்டுப்படுத்தப்பட்ட தாகவும், வரையறை செய்யப்பட்டதாகவும், தீர்மானிக்கப் பட்ட பலனை அடைய முயற்சி செய்வதாகவுமே இருக்கிறது. இப்படிப்பட்ட மனம், எப்பொழுதும் இந்த ஏற்பாட்டில் வெறுப்படைவதில்லை. ஏனென்றால், வெறுப்படையத் தொடங்கிய அக்கணமே, அத்தகைய மனம், குழப்பத்திலாழ்ந்து விடுகிறது. ஆகவே, இரண்டாம் தரத்தன்மை கொண்ட மனம், எப்பொழுதுமே, வெறுப் படைந்து புரட்சியைத் தோற்றுவிப்பதில்லை; அத்தகைய மனதால், ஒரு தளைபட்ட நிலையிலிருந்து மற்றொரு தளைபட்ட நிலைக்கும், ஒரு உந்துதலிலிருந்து மற்றொரு உந்துதலுக்கும், நகர மட்டுமே முடியும்.

ஆக்கிரமிக்கும், தலையீடு செய்யும், கட்டுப்படுத்தும் மற்றும் வரையறைபடுத்தும், உந்துதல்களைப் பற்றி அறிந்து கொள்வதற்காக, மனம், எப்பொழுதும் அடி பணியாத நிலையில் இருப்பது அவசியமல்லவா? சதா பயத்தில் நடுங்கிக் கொண்டிருப்பது, இரண்டாம் தரத் தன்மை கொண்ட மனதின் இயல்புகளில் ஒன்றாகும், அல்லவா? குழப்பத்திலிருந்து கொண்டிருப்பதால், அத்தகைய மனம், ஒழுங்கைத் தேடுகிறது, ஒரே சீரான ஒழுங்குமுறையை விரும்புகிறது. தன்னை வழிநடத்திச்

செல்லவும், கட்டுப்படுத்தவும், ஒரு வடிவத்தை வேண்டு கிறது. ஆனால், இந்த வடிவங்களும், உந்துதல்களும், முரண்பாடுகளையும் குழப்பங்களையும், தனி நபரிடம் ஏற்படுத்துகின்றன. நீங்கள், ஹிந்து என்றோ அல்லது முஸ்லீம் என்றோ, உங்களை அடையாளப்படுத்திக் கொள்ள கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறீர்கள். இது போன்றே, துறை சார்ந்த சிந்தனையாலும், குணநலப் பண்புகளாலும் தளைபட்டிருக்கிறீர்கள். உந்துதல்களில் நல்லதைத் தேர்ந் தெடுத்தாலும், அதுவும் இரண்டாம் தரத் தன்மை கொண்ட மனதின் நிலைப்பாடுதான். இரண்டு உந்துதல் களுக்குள் ஒன்றைத் தேர்ந்தெடுத்து, தேர்ந்தெடுத்த அந்த உந்துதலின்படி வாழ்வதும் இரண்டாம்பட்சமானது தானே! ஏனென்றால், தேர்ந்தெடுத்ததில் திருப்தி அடை வதால், அறிந்து கொள்ள வேண்டும் என்ற கிளர்ச்சி இருப்பதில்லை; கிளர்ச்சி இல்லையென்றால், புரிந்து கொள்ளுதலும் இல்லை.

மனம் எப்பொழுதுமே தனித்திருக்காத நிலையில், அதனால் படைப்பாற்றல் கொண்டிருக்க முடியுமா? கவனத்தோடு பார்த்தீர்களானால், தவறாகி விடுமோ, தப்பு நடந்து விடுமோ என்ற கலக்கத்தில், மிகுந்த பயத்தில் இருக்கும் உங்கள் மனதை உங்களால் பார்க்க முடியும். பாதுகாப்பு, நிச்சயத்தன்மை, குறிப்பிட்ட முறை செயல் பாட்டால் விளையும் ஒரே சீரான சிந்தனைகள் ஆகியவை, தொடர்ந்து எப்பொழுதும் இருக்க மனம் விரும்புகிறது. இத்தகைய மனம், எப்பொழுதும் தனித் திருப்பதில்லை. இந்த மனம், படைப்பாற்றல் கொண் டிருக்க முடியுமா? 'தனித்திருத்தல்' என்ற சொல்லை, கதிகலங்கச் செய்து நம்பிக்கையைக் குலைக்கும் தனிமையைக் குறிப்பதாகச் சொல்லவில்லை; 'தனித் திருத்தல்' என்று எதை நான் குறிப்பிடுகிறேனென்றால், எதன் மீதும் எந்த விதத்திலும் சார்ந்திருக்காத நிலையை,

அவ்வாறு குறிப்பிடுகிறேன். மரபுகள், வழக்கங்கள், துணையாக இருப்பவர்கள் என்று எதன் மீதும், எந்த விதத்திலும், சார்ந்திருக்காமல் இருப்பது தனித்திருப்ப தாகும். எந்தவிதமான பயங்களும் இல்லாத நிலையாக வும், அது இருக்குமல்லவா? எதன் மீதாவது நம்பிக்கை வைத்து, அதைச் சார்ந்து நான் இருக்கத் தொடங்கினால், அக்கணமே பயம் பிறந்து விடுகிறது; சுயமாகச் சிந்திக்கும் திறனும், தைரியமாக ஒரு காரியத்தை ஆரம்பிக்கும் குணமும் அழிந்து போகிறது. ஆழ்ந்து தீவிரமாகப் பார்க்கத் தேவைப்படும் ஆற்றல், மனதிற்கு வேண்டாமா? பயமற்று இருக்க வேண்டாமா? பிறவற்றைப் பின்பற்றிச் செய்யாமல், வரையறைகளுக்கு உட்பட்டு இல்லாமல் இருக்க வேண்டுமல்லவா? தனித்திருந்து, அதனால் படைப்பாற்றலுடனிருப்பது அவசியமல்லவா? அத்தகைய படைப்பாற்றல் உங்களுடையதோ, என்னுடையதோ அல்ல. அது அனாதி ஆனது, பெயரிடப்படாதது.

நம்மில் பெரும்பாலோனார், இரண்டாம் தரத் தன்மை பெற்றவர்களாய் இருப்பதால், தயவுசெய்து, கவனத்துடன் இச்சொற்பொழிவைக் கேளுங்கள். முழுமையானதும், உடனே நிகழக்கூடியதுமான, பரிபூரண மாற்றம் ஏற்பட்டு, மேற்கூறிய படைப் பாற்றலைப் பெறுவது, சாத்தியம் தானா? இன்றைய உலகிற்குத் தேவைப்படுவது, படைப்பாற்றல் தான். சீர்திருத்தவாதிகளோ, கொள்கைவாதிகளோ, உயரிய தத்துவவாதிகளோ, இன்றைய நிலையை மேம்படுத்தத் தேவைப்படவில்லை. நீங்களும் நானும் நமக்கிருக்கும் இரண்டாம்தரத் தன்மையைப் புரிந்துகொள்வதால், தனித்திருத்தலை உடனே கொண்டுவர வேண்டும். தனித்திருத்தல் நிலைப்பாட்டில் அச்சவுணர்வோ, சார்ந் திருத்தலோ இல்லை. அது, முற்றிலுமாக தனித்திருக் கிறது. அது எதனாலும் கவரப்படுவதில்லை. எந்தத் தலை

யீட்டையும் அது அனுமதிப்பதில்லை. அது, எதனையும் பின்பற்றுவதில்லை. நீங்களும், நானும், அத்தகைய மனதை உருவாக்க முடியுமா? அத்தகைய மனம் இல்லா திருக்கும் பட்சத்தில், நீங்கள் எவ்வளவுதான் பெரு முயற்சி செய்தாலும், உங்கள் சீர்திருத்தங்கள், துன்பத்தை யும், சீர்கேட்டையும் மேலும் அதிகரிக்கவே செய்யும்.

பல்வேறு எண்ணங்களின் தலையீட்டிற்கு ஆளாகி, தளைபட்டும், மற்றும், பிறவற்றைச் சார்ந்தும் இருக்கும் மனம், மேற்கூறப்பட்ட தனித்திருத்தலை, உடனே அறிந்து கொள்ள முடியுமா? 'அறிந்து கொள்ள முடியலாம், ஆனால் என்னால் முடியாது; யாரோ ஒருவர் செய்யக்கூடும்' என்று பதிலளிக்காதீர்கள். வெறும் சொற்களை மட்டும் கேட்காமல், கேட்கும் விஷயத்தின் உண்மைப் பொருளைக் கேளுங்கள். வெளிப்புறத் தலையீடுகளால் தாக்கம் அடைந்துள்ள மனதால் தனித்திருத்தல் சாத்தியமா? காலத்தின் விளைவாகவும் உந்துதல்களின் விளைவாகவும் இருக்கும் மனம், எல்லாவற்றையும் உதறித் தள்ளிவிட்டு, தனித்திருக்க முடியுமா? அந்தத் தனித்திருத்தலில், படைப்பாற்றல் இருக்கிறது. படைப்பாற்றல், காலத்தின் விளைவாகத் தோன்றியதல்ல. அது, உங்கள் படைப்பாற்றல் அல்லது என் படைப்பாற்றல் என்று வரையறுக்கப்பட்டதல்ல. அது முற்றிலும் அனாதியானது (anonymous). நீங்கள் ஒரு நுட்பமான வழிமுறையைக் கடைப்பிடிக்கும்வரை, அதற்குப் பெயரிட்டு அழைக்க முடியும், அது அனாதி அல்ல. தனித்திருத்தலை எவ்வாறு கொண்டு வருவது, உந்துதல்களால் கவரப்படுவதை எவ்வாறு நிறுத்துவது, தளைபடுத்தும் விஷயங்களிலிருந்து எவ்வாறு விலகிச் செல்வது என்றெல்லாம் வழிமுறைகளைப்பற்றி, மனம் ஓயாமல் எண்ணமிட்டுக் கொண்டிருப்பதால் அனாதியான படைப்பாற்றல் அங்கிருப்பதில்லை. ''நான்

இதைப் பயிற்சி செய்து, அதை அடைவேன், என்னை ஒரு ஒழுங்குமுறை கட்டுப்பாட்டுக்குள் வைத்துக் கொள்வேன். அதனால், அதன்பிறகு, உந்துதல்களால் கவர்ந்திழுக்கப்பட மாட்டேன், என்னைச் சுற்றி, உந்துதல் களால் கவர்ந்திழுக்கப்படாவண்ணம், சுவர் எழுப்பிக் கொள்வேன்'' என்றெல்லாம் ஒருவர் சொன்னால், ஒரு நுட்பமான வழியை, அவர் மனம் தேடிக் கொண்டிருக் கிறது என்பதைக் குறிக்கிறது. அப்படிப்பட்ட மனம், எக்காலத்திலாவது, சுதந்திரமாக இருக்க முடியுமா? அல்லது திருப்தியடையாமல் புரட்சி செய்ய எண்ணுமா? அப்படிப்பட்ட மனம், இரண்டாம் தரத்தன்மை கொண்ட தல்லவா? ஆக, அப்படிப்பட்ட மனம், ஒருகாலும் தனித்திருக்க முடியாது.

மரபுகளாலும், அச்சங்களாலும், பதவி ஆசைக ளாலும் கறைபடாத, புதிய உலகை, புதிய நாகரீகத்தை, புதிய கலைகளை, முற்றிலும் நூதனமானவைகளை உருவாக்க நினைத்தால், தனித்திருக்கும் மனம் தேவை. என்னுடையதோ அல்லது உங்களுடையதோ அல்லாத, நம்முடையதாக இருக்கும் புதிய சமுதாயத்தைப் படைக்க, நம்முடைய மனம் பெயரிடப்படாததாக, தனித்திருப்பதாக இருக்க வேண்டாமா? ஒத்திசைவிற்கு எதிரான கிளர்ச்சி மற்றும் அந்தஸ்திற்கு எதிரான கிளர்ச்சி இருக்க வேண்டும் என்பதை இது சுட்டிக்காட்டு கிறதல்லவா? கெளரவமான மனிதர், இரண்டாம் தரத் தன்மையுடையவர். ஏனென்றால், அவர் அந்தஸ்தைப் பெற விழைகிறார், அவர் தனது மகிழ்ச்சிக்காக, உந்துதல்களைச் சார்ந்திருக்கிறார், பக்கத்து வீட்டுக்காரர், அவரைப் பற்றி என்ன நினைக்கிறார் என்று அக்கறை காட்டுகிறார், அவருடைய குரு, என்ன நினைக்கிறார் என்று எண்ணிப் பார்க்கிறார், பகவத் கீதை என்ன சொல்கிறது, உபநிடதங்கள் என்ன சொல்கிறது, ஏசுநாதர்

என்ன சொல்கிறார் என்று ஒப்பிட்டுப் பார்க்கிறார். ஆக, அவர் மனம், எப்பொழுதும் தனித்திருப்பதில்லை. அவர் தனியாக நடந்து போவதில்லை, எப்பொழுதும் கொள்கைகள், கருத்துகள் என்ற துணையோடு தான் செல்கிறார்.

பெயரிடப்படாத அனாதியான ஒன்றிற்கு முரணாக இருக்கும் குறுக்கீடுகள், உந்துதல்கள், 'நான்' என்ற நிலைப்பாடு ஆகியவற்றின் முழுமையான முக்கியத் துவத்தைப் பற்றி, ஆய்வு செய்வது அவசியமல்லவா? அப்படி முழுமையாகப் பார்க்கும்போது பின்வரும் கேள்வி எழும் : தன் அனுபவத்தாலோ அல்லது பிறருடைய அனுபவத்தாலோ கவரப்படாத, கவர்ச்சிக்கு ஆளாகாத, களங்கப்படுத்த முடியாத, தனித்திருக்கும் நிலைப்பாடுடைய மனதை, உடனே அடைந்து விடுவதென்பது முடிகிற காரியமா? - அப்படி முடிந்தால், சந்தோஷம் அளிக்கவல்ல வேறுவகையான புதிய உலகை, புதிய பண்பாட்டை, வேறு வகையான புதிய சமுதாயத்தை உருவாக்குவது சாத்தியமாகலாம்.

**கேள்வி :** நாற்பது நாள் குழந்தையாக இருந்த போதிலிருந்தே, நான் ஊனமுற்றவனாக இருக்கிறேன். நீங்கள் பாதுகாப்பு பற்றிப் பேசுகிறீர்கள். எனக்கு வீடு, நண்பர்கள், தொழில் என்று எதுவுமே கிடையாது. வாழ்க்கையை நான் எப்படி எதிர்கொள்வது?

**கிருஷ்ணமூர்த்தி :** நல்ல ஆரோக்கியத்துடன் இருந்தாலும் சரி, சுகவீனமாக இருந்தாலும் சரி, வாழ்க்கையை நாம் எப்படி எதிர்கொள்கிறோம்? உண்மையில் அதை எப்படிச் சந்திக்கிறோம்?

கையிருப்பில் பணம் இருந்தால், சொத்து பரிசாகக் கிடைத்தால், வேலை செய்ய ஆற்றல் இருந்தால்,

ஆதரிக்க ஆள் இருந்தால், செல்வாக்கு இருந்தால், வாழ்க்கையை, உங்களால் கூடுமானவரையில் நன்றாகவே நடத்த முடியும், அல்லவா? ஆனால், பெரும்பான்மையோர் எவ்வித பாதுகாப்பும் இல்லாமலும், பெரிய பதவியில் இருப்பவர்களைத் தன்வசப்படுத்த முடியாதவர்களாகவுமே இருக்கிறார்கள்; அவர்கள் மனதளவிலும், உடல்ரீதியாகவும் ஊனமுற்றவர்களாகவே இருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள், வாழ்க்கையை, எப்படி எதிர்கொள்கிறார்கள்? அவர்களால் முடிந்த மட்டும், ஏதோ செய்கிறார்கள். இதுதான், உண்மையில் நடந்துகொண்டிருக்கிறது.

இந்தப் பிரச்சனையை, புதிய கோணத்தில் அணுகி, வேறுவிதமான வாழ்க்கைமுறையைக் கண்டுபிடிக்க, மனதளவில் ஊனமில்லாதவர்களால் இயலுமா? இந்தப் பிரச்சனைக்கு, மாறுபட்ட செயல்வழிமுறை, மற்றும் வேறுவிதமான சிந்தனைப்போக்கைக் கொணர, மனதால் ஊனப்படாதவர்களால் முடியுமா? நாம் ஒன்றுகூடி புதியதோர் உலகைச் சமைப்பதற்கான பொறுப்பு, நமக்கு நிச்சயமாக இருக்கிறது. பொறுப்புடன் அதைச் செய்ய, உங்களிடம் நேரம் இருக்கிறது, சிந்திக்கும் ஆற்றல் இருக்கிறது, போதுமான அளவிற்குச் செல்வமும் இருக்கிறது. உடல்ரீதியாகவும், உள்ளரீதியாகவும், அறிவுத்திறன்ரீதியாகவும் ஊனப்பட்டு, வாழ்க்கையை மிகுந்த அச்சத்துடனும் பயத்துடனும் எதிர்கொள்ளும், சிந்திக்கும் ஆற்றல் இல்லாதவர்களுக்கு உதவ வேண்டியது, உங்கள் பொறுப்பு அல்லவா? இது நம் பொறுப்பு அல்லவா? நீங்கள் இதைச் செய்யவில்லையென்றால், வேறு யார் இதைச் செய்யப் போகிறார்கள்?

கேள்வியைக் கேட்டவர், வேலை பெறுவதற்கு வேறு ஏதாவது வழி இருக்கிறதா? நம்மில் பலரால்,

இவருக்கு வேலை கொடுக்க முடியாது. அப்படிக் கொடுத்தாலும், நாம் குற்றங்குறை சொல்வோம், அதிகாரம் செலுத்துவோம்; நம்மிடம் இருக்கும் சொற்பத்தில், பிறருக்குக் கொஞ்சம் கொடுப்பதற்கு நம்மால் முடியாது; தயாள குணத்தை, நாம் தொலைத்து விட்டோம்; முன்பு தயாள குணம் இருந்ததாக வைத்துக் கொண்டாலும், இப்போது, நம்மிடம் ஒன்றும் இல்லை. ஆக, இளைத்த வர்களை, எப்பொழுதுமே இளைத்தவர் களாகவே வைத்திருப்போம். நாம் எப்பொழுதுமே பலம் பெற்றவர்களை நாடிச் செல்வோம். அதனால் நம்மை, இளைத்தவர்களாக்கிக் கொள்வோம்.

ஆக, இதுதான், நமது வாழ்க்கை. குழப்பம், இரண்டாம் தரத் தன்மை, வலி, உள்முகப் பற்றாக்குறை, கணக்கிலடங்கா தகிக்கும் ஆசைகளை அடக்கிக் கொண்ட வெளித்தோற்றம் என்று நம் வாழ்க்கை இருக்கிறது. இத்தகைய வாழ்க்கையில் வெறுப்படைந்து கிளர்ச்சி செய்தால்தான், நம்மால் புதியதோர் உலகத்தை உருவாக்க முடியும். கம்யூனிஸ்ட் பிரிவில் சேர்வதா அல்லது சோஷலிஸ்ட் குழுவில் சேர்வதா என்பது போன்ற கிளர்ச்சி அல்ல - நான் இங்கு எடுத்துரைப்பது, பரிபூரண முழுமையான கிளர்ச்சியைப் பற்றி. அத்தகைய கிளர்ச்சி, உந்துதல்களால் தாக்கம் அடையாமல், தனித்திருக்கும் மனதில்தான் தோன்றும். இந்த நிலை, பிடிவாதமோ, அனுபவங்களாலும் விஷய ஞானத்தாலும் பெற்ற வலிமையோ அல்ல. பிடிவாதம், அனுபவ ஞானம், விஷய ஞானம் மூலம், தனித்திருத்தலைப் பெற முடியாது; அங்கு, அவைகளைச் சார்ந்திருத்தல் என்ற நிலை ஏற்படுகிறது. மரபு, அனுபவம், விஷயஞானம் போன்ற மனதின் தாங்கு கட்டைகளிலிருந்து விடுபட்ட ஒன்றே, தனித்திருத்தல். அது, ஏதோவொன்றிற்கு எதிரான கிளர்ச்சி அல்ல; மாறாக, வழிமுறைகள் அனைத்திற்கும்

விடுகிறீர்கள். அதனால், அந்தக் குறிப்பிட்ட அனுபவத்திற்கு அடிமையாகி, மனம், முடங்கிப் போகிறது. முடங்கிப் போன மனம், அற்பத்தனத்திற்கும் குறுகிய நோக்கிற்கும், சின்னத்தனத்திற்கும் இறங்கி சீரழிந்து போகிறது, அல்லவா? குறிப்பிட்ட ஒரு அனுபவத்தைப் பெறவும், அந்த அனுபவத்தைத் தொடர்ந்து கட்டிக் காக்கவும், மனம் விரும்பும்போது, அது, சீரான தொடர்ச்சியை விரும்புவதைச் சுட்டிக்காட்டுவதாக வுள்ளது, இல்லையா? சீரான தொடர்ச்சியை விரும்பும் மனம், தொடராமல் போய் விடுமோ என்ற பயத்திலிருக்கும் மனமாகவும், இரண்டாம் தரத் தன்மையுடையதாகவும் இருக்கிறதல்லவா? ஆக, எவ்வளவுதான் சிரத்தையுடன், எண்ணங்களை ஆராய்ந்தாலும், ஆராய்பவர், இரண்டாம் தரத்தன்மையில் அகப்பட்டுக் கொண்டவராகவே இருக்கிறார்.

எண்ணங்களுக்கிடையே இருக்கும் இடைவெளியை, நீட்டிக்க எண்ணாமல், குறிப்பிட்ட விருப்பத்திற்கேற்ப மாற்றாமல், அதை, குறிப்பிட்டவாறு நிறுவ நினைக்காமல், விழிப்புணர்வுடன் கவனித்தால், இடைவெளியே, நமக்கு, உண்மையில் எல்லையற்ற தன்னறிவு, தன்னைப் பற்றிய ஞானம் என்பதைக் காணமுடியும். இடைவெளியை, தொடர்ந்து நீடிக்கச் செய்ய முடியாததால், புதிய வேறுவகைப்பட்ட உணர்வுகள், இடைவெளியில் குடிகொள்ளக்கூடும். ஆனால், இடைவெளியை நீட்டிக்கப் பார்க்கும்போதும், விருப்பத்திற்கேற்ப இயங்கச் செய்யும்போதும், மனம், இடைவெளியில் தலையிடுகிறது. குறுக்கீடு செய்யும் மனம், தாக்கத்தை உண்டுபண்ணுகிறது, தளைபடுத்துகிறது. ஆகவே, எண்ணத்தின் செயல்முறை பற்றியும், எண்ணங்களுக்கிடையே உள்ள இடைவெளி பற்றியும், அதிகமாக அறிந்து கொள்வதால், தன்னையறிதலும் அதிகமாகிறது.

இத்தகைய தன்னைப் பற்றிய ஞானம், புத்தகங்களைப் படித்தோ, சிந்தனா வழிமுறைகளாலோ, வருவதில்லை; எந்நேரமும் தன்னை அறிந்து கொள்வதால், கணத்திற்குக் கணம், ஒவ்வொரு நாளும், எந்நேரமும் தன்னை அறிந்து கொள்வதால் வருவது, தன்னறிவு. இம்முறை, மிகவும் அசாதாரணமான, கடினமான செயல்முறை. தன்னறிவு பெறாத நிலையில், மனம், அனைத்து வகையான உந்துதல்களுக்கும், தலையீடுகளுக்கும் அடிபணிந்து விடுகிறது. அதன் காரணமாக, எந்நேரமும், போலித் தனம், சார்ந்திருத்தல், பயம் போன்ற உணர்ச்சிகளோடு, மனம், இருக்கிறது.

தயவுசெய்து, இதைக் கவனமாகக் கேளுங்கள். உண்மையிலேயே இதை நீங்கள் நன்கு புரிந்து கொண்டீர்களேயானால், உணர்வுப்பூர்வமாக நீங்கள் எதையுமே செய்ய வேண்டியிருக்காது. உணர்வுப்பூர்வ மான தலையீடுகள், தளைபடுத்துபவைகளாக இருப்பதால், நீங்கள் எதையும் செய்ய வேண்டியிருக்காது. ஊன்றி செவிமடுத்தால், பிரக்ஞையற்ற, ஆழ்ந்த புரட்சி தோன்றும். இந்தப் புரட்சி, தாக்கங்கள், தலையீடுகள், வரைமுறைகள் ஆகியவற்றின் விளைபொருளாய் இருக்கும் மேற்பரப்பு மனதினால், தோற்றுவிக்கப்பட்ட புரட்சியல்ல. அத்தகைய மனதின் தலையீட்டினால், முற்றிலும் நூதனமான, முற்றிலும் புதுமையான ஒன்றை, தோற்றுவிக்க முடியாது. ஆகவே, தன்னைத் தானாகவே, மனம் வழங்கும் தீர்ப்புகளின்படி பார்க்காமல், உள்ளதை உள்ளபடி பார்த்து, தன்னையறிந்து கொள்ளல், மிகவும் அவசியமில்லையா?

மற்றவர்களுடன் ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளும் போதுதான், நம்மைப் பற்றி, நாம் அறிந்து கொள்வதாக நினைத்துக் கொள்கிறோம். ஆனால், ஒப்பிட்டுப்

பார்த்தல், நிஜமாக, உள்ளதை அறிந்து கொள்வதைத் தடுக்கிறது. நான் விகாரமாக இருக்கிறேன், நான் பேராசைக்காரனாக இருக்கிறேன், நான் பொறாமைக் காரனாக இருக்கிறேன். இந்நிலையில் மற்றொரு பொறாமைக்காரனோடு என்னை ஒப்பிட்டுப் பார்த்துக் கொள்ளும்போது, என் சக்தியைச் செலவழித்து, விரயம் செய்து, திரித்து விடுகிறேன், இல்லையா? 'உள்ளது' பற்றி அல்லவா நான் முற்றிலுமாகக் கவனம் செலுத்த வேண்டும்? நான் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, 'உள்ளதை' வேறொன்றாக மாற்ற விரும்புகிறேன். இவ்வாறு 'உள்ளதை' வேறொன்றாக மாற்ற நினைப்பது, சக்தி மற்றும் நேரத்தை வீணடிக்கும் செயலல்லவா? மேலும் அவ்வாறு விரும்புவது, தப்பித்துச் செல்வதாக இருக்கிறது. ஒப்பிட்டுப் பார்க்காமல், 'உள்ளதை' பார்க்க என்னால் இயலுமா? என்னை ஒத்திருக்கும் மற்றவர் களைப் பற்றிய என் அனுபவ அறிவின் மூலம் பார்க்காமல், உள்ளபடி என்னால் பார்க்க முடியுமா? தயவு செய்து கவனியுங்கள். நான் பேராசைக்காரன் என்று சொல்லும்போது, அதுவே ஒரு வகை ஒப்பிடுதல் அல்லவா? மேலும் அதிகமாக அதிகாரம் வேண்டும் என்ற எண்ணம், மேலும் உயர்ந்த பதவி, மேலும் பாதுகாப்பு, மேலும் அதிகமான அனுபவங்கள், அதிகமாக விஷய ஞானம் என்று இன்னும் அதிகம் வேண்டும் என்ற எண்ணம், உள்ளதை, மற்றதுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதால் வருகிறது.

நான் மேலும் மேலும் அதிகம் பெற விரும்புகிறேன் என்ற உணர்ச்சியைப் புரிந்து கொள்வதால்தான், பேராசையை என்னால் அறியமுடிகிறது. 'இன்னும் அதிகமாக' என்பது ஒப்புமையாகும். என் மனம் ஒப்புமைப்படுத்திப் பார்க்கும் தன்மையுடையதாக இருக்கும்போது, என் எண்ணங்களை ஒப்பிட்டுப்

பார்க்காமல், என்னால் காண முடியுமா? ஆகவே, ஒப்பிட்டுப் பார்க்காமல், சிந்திக்கவும், ஆழ்ந்து நோக்கவும், என் மனதிற்கு ஆற்றல் இருக்கிறது என்று நான் கண்டுகொண்ட அந்த நிமிடத்திலிருந்து, பேராசை தொடர முடியுமா? தயவுசெய்து, கவனமாகக் கேளுங்கள்.

'நான் பேராசைக்காரனாக இருக்கக் கூடாது' என்று சொல்வது, நான் என்னிடம் இருக்கும் பேராசையைக் கண்டனம் செய்வதாக உள்ளது. அப்படிக் கண்டனம் செய்வதே, ஒப்பிட்டுப் பார்க்கும் நிலையை உருவாக்கி, அதைப் பலப்படுத்தவும் செய்கிறது. இன்னும் அதிகம் வேண்டும் என்ற விருப்பத்தின் விளைவாக இருக்கும் பேராசையை, ஒப்பிடாமல் பார்க்க முடியுமா? அப்படிப் பார்ப்பதுதான், பேராசையை மனதிலிருந்து விரட்ட இருக்கும் ஒரே வழி, இல்லையா?

தன்னறிவு, விவேகத்தின் தொடக்கமாக இருக்கிறது. விவேகத்தை விலை கொடுத்து வாங்க முடியாது. எந்த குருவாலும், எந்தப் புத்தகத்தாலும், எந்த அனுபவத் தாலும் விவேகத்தை அளிக்க முடியாது. அனுபவம், காலத்தின் பாற்பட்டது. அனுபவம், சேகரிக்கக் கூடியது; அனுபவத்தின் மூலமாக நுட்பமான வழிமுறையை வளர்த்து, 'அதிகம்' பெற முயல்வதை உணர்த்துவதாக, அது உள்ளது. அனுபவங்களுக்கு எதிராகவும், நுட்பமான வழிமுறைகளுக்கு எதிராகவும், அதிகம் வேண்டும் என்ற விருப்பத்திற்கும் ஒப்பிடுதலுக்கும் எதிராகவும் செய்யப் படும் கிளர்ச்சியால், மனம் விடுதலையாகும். விடுதலை பெற்ற மனம், முற்றிலுமாக தனித்திருக்கும்.

**கேள்வி :** மன்னிப்பு என்றால் என்ன? மன்னிப்பும் கருணையும் ஒத்திருப்பவையா? பிறரை மன்னிக்க முடியும். ஆனால், தன்னை மன்னிப்பதும் அவசிய மல்லவா?

**கிருஷ்ணமூர்த்தி** : மன்னிப்பு என்றால் என்ன? மேலும், நீங்கள் எப்பொழுது மன்னிக்கிறீர்கள்? மன்னிப்பு தேவைதானா? நான், உங்களை நோகடிக்கிறேன்; நீங்கள் அந்தக் காயத்தை, நினைவில் வைத்துக் கொள்கிறீர்கள். காலத்தால், அந்தக் காயம் ஆறலாம், அல்லது, நீங்கள் முயற்சி மேற்கொண்டு, மன்னித்தலை வளர்த்துக் கொள்கிறீர்கள். முதற்கண், நீங்கள் புண்பட்டதை நினைவில் சேமிக்கிறீர்கள்; பிறகு சேகரிக்கிறீர்கள்; அந்த மனவடுக்களை, கவனமாக காவல் காக்கிறீர்கள்; அதன்பிறகு, மன்னித்து விடுகிறீர்கள். ஆனால், நினைவில் சேமிக்காமல் இருந்திருந்தால், மன்னிக்க வேண்டிய அவசியமே இருந்திருக்காது.

மன்னிப்பிலிருந்து, கருணை வேறுபட்டதல்லவா? நோகடிக்கப்பட்டு, பின்னால் மன்னித்து விடும் ஒருவரால், கருணையைப் பற்றி அறிய முடியுமா? அன்பு என்ற நிலையில், காயங்கள், புண்படுதல் என்பதெல்லாம் கிடையாது. நான் காட்டும் அன்பில் 'நான்' என்ற உணர்வு மிகுந்திருந்தால், மேலும், அன்பிலிருந்து நான் எதையாவது அடைய எதிர்பார்த்தால் மட்டுமே, புண்படுதலுக்கு இடமிருக்கிறது. என்மீது அன்பு காட்டப்பட வேண்டும் என்று விரும்பும்போது, அதிலும் 'நான்' என்ற உணர்வு, சக்திவாய்ந்ததாக உள்ளது. ''நான் விரும்பப்பட வேண்டும்'', ''நான் நன்றாக போஷிக்கப் பட வேண்டும்'', ''நான் அவரைப் பார்க்க முடியாமல் பெரிதும் தவிக்கிறேன்'', என்பது போன்ற வெளிப்பாடுகளில், 'நான்' என்பது மையமாக இருக்கிறது; அந்த மையம், சில நிகழ்வுகளால், நோகடிக்கப்படுகிறது, சிலவற்றால், மகிழ்விக்கப்படுகிறது. நோகடிக்கப்படும்போது, அந்தக் காயங்களை, அது சேமித்து வைத்துக் கொள்கிறது; பயங்கள், உந்துதல்கள், தலையீடுகள், மற்றும், நெருக்குதல்களால், அவைகளை, பின்னால் மன்னித்து விடுகிறது.

'நான்' என்ற மையம், அகந்தை உணர்வு, காருண்யத் துடன் இருப்பதாக எப்பொழுதாவது உணர்ந்திருக்கிறதா? கருணை என்ற நிலைப்பாட்டில், 'நான்' என்ற உணர்வு, கருணையுடனிருப்பதாக உணருகிறதா?

நீங்கள் கருணை மிக்கவர் என்று உங்களால் உணர முடிந்தால், நீங்கள் கொண்டிருப்பது உண்மையில் கருணையா? மன்னித்து விடுவதாக நீங்கள் எண்ணினால், அது மன்னிப்பதாகுமா? பண்புகளைப் பெற்றிருப்பதாக உணருகையில், அங்குப் பண்பு நீடிக்கிறதா? ஆக, உணர்வுப்பூர்வமாக மன்னித்தல், காயப்படுதல் ஆகியவை 'நான்' என்ற உணர்வை, பலப்படுத்துவதாக இல்லையா? 'நான்' என்ற உணர்வோ சதா சேகரித்துக் கொண்டும், ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டும், எடை போட்டுக் கொண்டும் இருக்கிறது. இத்தகைய இயல்புடைய 'நான்' எப்பொழுதாவது சுதந்திரமாக இருக்க முடியுமா? அன்பு காட்டுவது என்றால் என்ன என்று அதனால் அறிந்து கொள்ள முடியுமா? கருணை என்றால் என்ன என்று அதற்குப் புரியுமா? நான் சொல்வதைக் கேட்க வேண்டாம் - இதற்கான விடையை நீங்களே கண்டு பிடியுங்கள்.

கருணை காட்டுவது என்றால் என்ன? பிறரால் நோகடிக்கப்படக் கூடிய, மற்றும், காயங்களைச் சுமந்து கொண்டிருக்கும் மனதால், மன்னிக்க முடியுமா? நீங்களே இதற்கான விடையைக் கண்டுபிடியுங்கள். புண்படக் கூடிய மனம், எக்காலத்திலாவது மன்னிக்குமா? புண் படக்கூடியதாகவும், பண்புகளை வளர்த்துக் கொள்வதாக வும், அதன் தயாள குணத்தைப் பற்றிய உணர்வுள்ளதாக வும் இருக்கின்ற மனம், காருண்யம் கொண்டிருக்க முடியுமா? அன்பைப் போன்றே, காருண்யமும், மனதால் விளைந்த தல்ல. அன்புள்ளம் கொண்டிருப்பதையும்

கருணை மிகுந்திருப்பதையும், மனம் உணர்வதில்லை. ஆனால், மன்னிக்கும் உணர்வோடு மன்னித்து விடும்போது, மனம், தனது மையத்தையும் அதன் காயங்களையும் பலப்படுத்திக் கொள்கிறது. ஆகவே, உணர்வுப்பூர்வமாக மன்னிக்கும் மனம் என்றுமே எதையும் மன்னிக்காது; மன்னிப்பு பற்றி அதற்குத் தெரியாது; மேலும் காயப்பட்டு விடக்கூடாது என்ற எண்ணத்தில்தான், அது மன்னிக்கிறது.

ஆக, மனம், விஷயங்களை நினைவில் நிறுத்தி, சேகரித்து வைப்பதின் காரணத்தை அறிய வேண்டியது தான், மிகவும் முக்கியமாகும். தன்னை மேலும் மேலும் உயர்த்திக் கொள்ள, வழிகளை ஓயாமல் தேடிக் கொண்டு, பெரிய நிலைக்குப் போய் சேர, மனம் நினைக்கிறது. எதுவாகவும் இல்லாதிருப்பதற்கு மனம் இசையுமே யானால், அந்தச் சூன்யத்தில், காருண்யத்தின் நிலைப் பாடு இருக்கும். அங்கு, மன்னிப்பும் இல்லை, காயப் படுதலும் இல்லை. அந்த நிலைப்பாட்டைப் புரிந்து கொள்வதற்கு, 'நான்' என்ற உணர்வின் பரிமாணத்தை அறிந்து கொள்ள வேண்டும். 'நான்' என்பது வளர்ந்து, பெரியதாகி, பண்புடையதாகி, அந்தஸ்தை அடைந்து, இறுதியில் கடவுளைக் கண்டுபிடிக்கப் போவதாகவும், உணரப்படுகிறது. அதாவது, 'நான்' என்ற உணர்விற்கு அளிக்கப்படும் முக்கியத்துவத்தைப் பற்றி, அறிய வேண்டும். 'நான்' என்ற உணர்விற்கு அளிக்கப்படும் முக்கியத்துவம், மேல்தட்டில் உள்ளதா அல்லது கீழ் தட்டில் உள்ளதா என்பதை அறிந்துகொள்ள வேண்டும்.

ஆக, தன் முனைப்புடன் முயற்சித்து பண்புகளை வளர்த்துக் கொள்ளும் நிலை இருக்கும் வரை, அங்கு அன்பும் கருணையும் இருக்காது. ஏனென்றால், அன்பும் கருணையும் தன்முனைப்புடன் செய்யும் முயற்சியின் பலனாக இருப்பதில்லை.

**கேள்வி :** கடந்த கால நினைவுகளிலிருந்து நான் எப்படி விடுதலை பெறுவது?

**கிருஷ்ணமூர்த்தி :** என் மனம், எதில் ஆழ்ந்திருக்கிறது என்பதை என்னால் அறிய முடிந்தால், கடந்த கால நினைவுகளிலிருந்து எப்படி விடுபடுவது என்பதைப் பற்றி, என்னால் ஒரு வேளை அறிந்து கொள்ள முடியும்.

உங்கள் மனதை எது ஆக்ரமித்துக் கொண்டு இருக்கிறது? நீங்கள் என்ன செய்திருக்க வேண்டும், நீங்கள் என்ன சிந்தித்திருக்க வேண்டும், உங்கள் அனுபவங்கள் என்னென்ன, நீங்கள் எவ்வளவு சோகத்திலிருக்கிறீர்கள், நீங்கள் சந்தோஷமாயிருக்க எவ்வளவு ஆசைப்படுகிறீர்கள், நீங்கள் எவ்வாறெல்லாம் புண்பட்டு இருக்கிறீர்கள், உங்கள் குறிக்கோள்களை நிறைவேற்ற எவ்வளவு ஆர்வத்துடனிருக்கிறீர்கள், உங்கள் கடந்த கால எண்ணங்கள் என்பது போன்ற பல எண்ணங்களால், உங்கள் மனம் நிரப்பப்பட்டு இருக்கிறதல்லவா? உங்கள் மனம், உங்கள் பிரக்ஞை, கடந்த காலத்தின்பாற்பட்டது, அல்லவா? நீங்கள் 'என்னவாக இருக்க வேண்டும்' என்பது நீங்கள் 'செய்யத் தவறியதின்' விளைவாக எழுந்தது. எதிர்காலம் என்பது, கடந்த காலத்தின் முன் நிறுத்தலாக இருக்கிறதல்லவா? ஆக, நமது மனம், கடந்த கால நிகழ்வுகளில் ஆழ்ந்து போயிருக்கிறது. கடந்த காலமாகவே, நம் மனம் இருக்கிறது. 'நான் எப்படி கடந்த காலத்திலிருந்து விடுதலை பெறுவது?' என்று நீங்கள் கேட்கிறீர்கள். கேள்வியை எழுப்பும் 'நான்' கடந்த காலத்தின்பாற்பட்டது. 'நான்' என்பது, கடந்த காலமாய் இருக்கும் மனதிலிருந்து, வேறுபட்ட தல்ல. 'நான் கடந்த காலத்திலிருந்து விடுதலை பெற வேண்டும்' என்பதில் இருக்கும் 'நான்', மனதின் அங்கமாக இருக்கிறது; மனம், எண்ணங்களால் ஆனது; எண்ணங்கள், கடந்த காலத்தின் விளைவாகத் தோன்றியவை.

'நான் கடந்த காலத்திலிருந்து விடுபட வேண்டும்' என்று மனம் சொல்லும்போது, அது, தன்னைக் கடந்த காலத்திலிருந்து பிரித்து வைத்துக் கொள்கிறது, அல்லவா? 'நான்', தன்னை, கடந்த காலத்திலிருந்து பிரித்து வைத்துக் கொண்டு விடுதலை பெற முடியுமா? விடுதலை பெற வேண்டும் என்ற விருப்பம், ஒருமுகப்பட்ட, முழுமை யான செயல்வழியாகத் தானே இருக்க வேண்டும்? 'நான்' என்று தனியாகவும், 'கடந்த காலம்' என்று தனியாகவும் பிரிந்து, இருமையில் செயல்பட்டால் விடுதலை கிட்டுமா? கடந்த காலம், தன்னை எதிர் காலமாக முன்நிறுத்தும் நிலைப்பாடுதானே அங்கு உள்ளது, இல்லையா? ஆக, மனம், கடந்த கால எண்ணங் களில் ஆழ்ந்திருக்கும்போது, எப்படி அதனால் அதிலிருந்து விடுபட முடியும்? தயவுசெய்து கவனி யுங்கள்; கடந்த காலத்தின் விளைவாக இருக்கும் என் மனம், எப்படி கடந்த காலத்திலிருந்து விடுதலை பெற முடியும்? மனம் என்பது ஞாபகங்களாகவும், அனுபவங் களாகவும், காலத்தோடு வளர்வதாகவும் இருப்பதை, மனம் என்றால் என்ன என்று நீங்கள் பரீட்சிக்கும்போது விளங்கும். ஆக, மனம் என்பது கடந்த காலம்.

மேற்கூறிய நிலையிலிருக்கும் மனம் கேட்கும் 'கடந்த காலத்திலிருந்து எப்படி விடுதலை பெறுவது?' என்ற கேள்வி நியாயமானதா? மனம், கடந்த காலமாகவே மாறும் இயக்கத்தின் முழுமையை, பூரணமாகப் புரிந்து கொள்ளும் போது, அக்கேள்வி செல்லுபடியாகுமா? உங்களால் கடந்த காலத்திலிருந்து விடுதலைப் பெற முடியும் என்று நான் சொன்னால், அந்தச் சொல்லுக்கு மதிப்பேதுமில்லை; நான் கூறியபடி நீங்கள் அனுபவிக் காத பட்சத்தில், அது உண்மையல்ல. நான் சொல்வதைக் கேட்டுவிட்டு, நீங்கள் செய்யக் கூடியதெல்லாம், மனதை கடந்த கால எண்ணங்களிலிருந்து விடுபடச் செய்ய

முயற்சிகள் எடுப்பது மட்டும்தான். ஆனால், கடந்த கால நினைவுப்பதிவுகளின் ஒட்டுமொத்த அமைப்பினை புரிந்து கொண்டீர்களானால், நீங்கள் அந்தக் கேள்வியை கேட்கவே மாட்டீர்கள். கேள்வி கேட்காததால், சரியான பதிலைப் பெறுவீர்கள். அனுபவங்கள் மற்றும் தாக்கங்கள் ஆகியவைகளின் மொத்த தொகுப்பாக இருக்கும் மனம், நிரந்தரமானதை எப்பொழுதுமே காண இயலாது. எண்ணங்களால் தொடுக்கப்படாத ஒன்றை ஒரு நாளும் பார்க்க முடியாது. ஏனென்றால், ஆதியந்த மில்லாத, நிரந்தரமானதை உணரவோ, புரிந்து கொள்ளவோ, கிரகித்துக் கொள்ளவோ, மனதிற்கு ஆற்றல் இல்லை. நிரந்தரமானது என்பது காலத்தின்பாற்பட்ட தல்ல. ஆகவே, அது மனதிலிருந்து முற்றிலுமாகத் தனித்து இருக்கிறது. காலத்தின் விளைவாகவும், ஞாபகங்களின் விளைவாகவும், அனுபவங்கள், தாக்கங் கள், தலையீடுகள் ஆகியவற்றின் விளைவாகவும், தான் இருப்பதை மனம், முழுவதுமாகப் புரிந்துகொண்டால், அதனுள் புரட்சி ஏற்படுகிறது. அந்த புரட்சி, மனதால் தோற்றுவிக்கப்பட்ட ஒன்றல்ல.

நிரந்தரமானதை, அனுபவங்களின் மூலமாகச் சென்றடைய மனம் எண்ணும் வரையில், அதனால் நிரந்தரத்தைப் பார்க்க முடியாது. 'கடந்த காலத்திலிருந்து விடுதலை கிட்டுமா?' என்று, அதனால் தான் கேட் கிறீர்கள். கேள்வியைக் கேட்பதிலிருந்தே, எண்ணத்தின் அமைப்பை அறிந்திருப்பதாகத் தெரிகிறது. மனம், கடந்த காலத்திலிருந்து விடுதலைப் பெறக்கூடும். எப்பொழு தெனில், அதன் முழுமையான செயல்பாட்டினை மனம் புரிந்து கொள்ளும் போது, விடுதலைப் பெறக்கூடும். மனதின் அத்தகைய அமைப்பிலிருந்து தோன்றும் எந்த இயக்கமும், கடந்த காலத்தின் விளைவாகவே இருப்பதை, உங்களால் பார்க்க முடியும். மனம் இதை

புரிந்து கொண்டு விட்டால், அங்கு இயக்கம் நின்று விடுகிறது; ஆகவே, அங்குப் பரிபூரண மோனம் இருக்கிறது. கடந்த காலத்தினதாக இருக்கும் எந்த இயக்கமும் காலத்தின்பாற்பட்டது. கடந்த காலத்தினதாக இருக்கும் மனதால், நிரந்தரமானதைப் புரிந்துகொள்ள வும் முடியாது. மேலும், நிரந்தரமானதை வரவேற்கும் நிலையிலும், அது இருக்க முடியாது.

**கேள்வி :** சுலபமாக மறுத்துவிடக் கூடிய விஷய மாகக் கடவுள் இல்லை. கடவுள் என்ற கருத்தினையே நீங்கள் சாடுகிறீர்கள். பிறகு, உலகத்திற்கு நீங்கள் வழங் கும் வழிதான் என்ன? கடவுள் நம்பிக்கை இல்லாமல் போனால், வாழ்க்கை, சுவாரஸ்யமற்ற சுழற்சியாக, இருண்ட நிலைக்கு இட்டு செல்வதாகவே இருக்கும்.

**கிருஷ்ணமூர்த்தி :** நீங்கள் கடவுள் கொள்கையை நம்பினாலும் நம்பாவிட்டாலும், நான் கடவுள் கொள்கையை ஒதுக்கித் தள்ளினாலும் அல்லது அழித்தாலும், உண்மை நிலை ஒன்று இருக்கிறது. அந்த உண்மை நிலையை, எந்த நம்பிக்கையின் மூலமாகவும் அறிந்து கொள்ள முடியாது. ஏனெனில், பாதுகாப்புடன் இருக்க வேண்டும் என்ற விருப்பத்தின் விளைவாக தோன்றுவது தான் நம்பிக்கை. அச்சம் கொண்டிருக்கும் மனம், எதையாவது சார்ந்திருக்க வேண்டுகிறது. கணந்தோறும் மாறும் உலக வாழ்வைப் பார்க்கும் கவலை தோய்ந்த மனம், ஆறுதல் பெற கடவுள் என்ற கொள்கையை உருவாக்குகிறது. ஆனால், கடவுளைப் பற்றிய கொள்கையாகக் கடவுள் இல்லை. கடவுள், மனதால் முன்நிறுத்தப்படக்கூடிய விஷயமல்ல. கடவுளை, மனதால் ஒருகாலும் அறிந்துகொள்ள முடியாது.

கடவுள் நம்பிக்கை, சமுதாயத்தில் பிரிவினையைத் தோற்றுவிக்கிறது. உங்களுக்குக் கடவுள் முக்கியமல்ல; உங்கள் கடவுள் நம்பிக்கை தான், கடவுளை விட உங்களுக்கு முக்கியமானதாக இருக்கிறது. இதனால் கடவுள் நம்பிக்கை, மக்களிடையே ஒற்றுமையை குலைக்கிறது. ஒருவருக்கு எதிராக ஒருவரைச் செயல்பட வைக்கிறது. உங்கள் நம்பிக்கையால், நீங்கள் உலகை இருளடையச் செய்யவில்லையா? உங்கள் கணக்கிலடங்கா நம்பிக்கைகளைப் பாருங்கள்! கடவுளின் பெயரால், நீங்கள் கொலை செய்வீர்கள், இல்லையா? சில நொடிப்பொழுதில், ஆயிரக்கணக்கான மக்களை அணுகுண்டு வீசி கொல்லும் மனிதனுக்கும், கடவுள் நம்பிக்கை இருக்கிறது. மேம்பட்ட உலகத்தை உருவாக்க நினைக்கும், கடவுள் நம்பிக்கை இல்லாத, கம்யூனிஸ்ட்டுகளும், மக்களை அழிக்கிறார்கள். ஆக, கடவுள் நம்பிக்கை கொண்டவரும், அந்த நம்பிக்கை இல்லாதவரும், பெரியதாக ஒன்றும் வித்தியாசப் படவில்லை, அல்லவா? ஆக, ஆஸ்திகர், நாத்திகர் இருவருமே, அழிவைத் தேடித் தருகிறார்கள், மக்களை இன்னலுக்கு ஆளாக்குகிறார்கள். கிருத்துவர்களும் கடவுள் நம்பிக்கை கொண்டவர்கள், ஹிந்துக்களும் கடவுள் நம்பிக்கையுடையவர்கள். ஆனாலும், அவர்கள் இரு துருவங்களாகப் பிரிந்து இருக்கிறார்கள். ஒருவரோடொருவர் சண்டை சச்சரவுகள் செய்து கொண்டும், பேராசையால் ஒருவரையொருவர் அழித்துக் கொண்டும் இருக்கிறார்கள். ஆனாலும், இரு பிரிவினருமே கடவுளில் நம்பிக்கை வைத்திருப்பதாகப் பறைசாற்றிக் கொள்கிறார்கள். கடவுள் இல்லையா? கடவுள், நம் மனதின் முன்நிறுத்தலா?

உண்மை நிலைக்கு, நீங்கள் எந்தப் பெயர் சொல்லி அழைத்தாலும் சரியே. உண்மை நிலை என்பது, மனதிற்கு அப்பாற்பட்டது. மனம், தன்னைப் பற்றி

புரிந்து கொள்ளாவிட்டால், உண்மை நிலையைக் காண முடியாது. மனம் அமைதியாகவும் சலனமற்றும் இல்லா விட்டால், அசாதாரணமான உண்மை நிலையைப் பற்றிப் புரிந்துகொள்ள முடியாது.

கடவுள் நம்பிக்கை, மனதை, அமைதியாக்கு வதில்லை. மாறாக, நம்பிக்கையானது, மனதை முடமாக்குகிறது, தளைபடுத்துகிறது, சுக்கு நூறாக்குகிறது. பாதுகாப்பிற்காக ஒன்றைச் சார்ந்திருக்கும் அச்சம் கொண்ட மனதிற்கு, மதிப்பேதுமில்லை. நம்பிக்கை, சுய பாதுகாப்பாகச் செயல்படுகிறது. நம்பிக்கை மனமறிந்த ஒன்றாக, நிச்சயமாக ஆறுதல் தரும் துணையாக இருக்கிறது. நம்பிக்கை, பிரிவினைக்கு வித்திடுகிறது, மக்களை அழிக்கிறது. இந்த நிலையில் இயங்கும் மனதால், உண்மை நிலையை உணர முடியுமா? தன்னுடைய செயல்பாட்டைப் பார்த்தறிந்த மனம், விழிப்புணர்வு பெற்று, எல்லா நம்பிக்கைகளிலிருந்தும் விடுபட வேண்டாமா? நம்பிக்கையிலிருந்து விடுபடல் என்றால் பயங்களிலிருந்து விடுபடல் என்றும் பொருளாகிறதல்லவா? நம்பிக்கைகளிலிருந்து விடு பட்டால், மனம், ஆழ்ந்த அமைதியுடனும் சலனமில்லா மலும், விருப்பு வெறுப்புகளை முன் நிறுத்தாமலும், வேட்கையில்லாமலும், புனித நூல்களின் துணையை நாடாமலும், சாதித்து விடுவோம் என்பது போன்ற நம்பிக்கைகள் அற்றும் இருக்கிறது. அச்சத்தோடு இருக்கும் மனம், உண்மை நிலையை ஒருகாலும் காண முடியாது. மனம், அச்சத்துடன் இருக்கும்போது, நம்பிக்கையை நாடுகிறது. அச்சம் கொண்ட மனம், நம்பிக்கையை, உண்மை நிலை என்று வெளிச்சம் போட்டு முன்நிறுத்துகிறது.

இந்த உண்மைகளைக் காணும் மனம், ஆழ்ந்த அமைதி பெறுகிறது. அமைதியில் மட்டும்தான், உண்மை நிலை பிரகாசிக்கிறது. நீங்கள், அதை, வாவென்று அழைக்க முடியாது. அதற்கு லஞ்சம் கொடுத்து வரவழைக்க முடியாது. உண்மை நிலையைப் பெற, நீங்கள் செய்யும் தியாகங்கள் எதனாலும் அதைப் பெற முடியாது. எந்த நற்பண்பும், உண்மைநிலையை, உங்களுக்குப் பரிசாகப் பெற்றுத் தர முடியாது. எதையும் எதிர்பார்க்காமலும், எதிலும் நம்பிக்கை வைக்காமலும், மனம் ஆழ்ந்த மோனத்திலிருக்கும்போது மட்டுமே, உண்மை நிலை அந்த மனதிற்கு வரும்.

மார்ச் 1, 1953
மும்பை.



# 8

# திறந்த மனம்

நம் வாழ்வின் பெரும்பகுதி குழப்பத்தில் கழிகிறது. குழப்பத்திலும் போராட்டத்திலும் இருந்து கொண்டு அதிலிருந்து தப்பித்து வெளிவர வழி தேடுகிறோம். நமக்கு உதவ யாரால் முடிந்தாலும், அவரை நாடி ஓடுகிறோம். நமக்குப் பொருளாதாரப் பிரச்சனை என்றால் பொருளாதார நிபுணரையோ, அரசியல்வாதியையோ அணுகுகிறோம். உள் முகத்தில் மனோரீதியாகக் குழப்பம் என்றால், மத நம்பிக்கையில் ஈடுபடுகிறோம். நமது குழப்பத்திலிருந்தும் இன்னல்களிலிருந்தும் வெளிவர, பிறர் மூலம் வழியைக் காண முயற்சிக்கிறோம். அனுபவங்கள் மற்றும் விஷய ஞானத்தைச் சேகரிப்பதின் மூலம் நம் இன்னல்களிலிருந்து விடுபட வழியைக் கண்டுபிடிக்க முடியுமா என்பதைப் பற்றி, இந்த மாலைப் பொழுதில் கலந்துரையாட நான் விரும்புகிறேன். அனுபவங்கள் மற்றும் விஷய ஞானத்தைச் சேகரிப்பதி லிருந்து மாறுபட்ட, செயல்பாட்டு முறை, மனோபாவம், வழிமுறை ஏதாவது இருக்கிறதா என்பதையும் பார்ப்போம். நுட்பமான வழிமுறை மற்றும் பயிற்சி முறைகளைத் தேடுவதை விட முக்கியத்துவம் வாய்ந்த மாறுபட்ட செயல்பாட்டு முறை இருக்கிறதா என்பதையும் பார்ப்போம்.

நிதானத்துடனும் தயக்கத்துடனும் இந்தக் கேள்வியை ஆராய்ந்து பார்க்க நினைக்கிறேன். இந்தப் பிரச்சனை உங்களுடையதாகவும் இருப்பதால், நீங்களும் என்னுடன் இந்த ஆராய்ச்சியில் பங்கேற்க போகிறீர்கள். குழப்பத்தை உண்டாக்கும் மனதின் அடிப்படை இயல்பையும் குழப்பத்திற்கான காரணத்தையும் மனதின் சாராம்சத்தையும் தீர்மானிக்க உதவும் ஒரு முறையைக் கண்டுபிடிப்பது பிரச்சனையாக இருக்கிறது. அனுபவம் மற்றும் விஷய ஞான சேகரிப்பால் வழியைக் கண்டு பிடிக்க முடியுமா? தொழில்நுட்ப அறிவை வெளியுலகத் திலிருந்தும், அனுபவ அறிவை மற்றும் புரிந்துகொள்வ தற்கான ஆற்றலை உள்முகமாகவும் சேகரித்ததால் கிடைப்பதே விஷயஞானம். என்னுள் சதா நடந்து கொண்டிருக்கும் போராட்டத்திலிருந்து, தற்காலிக நிவர்த்தியாக இல்லாமல் முழுமையான விடுதலையைப் பெற்றுத் தர விஷயஞானத்தினால் முடியுமா? என்னுள் ஓயாமல் நடந்து கொண்டிருக்கும் போராட்டங்களும் நான் உணரும் நிச்சயமற்றத் தன்மையும்தான் விஷமத் தனமான நடவடிக்கைகளில் என்னை ஈடுபடுத்துகின்றன; என் உள்முகப் போராட்டங்கள், என் செயல்களில் குழப்பங்களை ஏற்படுத்துகிறது; பிறர் உரிமையைப் பறிக்கும் விதமாக, தன்முனைப்புடன், சிகரத்தை எட்டும் தீவிரக் குறிக்கோளுடன், வாழ்க்கையை அணுகும் மனோ பாவத்தை எனக்கு அளிக்கிறது.

குறிப்பிட்ட ஒரு மனோபாவத்தை வளர்த்துக் கொள்வதாலோ அல்லது குறிப்பிட்ட ஒரு நுட்பமான வழிமுறையைக் கையாள்வதாலோ, இன்னல்கள் முடிவிற்கு வந்துவிடுமா என்று நாம் அறிந்து கொள்ள வேண்டும். அல்லது, எதையும் எதிர்பார்க்காத, விஷய ஞானத்தைச் சேகரிக்காத, தீர்மானங்கள் எதையும் கொண்டிராத, திறந்த உள்ளம் இருந்தால் மட்டும்தான்

இன்னல்கள் முடிவிற்கு வருமா? வாழ்க்கையைப் பற்றிய கருத்துகளை நாம் கொண்டிருக்கிறோம். அதைப் பற்றிய விழுமங்களைக் கணித்திருக்கிறோம். நாம் கொண்டி ருக்கும் கருத்துகளுடனும், விழுமங்களுடனும் நம் நடவடிக்கைகளை மேற்கொள்கிறோம். இந்த முறையில் செய்யப்படும் நடவடிக்கைகள், ஒரு வடிவமைப்பைப் பெறுகின்றன. அந்த வடிவமைப்பை, கலாச்சாரம் என்ற பெயரில் நாம் நிறுவுகிறோம். பிறகு, 'என்ன செய்ய வேண்டும் என்று எனக்குத் தெரியும். நான் நன்கு அறிவேன்' என்று சொல்லிக் கொள்கிறோம். நமக்குத் தெரிந்தது என்ன என்று நமக்கு தெரியுமா? நாம் விஷய ஞானம் என்று பெயரிட்டழைப்பதைப் பற்றிச் சிரத்தை யுடன் ஆராய்ந்து பார்க்க வேண்டாமா? நம்மால் எதையாவது அறிந்து கொள்ள முடியுமா? 'எனக்குத் தெரியும்' என்று சொல்லிக் கொள்வது தவறான எண்ணப் போக்கா? மனம் 'தெரியும்' என்று சொல்லும் போது, அது அறிந்து கொண்டது என்ன என்பதைக் கண்டுபிடிக்க வேண்டாமா? கணக்கிலடங்காத குழப்பங்களையும் போராட்டங்களையும் பயங்களையும் ஏமாற்றங்களை யும் தனக்குள் தோற்றுவிக்கும் மனதின் முரணான இயக்கங்களை, விஷய ஞானத்தால் சீராக்க முடியுமா?

உடல் ரீதியாகவோ மனரீதியாகவோ மனிதன் சுகவீனப்படும்போது, தொழில்நுட்ப அறிவு, அவன் கஷ்டத்தை ஓரளவிற்கு குறைக்க முடியும். விஷய ஞானம் ஒரு தடத்தில், ஒரு தளத்தில், மிகவும் அவசியமே. வறுமையின் கொடுமையை நீக்க, விஷய அறிவு தேவைப்படுகிறது. தொழில்நுட்பத்தின் மூலம் போதுமான உணவு, உடை, உறைவிடம் உற்பத்தி செய்து, வளமையைக் கூட்டி, வறுமையை விரட்டியடிக்கலாம். உடல் ஆரோக்கியத்தைப் பொறுத்தமட்டில், விஞ்ஞான அறிவு, உடல் வேதனைகளைக் குறைத்து,

வாழ்க்கையைப் பெரிதும் இலேசாக்கி இருக்கிறது. ஆனால், உள்முகப் போராட்டங்களை முடிவிற்குக் கொண்டுவர, நாம் சேகரிக்கும் விஷய ஞானம் எந்த அளவிற்கு பலனளிக்கும்? பயிற்சிகள், நுட்பமான வழிமுறைகள், தியானங்கள், போராட்டத்தைத் தவிர்க்க மனம் செய்யும் அனுசரணைகள் போன்ற மனம் கையாளும் முறைகள், மனதைத் தளைகளிலிருந்து விடுபடச் செய்து துன்பங்களிலிருந்து விடுதலை பெற உதவுமா? நீங்கள் நிறைய புத்தகங்களைப் படித்து, ஒரு வழிமுறையை, வாழ்க்கை பாதையை, வாழ்வின் நோக்கத்தைக் கண்டுபிடிக்க முயற்சி செய்கிறீர்கள்; அல்லது, பிறரை நாடிச் சென்று அவரிடமிருந்து வழிமுறையை அறிந்துகொள்ள முயற்சிக்கிறீர்கள்; வாழ்வின் நோக்கமாக நீங்கள் நினைப்பதின்படி செயல்புரிகிறீர்கள், வாழ்க்கையை நடத்துகிறீர்கள், ஆனால் கஷ்டங்களும் போராட்டங்களும் தொடர்கின்றன.

'இப்படி இருக்க வேண்டும்' என்ற நிலைக்கு 'உள்ளதை' சரிகட்டிக் கொண்டு போவது அழிவிற்கான காரணியாகச் செயல்படுகிறது. மனதிற்குள், உள் முகத்தில், நாம் மிகுந்த வருத்தத்தில் இருக்கிறோம். சேகரிக்கப்பட்ட அனுபவங்களின் மூலமாக வாழ்க்கையை எதிர் கொள்ளாமல், போராட்டத்திற்கு முற்றுப் புள்ளி வைக்கும் விதத்தில் செயல்படும் புதிய முறையொன்று இருக்கக் கூடும். 'எனக்குத் தெரியும்', 'நிறைய அனுபவங்களைச் சேகரித்து வைத்திருக்கிறேன், நான் நல்ல அனுபவசாலி', 'வாழ்க்கை எனக்குச் சொல்லிக் கொடுத்திருக்கிறது' என்பது போன்ற நம் கூற்றுகள், நாம் வாழ்க்கையை எப்படி எதிர்கொள்கிறோம் என்பதையும் அனுபவ அறிவைக் கொண்டு சவால்களைச் சந்திக்கிறோம் என்பதையும் பறை சாற்றுகின்றன. ஆக, விஷய ஞானத்தை முதலில் எடுத்துக் கொண்டு, அனுபவங்களின்

துணையுடன் நான் என் துயரங்களைச் சந்திக்கிறேன். 'உள்ளதற்கும்' 'உள்ளதாக இருக்க வேண்டியதற்கும்' இடையே தோன்றும் போராட்டம் தான் இன்னல்கள். உறவினர் மரணம், வறுமையின் கோரப்பிடி, ஏமாற்றங் கள், எரிச்சல்கள், கையாலாகாத்தனம், நிறைவேற்றப் படும்பாடு, நிரந்தரமாக அச்சத்தில் நடுக்கம் என்பதாக நாம் மனதளவில் படும் கஷ்டங்களின் இயல்பைப் பற்றி நமக்குத் தெரியும். இந்தக் கஷ்டங்களை, விஷய ஞானத்தின் துணை கொண்டே நாம் சந்திக்கிறோம், இல்லையா? அதனால் தான், 'என்ன செய்ய வேண்டும் என்று எனக்குத் தெரியும்', 'புனர்ஜென்மம், கர்மா, அனுபவங்கள், உறுதியான கொள்கைகள் ஆகியவற்றில் எனக்கு முழு நம்பிக்கை இருக்கிறது' என்றெல்லாம் சொல்லிக் கொண்டு, அன்றாட வாழ்க்கையின் நிகழ்வு களை நாம் சந்திக்கிறோம்.

வாழ்க்கையை எதிர்கொள்ள நாம் உபயோகிக்கும் அந்த விஷய ஞானத்தைப் பற்றி வினவ விரும்புகிறேன். 'எனக்குத் தெரியும்' என்று சொல்லும் மனதிற்கு, ஒரு போதும், முற்றிலும் அடக்கமான மனோபாவம் இருப்ப தில்லை. 'எனக்குத் தெரியாது' என்று சொல்லும்போது, அங்கு முழுமையான அடக்கம் தெரிகிறது. முழுமை யான அடக்கத்துடன், பணிவுடன் வாழ்க்கையைச் சந்திப்பது மிகவும் இன்றியமையாததல்லவா? நீங்கள் ஒரு பிரச்சனையில் சிக்கிக் கொள்ளும்போதும், இன்னல் களைச் சந்திக்கும்போதும் மரணத்தை எதிர்கொள்ளும் போதும் 'எனக்குத் தெரியாது' என்ற மனோபாவத்துடன் அடக்கத்துடன் அணுகுவது மிகவும் அவசியமல்லவா? அடக்கம் என்பது தூண்டுதலால் மற்றும் பயிற்சிகளால் பெறக் கூடியது அல்ல. அந்த உணர்ச்சியைப் பற்றி உங்களுக்குத் தெரியாது.

நீங்கள் அறிந்துள்ளது என்ன? மரணத்தைப் பற்றி உங்களுக்குத் தெரிந்தது என்ன? மரணத்திற்குப் பின், உடல்கள் எரிக்கப்படுவதைப் பார்க்கிறீர்கள்; உங்கள் உற்றார் உறவினர் இறப்பதைப் பார்க்கிறீர்கள். மரணத்தைப் பற்றி நீங்கள் படித்தது மற்றும் அதைப் பற்றிய உங்கள் மூட நம்பிக்கைகள் ஆகியவற்றைத் தவிர, மரணத்தைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? அறிவால் அறிய முடியாததைப் பற்றி உங்களுக்கு ஒன்றும் தெரியாது. காலத்தின் விளைவாகவும் அனுபவங்களை யும் விஷய ஞானத்தையும் சேகரித்ததின் பலனாகவும் இருக்கும் மனதினால், 'மரணத்திற்குப் பிறகு என்ன?' என்பது போன்ற அறிய முடியாததைப் பற்றித் தெரிந்து கொள்ள முடியுமா? மரணத்திற்குப் பிறகு என்ன என்பதைப் பற்றி நூற்றுக்கணக்கான புத்தகங்கள் வெளியிடப்பட்டுள்ளன. ஆனாலும் அதைப் பற்றி மனதிற்கு ஒன்றும் தெரியாது.

ஆக, உண்மையை உணர்ந்து கொள்ள, முழுமை யான பணிவு, 'நான் அறியேன்' என்ற அடக்கவுணர்வு இருப்பது மிகவும் அவசியமில்லையா? அப்பொழுது தான், அறிந்து கொள்ள வாய்ப்பு ஏற்படலாம். கடவுளைப் பற்றி நான் அறியாதபோதுதான், கடவுள் அங்கு இருக்கிறார்.

ஆனால், எனக்குத் தெரியும் என்று நான் நினைக்கி றேன். கடவுளைப் பற்றிய கருத்துக்களை நான் ஏற்கனவே சுவைத்திருக்கிறேன். ஆனால், கடவுள், கடவுளைப் பற்றிய கருத்து அல்ல. நான் துன்பத்தில் துவள்கிறேன் - சுகப்பட, கடவுளை நாடுகிறேன். குருவைத் தேடிச் செல்கிறேன் - புனித நூல்களைப் படிக்கிறேன் - கோயில் களுக்குப் போகிறேன். உண்மைப் பொருளின் தரிசனம் கணநேரத்திற்கு என் மனதிற்குக் கிடைக்கிறது. இந்த

கணப்பொழுது அனுபவமும், நான் படித்தவைகளின் ஞாபகமும் உண்மையை அறிந்த சுவையும், எனக்கு எல்லாம் தெரிந்து விட்டதாக என்னை நினைக்க வைக்கிறது. இப்படி எண்ணுவது, உண்மையில் கர்வமே ஆகும். தெரியும் என்ற நினைப்பால் தோன்றும் கர்வம் அது. ஆனால், நான் அறிந்து கொண்டது என்னவோ கண நேர தரிசனத்தின் ஞாபகமும் அனுபவமும் மட்டுமே. அந்த அனுபவமும் வரையறுக்கப்பட்ட என் மனதில் ஏற்பட்ட தாக்கமேயாகும். ஆக, நான் தற்பெருமையுடன், கர்வத்துடன் துவக்குகிறேன். ''கடவுள் என்னிடம் பேசுகிறார் என்று எனக்குத் தெரியும்'', ''எனக்கு அறிவாற்றல் இருக்கிறது'',''எனக்குத் தரிசனம் கிடைத் திருக்கிறது'' என்றெல்லாம் எண்ணுகிறேன். என் அனுபவ அறிவை விவேகம் என்று அழைக்கிறேன். ஆனால், அது அபத்தம். நான் சித்தாந்தங்களை வடிவமைத்து நெறிப்படுத்துகிறேன்; விஷய ஞானத்தைச் சேகரிக்கிறேன் ஆனால் முழுமையான அடக்கத்துடன் நேர்மையுடன் 'எனக்குத் தெரியாது' என்று ஒருபோதும் சொல்வதில்லை. எனக்குத் தெரியும் என்று நான் நினைப்பதால் நான் அப்படி சொல்வதில்லை. ஆனால், எனக்குத் தெரிந்தது எல்லாம் அனுபவங்களின் சேகரிப்பு, ஞாபகங்களின் சேகரிப்பு மட்டுமே. இந்தச் சேகரிப்புகள் என் இன்னல்களைத் தீர்த்து வைப்பதில்லை. குழப்பங்கள், முரண்பாடுகள், தாக்கங்கள், உந்துதல்கள் என்று பக்கத்திற்குப் பக்கம் இழுக்கப்படும் என் வாழ்க்கையை எப்படி எதிர்கொள்வது, எவ்வாறு செயல்படுவது என்பதையும் என் சேகரிப்புகள் சொல்லித் தருவதில்லை.

தற்பெருமையாலும், விஷய ஞானத்தாலும், அனு பவங்களாலும் மாசுபட்ட உங்கள் மனம் முற்றிலும் சுதந்திரமாக இருக்க முடியுமா? அத்தகைய உங்கள் மனம்

பணிவுடன் இருக்க முடியுமா? 'அறிந்திலேன்' என்பது பணிவு, இல்லையா? தயவுசெய்து கவனியுங்கள். உங்களுக்குத் தெரியாது என்பதை நீங்கள் அறிந்து கொண்டவுடன், நீங்கள் கண்டுபிடிக்கத் தொடங்கு கிறீர்கள், அல்லவா? அறிந்திலாதிருக்கும் நிலையை (not-knowingness) பயிற்சியால் வளர்த்துக் கொள்ள முடியாது. முழுமையான பணிவடக்கம் இருந்தால் மட்டுமே அறிந்திலாதிருத்தல் (not-knowing) சாத்தியமாகிறது. அறிந்திலாதிருத்தலைக் கொண்டிருக்கும் மனம், பிரச்சனையைச் சந்திக்கும்போது, பிரச்சனையே தீர்வைத் தந்து விடுகிறது. இதன் பொருள் என்னவென்றால் கொஞ்சமும் தற்பெருமை கொண்டிராமல் அறிந்திராத நிலையில் பரிபூரணமாக இருக்கும் மனம், தீர்வுகளைத் தரமுடியும் என்றாகிறது. ஆனால், மனமோ மேற்கூறிய நிலையிலிருக்கக் கடுமையான எதிர்ப்பைத் தெரிவிக் கிறது. உங்கள் மனதை கவனித்துப் பாருங்கள், ஐயா! 'எனக்குத் தெரியாது' என்று சொல்வது, மனதிற்கு, எவ்வளவு பெரிய கஷ்டம் என்பதைக் காண்பீர்கள். மனம் எதையாவது சார்ந்திருக்க வேண்டுவதால் 'தெரியாது' என்று சொல்வது அதற்குக் கஷ்டமாக இருக்கிறது. 'எனக்கு வாழ்வின் வழிமுறைகள் தெரியும்', 'அன்பு என்றால் என்ன என்று எனக்குத் தெரியும்', 'நான் கஷ்டப்பட்டிருக்கிறேன்', 'அதன் பொருள் எனக்கு விளங்கும்' என்று, தன் விஷய ஞானத்தால் கர்வம் கொண்ட மனம் சொல்கிறது. ஆக, அதுபோன்ற மனம், கள்ளங்கபடமற்றதல்ல. தற்பெருமையற்ற, கபடமற்ற மனம் மட்டுமே 'எனக்குத் தெரியாது' என்று சொல்லும். இது போன்ற கபடமற்ற மனம் தான், சரியான தீர்வான உண்மையைக் கண்டுபிடிக்கும். தனக்குத் தெரியாது என்றுணரும் மனமே, உண்மையைப் பெற்றுக் கொள்கிறது.

விடுதலை பெறவும், உண்மையை அடையவும், வழிமுறைகள் மற்றும் மனோரீதியான நுட்பமான வழிமுறைகள் போன்றவைகளை ஆராயும் மனம் வேண்டுவதெல்லாம், விஷய ஞானத்தை மேலும் சேகரித்து வைப்பதே. விஷய ஞானத்தைச் சேகரிப்பதின் மூலம், அது தனக்குள் ஓயாமல் நடந்து கொண்டிருக்கும் போராட்டங்களைத் தீர்த்துவிட நம்புகிறது. ஆனால் விஷய ஞானத்தைக் கொண்டு தீர்வு காண முடியாது. அது உங்களுக்கே தெரியும், சரிதானே? புத்தகங்களிலிருந்தும் அனுபவங்களிலிருந்தும் உங்களுக்கே போதுமான வரையில் தெரியும் - இருந்தும், அந்த அறிவு, நீங்கள் கஷ்டப்படுவதைத் தடுத்திருக்கிறதா?

முழுவதுமாக 'அறிந்திலாத' நிலையில் மனம் இருக்கக் கூடுமா? நுண்ணுணர்வு மற்றும் உண்மையைப் பெறுவதற்குரிய தகுதியைத் தரும், யாதொன்றும் அறியாதிருக்கும் நிலையில், மனம் இருப்பது சாத்திய மாகுமா? விஷய ஞான சேகரிப்பு இல்லாதபோது மனம் வறுமையிலிருக்கிறது - 'வறுமை' என்ற சொல்லிற்கு இந்த இடத்தில் ஆழ்ந்த, மிகவும் மேன்மையான அர்த்தம் இருக்கிறது. எதையும் சேகரிக்காத, வறுமையில் இருக்கும் மனதில் தோன்றுவது மிக உயர்ந்த சிந்தனை அல்லவா? விஷய ஞானத்தைச் சேகரித்து வைத்திராத மனம் - அது புதிய மண் - அது அறிந்திராதது (unknown). அப்பொழுது, யாரும் அறிந்திராதது, அறியாதிருக்கும் மனதை வந்தடைகிறது. அறிந்தது, ஒரு போதும் அறிந்தி ராததை உணர முடியாது. ஐயா, சொல்லப்பட்டதை வெறும் வாக்கியங்களாகக் கொள்ளாதீர்கள். அதிலிருக் கும் அர்த்தத்தைத் தெரிந்து கொண்டால், உண்மை புரிந்து விடும். கர்வம் கொண்டவர், விஷய ஞானம் பெற்றி ருக்கும் அறிவாளி, படித்த மேதை, பலனைத் தேடிச் செல்பவர் ஆகியோர் அறிந்திராததை ஒரு நாளும் அறிய

முடியாது; ஆகவே அவர்கள் படைப்பாற்றல் பெற்றவர்களாகவும் இருக்க முடியாது. அன்றாட வாழ்க்கைக்கு, இன்றைய நிலையில் மிகவும் அவசியமானவர்களாகத் தேவைப்படுபவர்கள் படைப்பாற்றல் பெற்றவர்கள்தாம். புதிய தொழில்நுட்பம் தரக்கூடியவரோ, புதிய சஞ்சீவி தரக் கூடியவரோ இன்றைய நிலைமையைச் சரி செய்து விட முடியாது. விஷயஞானத்தின் சிறிதளவு வண்டல் தங்கியிருந்தால் கூட, அங்குப் புதிய சிருஷ்டி தோன்ற முடியாது. படைப்பாற்றலுடனிருக்க மனம் வெற்றிடமாய் இருக்க வேண்டும். அதாவது, முழுவதுமாகப் பணிவடக்கத்துடன் மனம் இருக்க வேண்டும் என்று அர்த்தமாகிறது. அப்படியிருந்தால் மட்டுமே, படைப்பாற்றல் மிளிர வாய்ப்புண்டாகிறது.

**கேள்வி :** ஒன்று கூடிச் செயல்புரிய வேண்டியிருக்கும் இந்த உலகத்தில், தனி மனிதனின் சுதந்திரத்தை நீங்கள் வலியுறுத்துவது ஏன்?

**கிருஷ்ணமூர்த்தி :** ஒன்று கூடிச் செயல்புரிய சுதந்திரம் அவசியமானதல்லவா? என்னுடன் ஒத்துழைக்க வேண்டுமென்றால் நீங்கள் சுதந்திரமாக இருக்க வேண்டாமா? நான் உங்களுடன் ஒத்துழைக்க வேண்டுமென்றாலும் அப்படித்தானே? நம்மிருவருக்கும் பொதுவாகக் குறிக்கோள் இருக்கும் பட்சத்தில், சுதந்திரம் வெளிப்படுகிறதா? நாம் ஒரு பொதுவான குறிக்கோளை அறிவுப்பூர்வமாக வகுத்து, அதற்கான கோட்பாடுகளை உண்டாக்கி, அதைப்பற்றிப் பேசி, பொதுவான குறிக்கோளை நிறுவி, நீங்களும் நானும் சேர்ந்து அதற்காக உழைக்கிறோம். ஆனால், உண்மையில் நாமிருவரும் ஒன்றுபட்டு உழைக்கிறோமா? பொதுவானதாக இருக்கும் குறிக்கோள் நம்மை இணைக்கிறதா? எனக்குப் பொதுவான குறிக்கோள் இருப்பதாக நீங்கள்

நினைக்கிறீர்கள், ஆனால், அப்படி யிருக்கையில், நான் சுதந்திரமாக இருக்க முடியுமா? என் விஷயஞானத்தைக் கொண்டு, என் கல்வியறிவைக் கொண்டு, என் அனுபவங்களைக் கொண்டு, நான் ஒரு குறிக்கோளை நிறுவி, ''இது தான் வாழ்வின் நோக்கம்'' என்று சொல்கிறேன். அப்படிக் குறிக்கோளை நான் நிறுவும்போது, அந்தக் குறிக்கோளில் நான் சிக்கிக் கொண்டு விடவில்லையா? அதற்கு நான் அடிமையாகி விடவில்லையா? இந்நிலையில், சிருஷ்டித்தல் உள்ளதா? புதியவைகளைத் தோற்றுவிப்பதற்கு, நாம் சுதந்திரமான வர்களாக, பொதுவான குறிக்கோளில் சிக்கிக் கொள்ளாத வர்களாக இருத்தல் அவசியம்.

கூட்டுச் செயல்பாடு என்றால் என்ன? அப்படிச் செயல்பட இயலுமா? நாம் தனிநபர்களாக இருப்பதால், கூட்டுச் செயல் என்று எதுவும் இருப்பதற்கில்லை. நீங்களும் நானும் சேர்ந்து ஒரு ஓவியத்திற்கு வண்ணம் தீட்ட முடியாது. கூட்டுச் செயல்பாடு என்று எதுவு மில்லை. ஒட்டுமொத்த சிந்தனை என்று தானிருக்கிறது. கூட்டுச் சிந்தனை நம்மை ஒன்றுபடுத்தி செயல்பட வைக்கிறது. ஆக, கூட்டுச் செயல்பாடு முக்கியமில்லை; கூட்டுச் சிந்தனையைப் (collective thinking) பற்றி அறிந்து கொள்வது முக்கியமாகும்.

கூட்டுச் சிந்தனை என்று எதை நாம் அழைக்கி றோம்? கூட்டுச் சிந்தனை உருவாக முடியுமா? நாம் அனைவரும் எப்பொழுது ஒரே மாதிரியாகச் சிந்திக்கி றோம்? நாமெல்லோரும் கம்யூனிஸ்ட்களாகவோ, சோஷ லிஸ்ட்களாகவோ, கத்தோலிக்கராகவோ, மற்றும் பிறிதொரு பிரிவினராகவோ இருக்கும்போது, குறிப்பிட்ட வொரு வரையறைக்குட்பட்ட சிந்தனை வழிக்குக் கட்டுப் படுத்தப்பட்டிருப்பதால், நாமெல்லோரும் ஒன்றுபட்டு

செயலாற்றுகிறோம். கூட்டுச் சிந்தனையின்படி நடக்கும் போது, என்ன நிகழ்கிறது? சித்திரவதை சிறைகள், பூண்டோடு அழித்தல், அடக்குமுறை போன்றவைகள், கூட்டுச் சிந்தனையின்படி நடக்கும்போது நிகழ்கிற தல்லவா? சிலரால் நிறுவப்பட்ட குழுமம், மொத்தத்தைக் குறிப்பதாகி விடுகிறது. கட்சியின் கொள்கைகளுக்கு விரோதமாகவோ குழுமத்தின் நிலைப்பாட்டிற்கு எதிராகவோ நீங்கள் சிந்திக்கக் கூடாது. அப்படிச் சிந்தித்தால், நீங்கள் அடக்கப்படுவீர்கள், சித்திரவதைக் குள்ளாவீர்கள், அழிக்கப்படுவீர்கள். ஆகவே, கூட்டுச் சிந்தனை, மிகுந்த துயரத்திற்கும், அழிவிற்கும், கொடு மைகளுக்கும், காட்டுமிராண்டித்தனத்திற்கும் அடி கோலுகிறது. இன்றியமையாததாகத் தேவைப்படுவது கூட்டுச் சிந்தனையல்ல. ஆனால் சரியாகச் சிந்திப்பதே யாகும். வலதுசாரி அல்லது இடதுசாரி கம்யூனிஸ்ட் சித்தாந்தப்படியா அல்லது சோஷயலிஸ கொள்கைப் படியா, எதைச் சிந்திப்பது என்ற ஆய்வு தேவையல்ல. ஆனால், சரியான முறையில் எப்படிச் சிந்திப்பது என்பதை அறிந்துகொள்வது அவசியம்.

சித்தாந்த கொள்கைகளின்படி, எதைச் சிந்திக்க வேண்டும் என்று மனதிற்கு வரையறைபடுத்திச் சொல்லி விட்டால், பிறகு கூட்டுச் செயல்பாடு சாத்தியமாகும் என்று நினைக்கிறோம். ஆனால், அந்த முறை, மனிதனை அழிப்பதாகவுள்ளது, இல்லையா? எதைச் சிந்திக்க வேண்டும் என்று நமக்கு வரையறுக்கப்பட்டு விட்டால், புதிய கோணத்தில் ஆய்வு செய்வதெல்லாம் முடிவிற்கு வந்துவிடுமல்லவா? சுதந்திரமாகச் சிந்திப்பதும் முடிவிற்கு வந்துவிடுமல்லவா? ஆக, கூட்டுச் செயல்பாடோ, கூட்டுச் சிந்தனையோ, நமது பிரச்சனையல்ல. சரியான முறையில் எப்படிச் சிந்திப்பது என்பதுதான் நமது பிரச்சனையாகவுள்ளது. புத்தகத்தைப்

படித்து எப்படி சிந்திப்பது என்பதை நம்மால் கற்றுக் கொள்ள முடியாது. உறவு முறையிலும் தன்னறிவிலும் சிந்திப்பதற்கு வழியைக் காணலாம். சுதந்திரம் மறுக்கப்பட்டால், உங்களிடம் தன்னறிவு (self-knowledge) இருக்காது. வேலையை இழந்துவிடும் அபாயத்தைப் பற்றிய பயம், உங்கள் மனைவி / கணவர் மற்றும் அண்டை வீட்டுக்காரர் என்ன சொல்லிவிடுவாரோ என்ற பயம் போன்ற பயங்களுடன் சுதந்திரம் இல்லாமல் நீங்கள் இருந்தீர்களேயானால், உங்களுக்குத் தன்னறிவு இருக்காது.

ஆகவே, தன்னறிவு பெறும் வழிமுறையில் சுதந்திரம் கிடைக்கிறது. இத்தகைய சுதந்திரம், கூட்டுச் செயல்பாட்டைக் கொண்டு வரும். தளைபட்ட மனதைக் கட்டாயப்படுத்தி, கூட்டுச் செயல்பாட்டைக் கொண்டு வர முடியாது. நிர்ப்பந்தம், பலாத்காரம், வெகுமதி அல்லது தண்டனை போன்ற முறைகளால் கூட்டுச் செயல்பாட்டைக் கொண்டு வரமுடியாது. தன்னறிவின் மூலம், சத்தியம் என்றால் என்ன என்பதை நீங்களும் நானும் கண்டுகொள்ள முடியுமேயானால், அங்குச் சுதந்திரம் மலரக்கூடும்; அதன்பின், உண்மையான கூட்டுச் செயல்பாடு அங்கு நடைபெற வாய்ப்புகள் உண்டு.

பொதுவான குறிக்கோள் இருப்பதால் கூட்டுச் செயல்பாடு இருக்க வேண்டும் என்றில்லை. மகிழ்ச்சியான, சிறந்த பண்பாடுடைய இந்தியா மற்றும் உலகம் வேண்டுமென்று நாமெல்லோருமே விரும்புகிறோம். இந்தியாவை அப்படி ஆக்குவதே நமது குறிக்கோள் என்று திரும்பத் திரும்பக் கூறுகிறோம். ஆனால், அந்த குறிக்கோளைத் தினம் தினம் காற்றில் பறக்க விடுகிறோம், அல்லவா? மனிதநேயம், உலக அமைதி, கடவுள் பக்தி ஆகியவை கட்டாயம் இருக்க வேண்டும்

என்று, நாமெல்லோரும் உரத்த குரலில் சொல்கிறோம். அதுதான் நமது பொதுவான குறிக்கோள், இல்லையா? ஆனால், அந்தப் பொது குறிக்கோளுடனிருந்து கொண்டே, ஒருவரை யொருவர் நாம் அழிக்கவில் லையா? இடது சாரிகள், கூட்டுச் சிந்தனையின் மூலம் கூட்டுச் செயல்பாடு நடக்க வேண்டும் என்று சொல்கிறார்கள். ஆனால், போர், அழிவு, துயரம் ஆகியவற்றை அவர்கள் செயல்படுத்து கிறார்களே, சரிதானே? ஆக, பொது குறிக்கோள், பொது கருத்து, கடவுள் பக்தி, அமைதி காண விருப்பம் ஆகிய எதுவும் நம்மை ஒன்றுபடுத்துவதில்லை.

தன்னறிவு மற்றும் சுதந்திரத்தால் மலரும் அன்பு நம்மை ஒன்றுபடுத்துகிறது. 'நான்' என்பது தனித்து நிற்கும் பொருளல்ல; நான் உலகத்துடன் தொடர்பு கொண்டிருக்கிறேன்; நான் மொத்த இயக்கமாவேன். 'நானும்', 'நீங்களுமாக' இருக்கும் மொத்த இயக்கத்தைப் புரிந்து கொண்டால், சுதந்திரம் கிட்டுகிறது. தன்னறிவு என்பது 'நான்' என்று தனித்து நிற்கும் பொருளைப் பற்றிய அறிவல்ல; அது 'நான்' என்ற எல்லாமுமாய், ஒவ்வொருவரிலும் இருக்கும் 'நான்' என்பதைப் பற்றிய அறிவு. ஏனென்றால், நான் தனியாக விடப்படவில்லை; தனியாக வாழ யாராலும் முடியாது. 'நான்' என்பது மனித குலத்தின் மொத்த செயல்பாட்டு வழி; 'நான்' என்பது 'நீ'யாக நமக்கிடையே உள்ள தொடர்பில் உள்ளது. இத்தகைய 'நான்' எனும் உணர்வைப் புரிந்து கொள்வதே தன்னறிவாகிறது. தன்னறிவு பெற்ற நிலையில் சுதந்திரம் கிட்டுகிறது. சுதந்திரமான நிலையில், உலகம், நம் உலகமாகத் தோன்றுகிறது. ஹிந்து உலகமோ, கத்தோலிக்க உலகமோ, கம்யூனிஸ்ட் உலகமாகவோ தோன்றாமல், நம் உலகமாக இருக்கிறது. நம் உலகத்தில், நீங்களும் நானும் புதிய சிந்தனைகளுடன் சந்தோஷமாக

வாழலாம். பொது குறிக்கோள் போன்ற கருத்துக்களால் கட்டுப்பட்டிருந்தால், மகிழ்ச்சி கிடைக்காது. மனித குலத்தின் மொத்த இயக்கமாக இருக்கும், 'நான், எனது' என்ற உணர்வைப் புரிந்துகொண்ட தன்னறிவால் கிடைக்கும் சுதந்திரத்தால் மட்டுமே கூட்டுச் சிந்தனையை யும் கூட்டுச் செயல்பாட்டையும் கொணர இயலும்.

மதங்களாலும், நம்பிக்கைகளாலும், அரசியல் கட்சி களாலும் சிதைக்கப்பட்ட உலகத்திலிருக்கும் நாம் ஒவ்வொருவரும், மேற்கூறிய உண்மைகளைப் புரிந்து கொள்வது மிகவும் அவசியமாகிறது. கூட்டுச் செயல் பாட்டின் மூலம் நமக்கு விமோசனம் கிடைக்காது. அவ்வழி, மிகுதியான துயரத்திற்கும், அழிவிற்கும், சண்டைகளுக்கும் அழைத்துச் செல்கிறது; கொடுங் கோலாட்சியில் அது முடிவுறுகிறது. ஆனால், ஏதோ ஒரு வகை பாதுகாப்பு, நம்மில் பலருக்குத் தேவைப்படுகிறது. பாதுகாப்பை நாடும் அந்தக் கணத்திலேயே, மனம் தொலைந்து விடுகிறது. மனோரீதியான பாதுகாப்பு மற்றும் சமூகத்தில் கௌரவம் பெற்றுள்ள மனிதர், சுதந்திரமாக இருப்பதில்லை. எதையும் சார்ந்திராத, பாது காப்பற்றவர்தான் சுதந்திரமாக இருக்கிறார். தயவுசெய்து கவனமாகக் கேளுங்கள். மனதை மேம்படுத்தும் எந்த கொள்கையிலும், நம்பிக்கையிலும், வழிமுறையிலும், சுதந்திரம் இருப்பதில்லை. பாதுகாப்பிற்காக, மனம், வரையறுக்கப்பட்ட செயல் மாதிரிக்குத் தன்னைத் தளை படுத்திக் கொள்கிறது. அப்படி அடிமைப்படுத்திக் கொள்வதால், மனதின் செயல்கள் மிகுதியான துன்பத்தை ஏற்படுத்துகிறது. 'நான், எனது' என்ற உணர்வுகளின் இயக்கத்தையும் அதன் உட்பொருளையும் நன்கு அறிந்து கொண்ட சுதந்திரமான மனம் மட்டும்தான், புதியதோர் உலகைச் சமைக்க முடியும். நமது உலகமாக அப்புதிய உலகம் இருக்கும். கொடுங்கோலாட்சியையோ அல்லது கடவுளையோ வரைவு மாதிரியாகக் கொண்டு உருவாக்கப்

பட்டதல்ல அவ்வுலகம். நீங்களும் நானும் உழைத்து, உருவாக்கி, பேணிப் பாதுகாத்து, நிர்மாணிக்க வேண்டிய புதியதோர் உலகம் அது.

**கேள்வி :** உங்கள் முன் அமர்ந்து நீங்கள் பேசுவதைக் கேட்கும்பொழுது, அளவிடற்கரிய மோனக் கடலின் முன் அமர்ந்திருப்பதாக உணர்கிறேன். உங்கள் மேல் மரியாதையும் பயபக்தியும் எனக்கு உடனே தோன்று கிறது. எனக்கு அப்படித் தோன்றுவதால் நான் உங்களைக் குருவாக ஏற்றுக் கொள்கிறேன் என்றா பொருள்படும், இல்லையல்லவா?

**கிருஷ்ணமூர்த்தி :** மரியாதை, பக்தி என்பதற்கு என்ன பொருள்? பக்தி, மரியாதை என்பது ஒன்றின் மேல் வைக்கும் பக்தி என்பதாகப் பொருள் கொள்ளக் கூடாது. எனக்கு ஒன்றின் மேல் பக்தி, ஒருவரின் மேல் மரியாதை என்றால், நான் அதிகார வர்க்கம் ஒன்றை உருவாக்கு கிறேன் என்றாகிறது. நான் ஒருவரிடம் காட்டும் மரியாதையும் பக்தியும் எனக்கு உள்ளாழ் மனதில் ஆறுதலையும் திருப்தியையும் எனக்கே தெரியாமல் எனக்களிக்கிறது. அதனால் நான் அதைச் சார்ந்திருக்கி றேன், அதை நம்பி வாழ்கிறேன். நான் பக்தியும் மரியா தையையும் ஒருவரின் மீது வைத்துக் கொண்டிருக்கும் வரை நான் அடிமையாக இருக்கிறேன், சுதந்திரம் இருப்பதில்லை.

மரியாதையும் பக்தியும் ஒன்றின் மேல் இருப்பதாக இல்லாமல், தனித்துவத்துடன் இருக்க முடியாதா? அதாவது, நீங்கள் மரத்தை மதிக்கிறீர்கள், பறவையை, வீதியிலிருக்கும் குழந்தையை, பிச்சைக்காரரை அல்லது உங்கள் வேலைக்காரரை நீங்கள் மதிக்கிறீர்கள்; மரியாதை ஏதோ ஒன்றிற்குக் காண்பிக்கப்படவில்லை; அது உங்களுக்குள் இருக்கிறது, மரியாதையுணர்வு உங்களுக் குள் இருக்கிறது. பிறருக்கு காண்பிக்கப்படும் மரியாதை

யில் அடிப்படையில் பயம் இருக்கிறதா? கடவுளுக்குச் செலுத்தும் பக்தியைவிட, ஒருவருக்குக் காட்டும் மரியாதையை விட, நமக்குள் மரியாதையுணர்வு இருக்க வேண்டியது மிகவும் அவசியமானதல்லவா? மரியாதை காட்டும் உணர்வு நம்மிடம் இருந்தால், அங்குச் சமத்துவம் நிலைகொள்கிறது. அரசியல்வாதிகளும், வழக்கறிஞர் களும் கம்யூனிஸ்ட்களும் நிறுவ நினைக்கும் சமத்துவம், சமத்துவமே அல்ல. ஏனென்றால், என்னை விட உங்களுக்கு மிகுந்த ஆற்றல், புத்தி கூர்மை, வரப்பிரசாதங்கள் இருப்பதால், அனைவரும் ஒரே சீராய் இல்லாததால் ஏற்றத் தாழ்வுகள் எப்பொழுதும் இருந்து கொண்டேயிருக்கும். சமத்துவம் காண்பது கடினம். ஆனால், என்னுள் ஒருவர் மீதோ ஒன்றின் மீதோ மரியாதை காண்பிப்பதாக இல்லாத, இயல்பாக அமைந்திருக்கும் மரியாதையுணர்வு இருக்குமேயானால், அதுதான் அன்பு; ஒன்றின் மீது காட்டும் அன்பாக அது இருப்பதில்லை. ஒரு உருவகத்தின் மீதோ ஒருவரின் மீதோ நான் பக்தி கொண்டிருப்பதை என்னால் உணரமுடியும்போது, அங்கு அன்பு இருப்பதில்லை. அங்கு என்னால் மதிக்கப்படும் மேன்மையான ஒன்றும் மேன்மை குறைந்த நானும் என்று பிரிக்கப்பட்டு ஏற்றத் தாழ்வு இருக்கிறது.

ஆக, நான் வாழ்க்கையின் ஒட்டுமொத்த செயல் முறையை அறிந்து கொள்ளும் போது, மரியாதையும் பக்தியும் அதில் இயற்கையாகவே இயைந்திருக்கிறது. வாழ்க்கை என்பது 'நான், எனது' என்ற உணர்வுகளின் செயல்பாடுகள் மட்டுமே அல்ல; விலங்குகள், இயற்கை, பிச்சை எடுக்கும் சிறுவன் என்று அனைத்தும் வாழ்வில் அடங்கும். மரங்களை நாம் அடிக்கடி பார்ப்பதுண்டா? மரத்தை, பூக்களைக் கவனித்துப் பார்த்திருக்கிறீர்களா? அந்த விசித்திரமான, அற்புதமான உயிரை, வாழ்வைப்

பார்க்கும்போது மேலிடும் மரியாதையுணர்வை உணர்ந்திருக்கிறீர்களா? அந்த உணர்வின் பொருள், எதையும் யாசிக்காததும் முழுமையானதுமான பணிவு, அடக்கம் அங்கு உள்ளது என்பதாகும். உங்கள் மனம் சலனமற்று அமைதியில் அடங்குகிறது. மோனத்திலிருக்கும் மற்றவரைப் பார்க்க வேண்டிய அவசியம் உங்களுக்கில்லை. அந்தச் சலனமின்மையில், மோனம் மட்டும் தானிருக்கிறது. நீங்கள் - நான் என்பதெல்லாம் இல்லை. அந்த மோனத்தில், ஒன்றின் மீது பக்தி, மரியாதை என்றெல்லாம் இல்லாமல், மரியாதை என்ற ஒன்று மட்டுமே மனதில் இருப்பதைக் காணலாம். அப்பொழுது, வாழ்க்கை அசாதாரணமான ஜீவனுடையதாக ஆகிறது, அங்கு அதிகாரம் எதுவுமில்லை. மனம் முழுவதுமாக மோனத்தில் லயிக்கிறது.

**கேள்வி :** என் எண்ணங்களையும், உணர்வுகளையும் நான் விழிப்புடன் நோக்கும்போது, அவை மறைந்து விடுகின்றன. எதிர்பாராத வேளையில் அவை மீண்டும் என்னைப் பிடித்து, நசுக்கி விடுகின்றன. என்னைத் தொந்தரவு செய்யும் எண்ணங்கள் எல்லாவற்றிலிருந்தும் விடுதலை பெற என்றாவது என்னால் முடியுமா? மனத் தளர்ச்சிக்கும் மனக் கிளர்ச்சிக்கும் இடையில் தான் எந்நாளும் நான் வாழ வேண்டுமா?

**கிருஷ்ணமூர்த்தி :** ஐயா, எண்ணங்கள் எப்படிச் செயல்படுகின்றன? எண்ணுதல் என்றால் என்ன? நான் உங்களைக் கேள்வி கேட்கிறேன்; உங்களிடம் பதில் இருக்கும் என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும். உங்கள் மனம் குதித்தெழுந்து உடனே பதிலளிக்கிறது. ''எனக்குத் தெரியாது; நான் பதிலைக் கண்டுபிடிக்கப் போகிறேன்'' என்று மனம் ஒரு போதும் சொல்வதில்லை. உங்கள் மனதைக் கவனமாகப் பாருங்கள் - இதற்கான பதிலை உங்களால் கண்டுபிடிக்க முடியும்.

சரியான சிந்தனை, தவறான சிந்தனை என்று குறிப்பிடப்படுபவைகளைப் பற்றிச் சொல்லவில்லை - பொதுவாக, சிந்தித்தல் என்பதின் முழுமையான செயல்பாட்டு வழிமுறை என்ன? நீங்கள் எப்பொழுது சிந்திக்கிறீர்கள்? நீங்கள் சவாலைச் சந்திக்கும்போதுதான் சிந்திக்கிறீர்கள். உங்களிடம் ஒரு கேள்வி கேட்கப் பட்டால், உங்கள் வாழ்க்கை பின்னணியிலிருந்து, உங்கள் ஞாபகங்களிலிருந்து, உங்கள் அனுபவங்களிலிருந்து பதிலை எண்ணிப் பார்த்து அதற்கேற்பப் பதிலளிக் கிறீர்கள். ஆக, எண்ணுதல் என்பது நாம் எதிர்கொள்ளும் சவால்களுக்குப் பதிலளிப்பதற்கான செயல்முறையே. ''நான் கஷ்டத்திலிருக்கிறேன், இதிலிருந்து மீள வழி கண்டுபிடிக்க வேண்டும்'' என்ற சவாலுக்கு விடை காண சிந்திக்கிறேன். ''மீள வழி காண வேண்டும்'' என்பதுதான் பிரச்சனை, கேள்வி. வெளியிலிருந்து இதற்கு விடை கிடைக்காவிட்டால், நான் எனக்குள்ளே எண்ணிப் பார்க்கிறேன். என் அனுபவங்கள் மற்றும் என் விஷய ஞானம் ஆகியவற்றின் துணையைச் சேர்த்துக் கொள் கிறேன். எனக்கு 'மீள வழி கண்டுபிடிக்க வேண்டிய' பிரச்சனைக்கு, அனுபவங்களும் விஷய ஞானமும் அவைகளுக்குரிய வகையில் விடை காண முயல்கின்றன. ஆக, சிந்திக்கும் செயலை நான் தொடங்குகிறேன்.

கடந்த காலத்தின் பிரதிபலிப்பாகவும், கடந்த காலத்திற்குப் பிரதிபலிப்பாகவும், சிந்தனை இருக்கிறது. உங்கள் விட்டைச் சென்றடைய வேண்டிய வழி எனக்குத் தெரியாது. உங்களுக்கு வழி தெரியுமென்பதால், நீங்கள் அதை எனக்கு சொல்கிறீர்கள். நான், 'எது கடவுள்? என்று கேட்கிறேன். நீங்கள் உடனே மறுமொழியளிக்கி றீர்கள். ஏனென்றால், அதைப் பற்றி நீங்கள் படித்திருக்கி றீர்கள்; நீங்கள் படித்ததை உங்கள் மனம் நம்பிக்கையுடன் ஏற்றுக் கொள்வதால், அந்த நம்பிக்கையால் அது கட்டுட

படுத்தப்படுகிறது. அந்தக் கட்டுப்படுத்தப்பட்ட மனம், அது கொண்ட நம்பிக்கைக்கேற்ப மறுமொழி அளிக்கிறது. உங்களுக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை என்றால், அந்த உங்கள் எண்ணத்திற்கேற்ப, நீங்கள் பதிலளிப்பீர்கள். எனவே, கடந்த கால அனுபவங்களுக் கும், தாக்கங்களுக்கும், வாய்மொழி வடிவம் கொடுக்கும் செய்முறையே சிந்திப்பது என்றாகிறது.

இப்போது, கேட்கப்பட வேண்டிய கேள்வியாக இருப்பது ''கடந்த கால அனுபவங்களின் செயல் பாட்டை விழிப்புடன் கவனித்து புரிந்து கொண்டு, அந்த அறிதலால், சிந்திப்பதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்க முடியுமா?'' என்பதே. ஒருமுகப்பட்டு முழுமையாக நான் எண்ணும்போது, அங்கு எண்ணுதல் இல்லை. ஒரு முகப்பட்டு தீவிரத்துடன் ஒரு கருத்தினையோ அல்லது ஒரு செயலையோ மட்டும் கவனிப்பது மட்டும், சிந்திப்பதையே குறிக்கிறது. ஏனென்றால், பிற விஷயங்களை ஒதுக்கி விட்டு ஒன்றின்மேல் மட்டும் கவனம் செல்லும்போது, அங்கும் எண்ணுதல் செயல் படுகிறது. மனம், ஒரு கொள்கையில் தீவிர கவனம் செலுத்தும்போதோ, கடிதம் எழுதும்போதோ, ஒரு பிரச்சனையைப் பற்றி எண்ணும்போதோ, ஒரே குறியாக ஒருமுகப்பாட்டுடன் அச்செயல்களில் ஈடுபடுகிறது. அங்குப் பிற எண்ணங்கள் ஒதுக்கப்படுகின்றன. இருப்பினும், அங்கு மனமறிந்தோ அல்லது உள்ளாழ் மனநிலையிலோ, சிந்தித்தல் நடைபெற்றுக் கொண்டி ருக்கிறது.

ஆனால், விழிப்புணர்வு முழுமையாக இருக்கும் போது, குறிப்பிட்ட ஒரு கருத்தின் மீதோ செயலின் மீதோ மட்டும் ஒருமுகப்படுத்துதல் இல்லை; சிந்தித்தல் என்ற பிரச்சனையின் மொத்த பரிமாணத்தைப் பற்றிய விழிப்புணர்வு இருக்கிறது. அதில், ஒன்றில் கருத்தொரு

மித்து, மற்றவற்றை நீக்குதல் என்ற நிலைப்பாடும் இல்லை. குறிப்பிட்ட ஒரு எண்ணத்தை எவ்வாறு அகற்றுவது என்ற விசாரணையில், தொக்கி நிற்பது என்ன?

தயவுசெய்து கவனித்துக் கொண்டு வாருங்கள் - விழிப்புணர்வு என்று நான் குறிப்பிடுவதின் பொருளைப் புரிந்து கொள்வீர்கள். ஒரு குறிப்பிட்ட எண்ணம் உங்களைக் குழப்பத்தில் ஆழ்த்துகிறது. அந்த எண்ணத்தை அகற்றி விட விரும்புகிறீர்கள். அந்த எண்ணம் தோன்றாம லிருக்க, அதைத் தடுத்து நிறுத்த, வழிமுறைகளைக் காண முயற்சி செய்கிறீர்கள். ஆனால், இனிமையான ஞாபகங் களை, இனிமையான கருத்துகளை, இனிமையான எண்ணங்களைப் பத்திரப்படுத்தி வைக்க விரும்புகிறீர்கள். வேதனை மற்றும் துயரம் அளிக்கும் எண்ணங்களை அகற்றி விடவும், ஊக்கம், சக்தி, ஆற்றல் தருவதால் திருப்தி அளிப்பதாகவும், சுகமானதாகவும் இருக்கும் எண்ணங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டும் இருக்கிறோம். ஆக, வேதனை தரும் எண்ணத்தை அகற்றி விட நினைக்கும் அதே சமயத்தில் சுகமளிக்கும் எண்ணத்தைப் பிடித்து வைத்துக்கொள்ள நினைப்பதால், என்ன நேரிடுகிறது? நீங்கள் எண்ணுதலின் முழு பரிமாணத்தைப் பற்றி அறிய அக்கறை எடுத்துக்கொள்ள வில்லை. எப்படி வேதனை தருவதை அகற்றுவது, சுகமளிப்பதைத் தக்கவைத்துக்கொள்வது என்பதில் மட்டுமே அக்கறை செலுத்துகிறீர்கள். ஆனால், இங்கு நாம் எண்ணுதலின் முழுபரிமாணத்தைப் பற்றியே கவனத்தில் கொள்கிறோம். என்னால், எல்லா கோணங் களிலிருந்தும் பார்த்து, கடந்த காலத்தைப் பற்றிய முழுமையான அறிவைப் பெற முடியுமேயானால், கடந்த காலத்திலிருந்து எனக்கு விடுதலை கிடைக்கும். கடந்த காலத்தின் குறிப்பிட்ட ஒரு பகுதியை மட்டும்

அகற்ற எண்ணாமல், கடந்த காலத்தைப் பற்றிய முழுமையான தெளிவு கிடைப்பதால், குறிப்பிட்ட பகுதியிலிருந்து மட்டுமின்றி, மொத்தமாகவே கடந்த காலத்திலிருந்து விடுதலை கிடைக்கிறது.

ஆனால், சுகமான அனுபவங்களைப் பிடித்து வைத்துக் கொண்டு, வேதனைகளை அகற்றிவிட நாம் விரும்புவது, உண்மைதான். ஆனால், எண்ணுதல் என்பது கடந்த காலத்தின்பாற்பட்டது என்ற விசாரணையில், கடந்த காலத்தை முழுமையாக எடுத்துக் கொள்கிறோம். அதனால், நல்ல எண்ணங்கள், தீய எண்ணங்கள், நல்ல கடந்த காலம், தீய கடந்த காலம் என்றெல்லாம் பகுத்துப் பார்க்கவில்லை. நம் விசாரணைக்காக, கடந்த காலத்தை மொத்தமாக எடுத்துக் கொள்கிறோமே தவிர, நல்லது தீயது என்று பிரிப்பதில்லை.

அடுத்த கட்டமாக, கடந்த காலத்திலிருந்து மனம் விடுதலை பெற முடியுமா? எண்ணங்களிலிருந்து விடுதலை பெற முடியுமா? நல்ல எண்ணங்களிலிருந்து விடுதலை, தீய • எண்ணங்களிலிருந்து விடுதலை என்றெல்லாம் இல்லை - எண்ணங்களிலிருந்து விடுதலை பெற முடியுமா? நான் இதை எப்படி கண்டுபிடிப்பது? என் மனம் எதில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறது என்பதைப் பார்த்தால் மட்டுமே, எண்ணங்களை முடிவுறச் செய்யும் வழியை என்னால் கண்டுபிடிக்க முடியும். நல்ல எண்ணங்களோ, தீய எண்ணங்களோ என் மனதை ஆக்ரமித்துக் கொண்டிருந்தால், அது கடந்த காலத்தால் ஆக்ரமிக்கப்பட்டுள்ளது என்றாகிறது. ஆக, அது கடந்த காலத்திலிருந்து விடுபடவில்லை. மனம் எதில் ஈடுபட்டிருக்கிறது என்பதை அறிவது அவசியம். மனதின் ஈடுபாடு என்று ஏதாவது இருக்கும்பட்சத்தில், நமது பிரக்ஞை கடந்த காலத்தில் லயித்திருப்பதால், மனம் ஈடுபட்டிருப்பதும் கடந்த காலத்தியதாகவே

இருக்கிறது. மேலோட்டமாக மட்டுமில்லாமல் உள்ளாழ் மனதிலும் கடந்த காலத்தின் தாக்கம் இருக்கிறது. ஆகவே, தன்னை ஆக்ரமித்துக் கொண்டிருக்கும் எல்லாவற்றி லிருந்தும் மனம் தன்னை விடுவித்துக்கொள்ள முடியுமா என்பது கேள்வி. உங்கள் மனதைக் கண்காணித்துப் பாருங்கள், ஐயா! விடையைக் காண முடியும்.

எண்ணங்களும், ஞாபகங்களும் தன்னை ஆக்ரமித்துக் கொள்ளாமல் பார்த்துக் கொள்ள மனதால் இயலுமா? மனம், எந்தவொன்றையும் தேர்ந்தெடுக்காமல், எண்ணங் களையும் ஞாபகங்களையும் ஓடவிட முடியுமா? நல்ல எண்ணமோ, தீய எண்ணமோ எதுவாயிருப்பினும் அந்த ஒரு எண்ணத்தில் மனம் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளு மேயானால், அது கடந்த காலத்தில் கவனம் செலுத்துவ தாக ஆகிறது. மதிற்சுவற்றின் மேல் உட்கார்ந்து கொண்டு, வருவதையும் போவதையும் வேடிக்கை பார்ப்பது போல, மனம், நல்ல எண்ணம், தீய எண்ணம், இனிமையான ஞாபகம், வேதனை அளிக்கும் ஞாபகம் என்று எல்லா எண்ணங்களையும் ஞாபகங்களையும் தெரிவு எதுவும் செய்யாமல் ஈடுபாடில்லாமல் பார்க்குமேயானால், அகற்ற நினைக்கும் பகுதி மட்டுமல்லாமல், முழுமை யாகவே, கடந்த காலத்திலிருந்து விடுதலை பெற முடியும். உண்மையில் இதைச் சரியான முறையில் கவனித்து, வெறும் வார்த்தைகளாகக் கேட்காமல், உட் பொருளை அறியும் வண்ணம் கேட்டிருந்தீர் களானால், கடந்த காலத்தை விட்டு விடுதலையாவதால் சமனம் (stability), உறுதியான சமனநிலை இருப்பதைக் காண முடியும். அந்த உறுதியான சமனநிலை, மனதால் விளைந்ததல்ல, கடந்த காலத்தை விட்டு விடுதலை யானதால் கிடைத்தது.

இருப்பினும், கடந்த காலத்தை ஒருகாலும் தள்ளி வைத்து விட முடியாது. கடந்து சென்ற காலத்தை

எண்ணிப் பார்த்தல் உள்ளது. மற்றபடி, அதனோடு மூழ்கி இருத்தல் இல்லை. கடந்த கால ஞாபகங்களை, அனுபவங்களை மனம் பார்க்கலாமே தவிர, அதிலிருந்து தெரிவு செய்து ஈடுபடுவதற்கு இடமில்லை. ஞாபகங்கள் என்ற நதியின் ஓட்டத்தில் ஓர் இடத்தைத் தெரிவு செய்து வசிக்கத் தொடங்கி விட்டால், மனம் அந்த ஞாபகத்தின் ஆக்ரமிப்பிற்கு ஆளாகிறது; ஞாபகத்தால் ஆக்ரமிக்கப் பட்ட மனம், கடந்த காலத்தால் தளைபடுகிறது. கடந்த காலத்தின்பாற்பட்ட மனம், சத்தியத்தை, உண்மையை, புதுமையை, மூலப்பொருளானதை, மாசு படாததைக் காணும் ஆற்றல் இல்லாதது.

'இது நல்லது', 'இது சரியானது', 'இது கெட்டது', 'இது என்னுடையது', 'இது என்னுடையதல்ல' என்றெல் லாம் சொல்லும் கடந்த காலத்தால் ஆக்ரமிக்கப்பட்ட மனம் ஒருபோதும் உண்மையை அறிய முடியாது. ஆனால், எதனாலும் ஆக்ரமிக்கப்படாத மனம், அறிந் திராததை, எண்ணங்களால் அறிய முடியாத உன்னதத்தை பெற முடியும். சில முனிவர்களும், சில யோகிகளும் மட்டுமே அனுபவிக்கும் அசாதாரணமான நிலையாக, அறிந்திராததைப் பெறக்கூடிய நிலை இல்லை. உங்கள் மனதை உற்று நோக்கி, அது எவ்வளவு நேர்முகமாக, எளிமையாக இருக்கிறது என்பதை கண்டு கொள்ளுங்கள். அது எதில் ஈடுபாடு கொண்டிருக்கிறது என்பதையும் பாருங்கள். உங்கள் கண்டுபிடிப்பின் மூலம் கடந்த கால எண்ணங்களின் இயக்கத்தைப் புரிந்து கொண்டு, அதிலிருந்து விடுதலையும் பெறுவீர்கள்.

கடந்த காலத்திய அனுபவங்களை ஒதுக்கி தள்ளி வைத்து விட முடியாது. அது மனதில் இருந்து கொண்டு தானிருக்கும். கவனிக்கப்பட வேண்டிய விஷயம் என்ன வென்றால் கடந்த காலத்தில் மனம் கொண்டுள்ள ஈடுபாடுதான். சுகமான அனுபவங்களைப் பற்றிக்

கொண்டு, வேதனை அளிப்பவைகளை உதறித் தள்ள நினைக்கும் மனம், கடந்த காலத்தில் ஈடுபாடு கொண்டிருக்கிறது. ஆனால், கடந்த காலத்தைச் சுகமானது அல்லது வேதனையளிப்பது என்று பிரித்து, ஒன்றில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளாமல், தெரிவு எதுவும் செய்யாமல், மனப்பதிவுகளைப் பார்ப்பதோடு நிறுத்திக் கொள்ளும் மனம், கடந்த காலத்திலிருந்து விடுதலை பெறுகிறது. விடுதலை பெற்ற நிலையிலும், மனதில் கடந்த காலம் மிதந்து கொண்டுதான் இருக்கும்; நீங்கள் அதைத் தள்ளி வைக்க முடியாது; உங்கள் வீட்டிற்குச் செல்லும் வழியை நீங்கள் மறந்துவிட முடியாது. ஆனால், கடந்த காலம், மனதை ஆக்ரமித்துக் கொண்டால், அங்குச் சுதந்திரம் இருப்பதில்லை. கடந்த காலத்தால் தளைபட்ட மனம், ஓயாமல் நல்ல வார்த்தைகள், நற்பண்புகள், தியாகம், கடவுளை தேடுதல், மகிழ்ச்சி என்று பலவாறு தன்னை ஈடுபடுத்திக் கொள்கிறது; அப்படிப்பட்ட மனம், சுதந்திரமாக இருப்பதில்லை. கடந்த காலம் நிழலாகத் தொடருகிறது; எந்நேரமும் அது நம்மை மிரட்டுகிறது, அல்லது, ஊக்குவிக்கிறது அல்லது தளர்வுறச் செய்கிறது. ஆகவே, மனம் எதில் ஈடுபட்டிருக்கிறது, எது மனதை ஆக்ரமித்துக் கொண்டிருக்கிறது என்பதைக் கண்டு பிடிப்பதுதான் முக்கியம். எந்த எண்ணங்கள், எந்த ஞாபகங்கள் மனதை ஆக்ரமித்துக் கொண்டிருக்கின்றன, மனம் அவ்வாறு ஈடுபட்டிருப்பதின் நோக்கம் என்ன என்பதையெல்லாம் கண்டுபிடிப்பது மிகவும் அவசியம்.

**கேள்வி :** தியானத்தைப் பற்றி எங்களுக்குச் சொல்லுங்கள்.

**கிருஷ்ணமூர்த்தி :** நீங்கள் இப்பொழுது தியானம் செய்யவில்லையா? மனம் ஒன்றையும் அறிந்திராத போது, தியானம் உள்ளது; மனம் ஆசையற்று இருக்கும்

போது, தியானம் உள்ளது; மனம், எதையும் பின் தொடர்ந்து சென்று அடைய முற்படாதபோது, தியானம் உள்ளது; குறிப்பிட்ட ஒரு கருத்தையோ, குறிப்பிட்ட ஒரு உருவகத்தையோ அல்லது குறிப்பிட்ட ஒரு நிர்ப்பந்தத் தாலோ விசாரணை செய்யாமல் உண்மையிலேயே ஆராயும்போது, தியானம் உள்ளது. பதில் பெற வேண்டியோ, கொள்கை வகுப்பதற்காகவோ அல்லது ஏதோவொன்றைக் கண்டுபிடிப்பதற்காகவோ இல்லாமல், மனம் தேடுதலை (seeking) மேற்கொள்ளும்போது, தியானம் உள்ளது. நீங்கள் எப்பொழுது தேடிச் செல்வீர்கள்? உங்களுக்குப் பதில் தெரிந்திருந்தாலோ, உங்களுக்கு அடைய வேண்டும் என்ற விருப்பம் இருந்தாலோ, மனத்திருப்தி அடைய வேண்டும் என்று எண்ணினாலோ, சுகபோகத்தை விரும்பினாலோ, நீங்கள் தேடுதல் செய்ய மாட்டீர்கள். சுகபோகம் மற்றும் பாதுகாப்பின் மொத்த முக்கியத்துவத்தையும் அறிந்து கொண்டு, எல்லாவிதமான அதிகார அடக்குமுறை களையும் தள்ளி வைத்துவிட்டு, கடந்த காலத்தின் பிடியி லிருந்து விடுபட்டு சுதந்திரமாக இருக்கும் மனதினால் தான் தேடுதல் சாத்தியமாகும். அத்தகைய தேடுதல்தான் தியானத்தின் பூரணமான செயல்பாட்டு வழிமுறை அல்லவா? ஆதலால், தேடுதலே பக்தி என்றாக வில்லையா? தேடுதலே, மரியாதை காண்பிப்பதாக இல்லையா?

ஆக, திருப்தியடைவதற்காகத் தேடியலையாத, எதையும் வேண்டாத, துள்ளல் இல்லாத, சலனமற்ற, ஆழ்ந்த மோனத்தில் மனம் இருப்பது தியானம் ஆகும். திரும்பத் திரும்ப ஒன்றைச் சொல்லி ஜபிப்பதும், நற்பண்புகளை வளர்த்துக் கொள்வதும் தியானம் அல்ல. ஜபம் செய்தும், மற்றும் நற்பண்புகளை முயற்சி செய்து வளர்த்துக் கொள்ளும் மனதிற்கு, தியானம் கைகூடாது;

தன் வசியப்படுத்திக் கொள்வது தான் ஜபம்; பிரமிக்க வைக்கும் மாயத் தோற்றங்களைத் தன்வசியப்பட்ட நிலையில் காண முடியும். ஆனால், கடந்த காலத்தி லிருந்து விடுதலை பெற்ற, உண்மையான சுதந்திரம் பெற்ற மனம், எதனாலும் ஆக்ரமிக்கப்படுவதில்லை. அதனால், அது அசாதாரணமான விதத்தில் சலனமில்லா மல் இருக்கிறது. அத்தகைய மனம் எதையும் முன் நிறுத்திக் காட்டுவதில்லை; அந்த மனம் தியானத்தி லிருக்கிறது. அந்த தியானத்தில், தியானிப்பவர் என்று எவருமில்லை. நான் தியானம் செய்யவில்லை, நான் மோனத்தை அனுபவிக்கவில்லை - அங்கு மோனம் நிலைத்திருக்கிறது, அவ்வளவே. நான் மோனத்தை அனுபவிக்கும் அந்த கணமே, அது ஞாபகம் ஆகி விடுகிறது; அதனால் அது மோனமில்லை; அது மறைந்து விட்டது. மறைந்துபோன மோனத்தில் மனம் ஆழ்ந்து போனால், அது கடந்த காலத்தால் தளைபட்டுப் போகிறது.

ஆகவே, தியானத்தில், தியானிப்பவர் இல்லை. தியானிப்பதற்காகக் கண்களை மூடிக் கொண்டு, கால் களைச் சப்பணம் போட்டுக்கொண்டு, மனதை ஒருமுகப்படுத்தி தியானம் செய்ய முயற்சிக்கும் ஒருவர், தியானத்தில் இல்லை. தியானிக்க, தியானிப்பவர், முயற்சி எடுத்துக் கொள்ளும்போது, அவரது சொந்த கருத்துகளில் ஒளிந்திருக்கும் அவரின் சொந்த விஷயங்களையும், அவர் விரும்பி முன் நிறுத்தும் விஷயங்களையும்தான், அவர் தியானிக்கிறார். அத்தகைய மனதோடு அவரால் தியானிக்க முடியாது; தியானம் என்றால் என்ன என்பதை அவர் அறியமாட்டார்.

மனம், எத்தகைய விஷயங்களால் ஈர்க்கப்பட்டு இருக்கிறது என்பதை அறிந்து கொண்டும், அத்தகைய

விஷயங்களில் தெரிவு செய்யாமலும், ஈடுபாடு கொள்ளா மலும் இருக்கும் தேர்ந்தெடுத்தல் செய்யாத ஒருவரால், சலனமின்மை, அமைதி, மோனம் பற்றி அறிந்து கொள்ள முடியும். தேடுதலின் துவக்கத்திலேயே, அமைதி, சுதந்திரம் இருக்கிறது. விடுதலை, தேடுதலின் முடிவில் பெறுவதல்ல; அது துவக்கத்திலேயே இருக்கிறது. கடந்த காலச் சுவடே இல்லாமல், விட்டு விடுதலையாவதற்கு, மனதைப் பயிற்சிகளுக்கு உள்ளாக்கி, விடுதலை அடைய முடியாது. துவக்கத்திலேயே, மனம், சுதந்திரமாக இருக்க வேண்டும். சுதந்திரமாக இருப்பதால் தேர்ந்தெடுத்தல் இல்லை; தெரிவு செய்யாத மனம், அமைதியாக இருக்கிறது. அத்தகைய மனம், குறிப்பிட்ட ஒன்றில் ஒருமுகப்படுவதில்லை; எந்தவொன்றிலும் ஆழ்ந்து போவதில்லை. இத்தகைய அமைதியான நிலையில், அறிந்திராதது அங்குக் குடிகொண்டிருக்கிறது.

மார்ச் . 4, 1953
மும்பை.



# 9

# பேரவா

நினைத்ததை நிறைவேற்றியதால் கிடைக்கும் மன திருப்தியைப் பற்றி அறிந்து கொள்ள, ஒரு காரியத்தைத் துவங்க இருக்கும் துணிவைப் பற்றி ஆராய்ந்தால், விடை கிடைக்கக் கூடும். ஏதோவொரு வகையில் திருப்தி யடைந்தாக வேண்டியது நம்மில் பெரும்பாலானோர்க்கு அவசியமானதாகவும் அவசரத் தேவையாகவும் உள்ளது. நினைத்ததை நிறைவேற்றுவதற்காக எடுத்துக் கொள்ளும் முயற்சிகளில், பலவிதமான பிரச்சனைகள், பலவிதமான முரண்பாடுகள், பல விதமான குழப்பங்கள் எதிர்படு கின்றன. முடிவற்ற இன்னல்கள், நிறைவேற்றுதலில் தொடருகின்றன. எப்படி இன்னல்களிலிருந்து தப்புவது, நிறைவேற்றுதல் என்றில்லாமல் எப்படிச் செயலாற்று வது என்பதெல்லாம் நமக்குத் தெரியாது. நமது செயல்களால் அடையும் திருப்தியிலேயே, துக்கம் குடிகொண்டிருக்கிறது.

ஒன்றைச் செயல்படுத்துவது மட்டும் செயல் அல்ல, செயலில் சிந்தனையும் சேர்ந்திருக்கிறது, அல்லவா? செயலில் மட்டும் அக்கறை காட்டுபவர்கள் நம்மில் பலர். அச்செயல் திருப்திகரமாக அமைந்து விட்டாலும், வேட்கைகளையும் ஏக்கங்களையும் தீர்த்து வைத்து, விருப்பங்களை நிறைவேற்றி வைப்பதற்கான வாக்குறுதியை அளிப்பதாகவும் இருப்பின், நாம் வெகு

எளிதாகவே சமாதானமாகி விடுகிறோம். ஆனால், நிறைவேற்ற துடிக்கும் பேராவலுக்குப் பின்னணியில் இருக்கும் தூண்டும் சக்தியைப் (incentive)பற்றி அறிந்து கொள்ளாவிட்டால், மனதை, பயமும் ஏமாற்றமும் எந்நேரமும் வாட்டி வதைக்கும். அதனால், பின்னணியி லிருக்கும் தூண்டும் சக்தியைப் பற்றி அறிந்து கொள்வது அவசியமல்லவா? தூண்டும் சக்தி, பல மாறுபட்ட வகைகளில் இருக்கக்கூடும். பல வேறுபட்ட குறிக்கோள் கள், பல்வேறு அர்த்தங்கள் என தூண்டும் சக்தி பலவகைப்பட்டதாக இருக்கக்கூடும். மிகுந்த நிதானத் துடன், தூண்டும் சக்தியைச் சோதனை செய்து பார்த்தால், நிறைவேற்றிக் கொள்ளல் என்ற உணர்வில் பிறக்காத செயல் மற்றும் சிந்தனை இருப்பதை, நம்மால் காண முடியும்.

தூண்டும் சக்திகளில் பெரும்பான்மையானவை குறிக்கோள், அகந்தை, பாதுகாப்பு கோருதல், நல்ல பெயர் எடுத்தல் போன்ற உணர்வுகளிலிருந்தே பிறக் கின்றன. என் செயல்கள், நல்லது செய்ய வேண்டும் என்ற என் அவாவின் வெளிப்பாடே என்றும், சரியான விழுமங்களைக் காணவே, நான் செயல்படுகிறேன் என்றும், நிரந்தரமாக இருக்கக்கூடிய ஒரு சித்தாந்தத்தைப் பரப்புவதற்காக, நான் செயல்படுகிறேன் என்றும், செய்யத் தகுந்த மிகவும் முக்கியமானவைகளாக என் செயல்கள் இருக்கின்றன என்றும், இன்னும் பலவாறாக வும், நீங்களும் நானும் சொல்லிக் கொள்ளலாம். ஆனால் இனிமையாக இருக்கும் இந்த வார்த்தைகளுக்குப் பின்னால், தூண்டும் சக்தியாக இருப்பது, முன்னேற வேண்டும் என்ற அவா என்பது உண்மைதானே? நான் குருவை நாடிச் செல்கிறேன்; நான் சாதிக்க விரும்பு கிறேன்; நான் இலக்கைச் சென்றடைய விரும்புகிறேன்; நான் சுகமாக இருக்க வேண்டும்; முரண்பாடில்லாத மனம்

கொண்டிருக்க வேண்டும் - பலனை அடைந்து சாதிக்க வேண்டுமென்பது என் தூண்டும் சக்தி. செல்வத்தில் பாதுகாப்பைத் தேடி, அதைக் குறிக்கோளாகக் கொண்டு செல்வத்தைக் குவிப்பவரைப் போல, என் தூண்டும் சக்தியும் (incentive) ஒரு பலனை அடைவதில் உள்ளது. இவ்விரு இயக்கங்களும், பேரவாவின் தூண்டுதல்கள். பேரவாவைப் பூர்த்தி செய்வதில் நம் செயல்களும், முழு கவனமும், சக்தியும் செலவிடப்படுகிறது. பேரவாவைப் பொறுத்து, நமது செயல்களும் மனோபாவமும் அமை கிறது. பேரவா என்று எதுவுமில்லாமல், நிறைவேற்றப் பட வேண்டிய விருப்பங்கள் என்றில்லாமல் செயலாற்ற முடியுமா? என் தேசத்தின் மூலம், என் பிள்ளைகளின் மூலம், என் சொத்துகளின் மூலம், பட்டப் பெயர்களின் மூலம், நான் குறிப்பிடத்தக்க ஒருவராக இருக்க விரும்பு கிறேன் என்பது போன்ற விருப்பங்கள் இல்லாமல் செயலாற்ற முடியுமா? குறிப்பிடத்தக்க ஒருவராய் இருப்பதில் தோன்றும் கர்வம் அசாதாரணமானது. ஏனென்றால், அந்த கர்வம், அசாதாரணமான சக்தியை அளிக்கிறது - அதுவும் எதையும் செய்யாமலேயே, அத்தகைய சக்தி கிடைக்கிறது. கர்வமாக இருப்பதே, எனக்கு, எதிர்ப்பதற்கும், கட்டுப்படுத்துவதற்கும் வடி வமைப்பதற்கும் போதுமான சக்தியை அளிக்கிறது.

உங்கள் மனதின் இயக்கத்தை உற்று நோக்குங்கள். அதன் செயல்பாட்டை உங்களால் கவனிக்க முடியும். எவ்வளவுதான் இனிமையான வார்த்தைகளால் அவைகளை நீங்கள் மூடி மறைக்கப் பார்த்தாலும், மனதின் செயல்பாடுகளுக்குப் பின்னால் உந்துதல் சக்தி யாக இருப்பது, விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளும் எண்ணம், குறிப்பிடத் தகுந்தவராக உயர்ந்து விட ஆசை, இலக்கினை அடைந்து சாதிக்க அவா என்பவைகளாக இருப்பதைக் காண முடியும்.

பேரவாவின் உந்துதலில், கடும் போட்டியும், இரக்கமற்ற கொடூரத்தனமும் நம் சமுதாயத்தில் நிலவுகிறது. நம் சமுதாயம், போட்டி, பொறாமை, இரக்கமின்மை ஆகிய வற்றை அடித்தளமாகக் கொண்டுள்ளது. இலக்கினை அடைவதில் பேரவா கொண்டவர், உருப்படியானவர் என்றும் சமூகத்தின் நண்பன் என்றும், அவர் தனது தீவிர ஆர்வத்தால் தகுந்த சூழ்நிலையை உருவாக்கக் கூடியவர் என்றும், மற்றும் பலவாறாகவும் சமூகத்தால் மதிக்கப் படுகிறார். உலக வாழ்வுக்குரிய பொருட்களின் மீது பேரவா இருந்தால், அதை நாம் கண்டனம் செய்கிறோம்; ஆனால், ஆன்மீக வாழ்விற்காகக் கொள்ளும் பேரவாவை, நாம் கண்டனம் செய்வதில்லை. உலக வாழ்வைத் துறந்து, ஆன்மீகத் தேடுதலில் ஈடுபட்டிருப்பவரைக் கண்டனம் செய்வ தில்லை. குறிப்பிட்ட ஒன்றாக, அதாவது, முனிவராக ஆகிவிட வேண்டும் என்ற பேரவா, அவருக்கும் தானே இருக்கிறது?

நமது விருப்பங்களைப் பூர்த்தி செய்து கொள்வதில் நாம் முனைப்பாகவே இருக்கிறோம். கொள்கைகள், திறமை, ஓவியம் தீட்டுதல், கவிதை எழுதுதல், அன்பு செலுத்துதல், வள்ளல் தன்மையுடனிருத்தல், மேன்மை யானவர் என்று பிறரால் மதிக்கப்பட வேண்டும் என்ற குறிக்கோளுடன் செயல்படுதல், இன்ன பிறவற்றின் மூலம், நிறைவேற்றிக் கொள்ள முற்படுகிறோம். நமது செயல்கள் அனைத்துமே, விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும் என்ற உந்துதலின் வெளிப்பாடாகவே இருக்கிறதல்லவா? அந்த உந்துதலின் தூண்டும் சக்தியாக, பேரவா இருக்கிறது. இதை நான் புரிந்து கொள்ளும் போது, விருப்பங்களைப் பூர்த்தி செய்யும் செயல்பாட்டு வழிமுறையில், துக்கம் இருக்கும் என்பதையறிகிறேன். இப்போது நான் என்ன செய்ய வேண்டும்? நான் சொல்வதின் உட்பொருள், உங்களுக்குப் புரிகிறதா?

பேரவாவை அடித்தளமாகக் கொண்டு என் வாழ்க்கை அமைந்திருப்பதை நான் உணருகிறேன். நான் அதை மூடி மறைக்கப் பார்த்தாலும், ஒரு கொள்கைக்காக என்னையே தியாகம் செய்து கொண்டாலும், என் நடவடிக்கைகள் அனைத்துமே என் விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்ள நினைக்கும் என் பேரவாவின் வெளிப்பாடேயாகும். நான் வாழ்வில் கருகிப்போயிருப்பதைப் பார்க்கிறீர்கள். உபயோகமாக எதையாவது செய்து, எனக்கு உதவ முற்படுகிறீர்கள். அந்தச் செயலும், நிறைவேற்றிக் கொள்ளும் உங்கள் நினைப்பில் பிறந்ததே. இடையறாத உந்துதலும் உழைப்பும்தான் நம் வாழ்க்கை. உணர்வு நிலையிலும் உள்ளாழ் மனநிலையிலும் இடையறாமல் இது நடந்து கொண்டிருக்கிறது. இந்தப் போராட்டத்தையும் அதன் உட்பொருளையும் அறிந்து கொண்ட நான், செய்ய வேண்டியது என்ன?

விருப்பத்தைப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டி எழும் தூண்டுதல் என்பது நமது முக்கியமான பிரச்சனைகளில் ஒன்றாக இருக்கிறது, அல்லவா? விஷயம் சிறியதோ பெரியதோ, பூர்த்தி செய்து கொள்ள வேண்டும் என்ற உந்துதல் இருக்கிறது. என் மனைவி, குழந்தைகளை அடக்கியாளும் தலைவனாக வீட்டிலும், எதிர்காலத்தில் பெரிய பதவியில் அமர வேண்டுமென்பதற்காக, இன்று மேலதிகாரிக்குக் கீழ்படிந்து நடந்து கொள்பவனாகவும் இருக்கிறேன். இதுதான் நம் வாழ்க்கையின் வழிமுறை. நிலைமை இப்படியிருக்க, நிறைவேற்றிக் கொள்ள இருக்கும் உந்துதலை எப்படி ஒதுக்கி வைப்பது? பேரவாவிலிருந்து என்னை எப்படி விடுவித்துக் கொள்வது?

பேரவா, பூர்த்தி செய்தலின் வகையைச் சேர்ந்தது என்பதையும், விருப்பம் நிறைவேறுதல் என்பதின் வழித்தடத்தில் ஏமாற்றங்களும், வேதனைகளும்,

மனச்சிதைவும் இருப்பதைக் காண்கிறேன். அங்குப் பயம், தன்னந்தனிமையிலிருக்கும் உணர்வு, பீதி மற்றும் முடிவிலா எதிர்பார்ப்பு இருப்பதையும் காண்கிறேன். இதுதான் நம் அன்றாட வாழ்க்கை இல்லையா? எல்லா வற்றின் பின்னணியிலும், நிறைவேற்றிக் கொள்ளும் ஆசை, பதவி, அதிகாரம், பெருமதிப்பு, நல்ல பெயர் ஆகியவற்றைப் பெற பேரவா, பேரவாவினைத் தூண்டும் சக்தி ஆகியவை ஒளிந்து கொண்டிருக்கின்றன. ஆக, இவையனைத்தையும் அறிந்து கொண்டபின், மனம் என்ன செய்ய வேண்டும்?

மேற்கூறிய பேரவா, தூண்டும் சக்தி என்பவைகளின் அடிப்படையில் அமையாத செயலோ அல்லது மனதின் இயக்கமோ உள்ளதா? புரிகிறதா, ஐயா? நான் பேரவாவை அடக்கி, வழிக்குக் கொண்டு வந்தாலும், அதன் இயல்பு மாறுவதில்லை. ''இதைச் செய்வதால், ஒரு லாபமும் இல்லை. ஆனால் அதைச் செய்தால் லாபமடைவேன்'' என்று நீங்கள் சொல்லும்போது, இரண்டு நிலைப்பாட்டிலும் நிலைத்திருப்பது, பேரவா மட்டுமே. நிறைவேற்ற மாட்டேன் என்று சொன்னீர்களேயானால், அங்கும் நிறைவேற்றாததால் உண்டாகும் குழப்பம் ஏற்படுகிறது. பூர்த்தி செய்ய நினைப்பதற்கு எதிராகத் தோன்றும் விருப்பமே, மற்றொரு வகையான நிறைவேற்றுதலாகிறது, உந்துதலாகிறது.

விருப்பங்களைப் பூர்த்தி செய்து கொள்ளவேண்டும் என்று மனம் ஏன் பாடுபடுகிறது? 'நான், எனது' என்ற உணர்வுகளாகவும் எண்ணங்களாகவும் இருக்கும் மனம் ஏன் கர்வம் மிக்கதாகவும் பேரவா கொண்டதாகவும் இருக்கிறது? நல்ல பெயர் எடுக்க வேண்டும் என்று ஏன் அது ஆசைப்படுகிறது? இதைப் புரிந்துகொள்ள என்னால் முடியுமா? வெளி நடவடிக்கைகளுக்கே ஓயாமல் எது மனதைத் தள்ளுகிறது என்று மனதிற்குப் புரியுமா?

வெளிப்புற இயக்கங்கள் துண்டிக்கப்படும்போது, மனம், உள்முகமாகத் திரும்பிப் பார்க்கிறது. அங்கும் தடை ஏற்படுகிறது.

ஆக, உயர் பதவியிலிருப்பதும், சில நேரங்களில் நிலைகுலைவதும், பெற்றுக் கொள்வதும் சில நேரங்களில் மறுத்து ஒதுக்குவதும் என்று ஓயாத இயக்கமாக, நம் மனதின் செறிவு (consciousness) அமைந்திருக்கிறது. இந்த மனச்செறிவின் அடிப்படையில்தான், நம் அன்றாட வாழ்க்கை நடக்கிறது. இதிலிருந்து வெளிவர, மனம் வழியைத் தேடியலைகிறது. இதையெல்லாம் என்னால் புரிந்து கொள்ள முடிந்தால், மனம் இவ்விஷயங்களை ஆழ்ந்து கவனித்தால், இவ்விஷயங்களின் முழுமையான முக்கியத்துவத்தைப் புரிந்து கொண்டால், பேரவா, கர்வம், பூர்த்தி செய்யும் எண்ணம், மனம், ஆகியவைகளின் பாற்படாத செயல் ஒன்றைக் காண்பது சாத்தியமாகலாம்.

கடவுளைக் காண எடுத்துக் கொள்ளும் முயற்சியும், ஒரு வகை கர்வமே ஆகும். உள்ளும் வெளியுமாக, நாம் ஏன் அலைந்து கொண்டிருக்கிறோம் என்பதை நம்மால் கண்டுபிடிக்க முடியுமா? வெற்றுத்தனமான நிலை நம்முள் இருப்பதை நாம் அறிந்திருக்கிறோம், அல்லவா? கலக்கம், தனிமை, எதையும் நம்பி வாழ முடியாத நிலை, உற்ற துணை எதுவும் இல்லாத நிலை ஆகிய உணர்வுகளோடு நாம் இருப்பதை உணருகிறோம், அல்லவா? வெற்றியின் சிகரத்திலிருக்கும்போது, காரணமேயில்லாமல் தோன்றும் நம்பிக்கையின்மையை, நாம் உணர்ந்த தில்லையா? எந்தவித முகாந்திரமும் இன்றி, திடீரென தோன்றும் அசாதாரணமான தனிமையுணர்வு, மிகுந்த துக்கம் ஆகிய உணர்வுகளை நாம் அனுபவித்த தில்லையா? சிந்தனையின் சிகரத்திலிருக்கும்போது கூட, அன்பின் உச்சியிலிருக்கும் போது கூட, வெறுமையை

தனிமையை, நாம் உணர்ந்ததில்லையா? இந்தத் தனிமையுணர்வு அல்லவா, நம்மை, சதா மற்றவர்களை நாடிச் செல்ல வைக்கிறது, நல்ல பெயர் வாங்க வேண்டும் என்று தூண்டுகிறது?

தனிமையுணர்விலிருந்து தப்பித்து ஓட நினைக்கா மல், நிறைவு பெற செயல்களில் ஈடுபடாமல், தனிமை யுணர்வோடு, என்னால் வாழ முடியுமா? தனிமை யுணர்வை, மாறுதல் செய்யவோ, கட்டுப்படுத்தவோ, வழிக்குக் கொண்டு வரவோ, முயற்சி செய்யாமல் அதனுடன் என்னால் வாழ இயலுமா? அப்படி முடிந்தால், தனிமையுணர்வைத் தாண்டி அப்பால் சென்றடைய முடியும், நம்பிக்கையின்மையைக் கடந்து அப்பால் சென்றடைய முடியும். அடையக்கூடிய நிலை, நம்பிக்கை என்றோ பக்தி என்றோ பொருள்படாது; அதற்கு மாறாக பொருள்படும். உற்சாகமிழந்த நிலை யிலும், பயப்படும்போதும், சந்தேகிக்கும்போதும் தோன்றும், காரணமேயில்லாமலோ அல்லது ஒன்றின் காரணமாகவோ தோன்றும், விசித்திரமான தனிமை யுணர்வை நான் புரிந்து கொள்ளும்போது, அந்த உணர்வைப் பிடித்து தள்ளிவிடாமல், அதனோடு வாழ் வதற்கு என் மனதால் இயலுமா?

இதை வெறும் வார்த்தைகளாக மட்டும் கேட்காமல், உட்பொருளையும் அறியும் வண்ணம், தயவுசெய்து கேளுங்கள். நான் பேசிக் கொண்டிருக்கும்போதே உங்கள் மனதை நீங்கள் ஊன்றிக் கவனித்திருந்தால், விவரிக்கப் பட்டுக் கொண்டிருக்கும் அந்தத் தனிமையுணர்வு நிலையில் நீங்கள் இருந்திருப்பீர்கள். தனிமையுணர்வு நிலை இப்போது உங்களுடன் இருக்கிறது. நான் அதைச் சொல்வதால், மனோவசியத்தால் அந்த நிலை வர வில்லை. உண்மையில் உங்கள் மனதின் எண்ண இயக்கங்களை நீங்கள் கவனித்தீர்களானால், தனிமை

யுணர்வு நிலைக்கு நீங்கள் வந்தடைவீர்கள். பாசாங்குகள் அனைத்தும் உருவி எறியப்பட்டு, அனைத்து நற்பண்பு கள் மற்றும் அனைத்துச் செயல்களும் களைந்தெறியப் பட்டு, தனிமையுணர்வு நிலைக்கு நீங்கள் வந்தடை வீர்கள். மனம், அந்த நிலையுடன் சேர்ந்திருக்க முடியுமா? கண்டனம் எதுவும் செய்யாமல், மனதால், தனிமை யுணர்வுடன் இருக்க முடியுமா? காண்பவர், காட்சியைப் பார்ப்பதுபோல் இல்லாமல், மனதால் தனிமை யுணர்வைக் குறுக்கீடுகள் செய்யாமல், பார்க்க முடியுமா? அப்படிப் பார்க்க முடிந்தால், மனமே தனிமையுணர்வு நிலை என்றாகிறது, புரிகிறதா?

நான் தனிமையுணர்வைப் பார்க்கும்போது, என் மனம் அவ்வுணர்வின் மீது செயல்பட துவங்குகிறது. அவ்வுணர்வை, தன் விருப்பத்திற்கேற்ப வடிவமைக்க முயற்சிக்கிறது; அதைக் கட்டுப்படுத்தப் பார்க்கிறது; அல்லது, அதிலிருந்து தப்பித்துச் செல்லப் பார்க்கிறது. தனிமையுணர்வைப் பார்க்கும் காண்பவராக, மனம், இல்லை; இயல்பாகவே மனம், தனிமையிலும் துணை யில்லாமலும் வெறுமையுடனும் இருக்கிறது. முற்றிலும் வெறுமையாயிருக்கும் நிலையையும், ஒன்றுமறிந்திராத நிலையையும், விஷய ஞானம் சேகரிப்பதற்கான நடவடிக்கைகள் எதுவும் இல்லாத நிலையையும், மனதால் ஒரு நிமிட நேரத்திற்குக் கூட ஏற்றுக் கொள்ள முடியாது; அவ்வகை நிலைகளை அதனால் சகித்துக் கொள்ள முடியாது. அவ்வகை நிலைகளைப் பற்றிய பயம் அதிகம் இருப்பதால்தான், அந்நிலைப்பாடு களிலிருந்து தப்பித்து ஓடும் வகையில் விருப்பங்களைப் பூர்த்தி செய்து கொள்ளும் செயல்பாடுகளில் இறங்கி விடுகிறது.

கருத்துகள், ஆதரவாளர்கள், சார்புகள் முதலிய எல்லாவற்றிலிருந்தும் துண்டிக்கப்பட்டுவிட்ட அசா

தாரணமான தனிமையுணர்வோடு இருக்கும் மனதால், அதன் வெளியைத் தாண்டி அப்பால் செல்ல இயலுமா? தர்க்க ரீதியாக இல்லாமல், உண்மையிலேயே அதன் எல்லையைத் தாண்டி, மனதால் செல்ல இயலுமா? தனிமை, வெறுமை மற்றும் சார்ந்திராமையைப் பற்றி நன்குணர்ந்த மனதால் மட்டுமே, பேரவா அற்ற செயலைக் கொண்டுவர முடியும். அப்படிப்பட்ட செயல்களால்தான், போட்டியும் தன்னல வெறியுடன் செய்யப்படும் காரியங்கள் இல்லாத உலகைச் சமைப்பது, சாத்தியமாகலாம். 'நான், எனது' என்ற குறுகிய புனல் வழியாக வெளிவரும் செயலாக, பேரவா அற்ற அந்தச் செயல், இருக்காது. உள்நோக்கம் மற்றும் பேரவா இல்லா திருப்பதால், அச்செயல், படைப்பாற்றல் கொண்டதாய் இருக்கிறது; அது பலனை எதிர்பார்ப்பதில்லை. தனிமை யுணர்வோடும் எதையும் சார்ந்திராமலும் இருக்க, மனம், படிப்படியாக அறிந்து கொண்டுதான் ஏறி வர முடியுமா? அதனால், திடீரென தாவி குதித்து, உடனே அறிந்து கொள்ள முடியாதா?

சரியான முறையில் கேட்கத் தெரிந்திருந்தால், மனம் தாவி குதித்து, உடனே அறிந்து கொள்ள முடியும். தடுப்பு எதுவும் போடாமல், விளக்கங்கள் அளிக்காமல், நான் இப்போது சரியான முறையில் கேட்டால், இங்குச் சுதந்திரம் மலர்கிறது. கண்டுபிடிப்பதற்காக, மனக் கதவுகளைத் திறந்து வைத்துக் கேட்கும்போது, சுதந்திரம் இருக்கிறது. சுதந்திரத்தின் வழியாக மட்டுமே, என்னால் கண்டுபிடிக்க முடியும்.

மேற்கூறப்பட்ட சுதந்திரம் என்பது அச்சத்திலிருந்து சுதந்திரம், பிறரால் மதிக்கப்பட வேண்டும் என்ற என் விருப்பத்திலிருந்து சுதந்திரம், அகந்தையிலிருந்து சுதந்திரம், விருப்பங்களைப் பூர்த்தி செய்துகொள்ள

வேண்டும் என்ற அவாவிலிருந்து சுதந்திரம் என்றாகிறது. எண்ணங்கள் முற்றுப் பெற்ற நிலையில், முழுவதுமாக மனம், தனிமையிலும் வெறுமையிலும் இருக்கும் போது, நம்பிக்கையின்மை மற்றும் நிறைவேற்ற வேண்டும் என்ற பேரவா இல்லாத மனநிலையில் மட்டுமே சுதந்திரம் மலரக் கூடும். சுதந்திரம் பெற்ற நிலையில் மட்டும்தான் இரக்கமின்மை, கொடூரம், மிருக வெறி மற்றும் போட்டி பொறாமைகளை முடிவிற்குக் கொண்டு வந்த புதியதோர் உலகம் தோன்ற வாய்ப்பு உள்ளது.

**கேள்வி :** சுதந்திரம் பற்றிப் பேசுகிறீர்கள். சுதந்திரம், கடமைகளாற்ற வலியுறுத்தவில்லையா? சமுதாயத் திற்கும், எனக்கும், நான் ஆற்ற வேண்டிய கடமை என்ன?

**கிருஷ்ணமூர்த்தி :** சுதந்திரமும் கடமையும் ஒப்பிட்டுப் பார்க்க கூடியவைகளா? கடமையுணர்வுள்ள மகன், சுதந்திரமானவனாக இருக்கிறானா? நான் சமுதாயத்திற்கு ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய்து கொண்டிருக்கும் அதே சமயம், சுதந்திரமானவனாகவும் இருக்க முடியுமா? கடமைகளைச் செய்து கொண்டே, புரட்சிக்காரனாகவும் இருக்க முடியுமா? புரட்சி என்ற சொல்லை, பொருளாதாரப் புரட்சி என்ற பொருளில் சொல்லவில்லை. அரசியலோ ஆன்மீகமோ எதுவாயிருந் தாலும், குறிப்பிட்ட ஒரு வழியை நான் பின்பற்றும் போது, சுதந்திரத்துடன் நானிருப்பது முடிகிற காரியமா? வழிமுறையைப் பின்பற்றும்போது, நான் காப்பி அடிக்கிறேன், நடிக்கிறேன், சரிதானே? வழிமுறைகள் அனைத்துமே போலியானவைதான், அல்லவா? கடமை யுணர்வுள்ள மகனாக இருப்பதால், என் தந்தை, நான் என்ன செய்ய வேண்டுமென்று விரும்புகிறாரோ, அதையே நான் செய்கிறேன்; சமுதாய கோட்பாடுகளின்

படி, எது சரியோ, அதைச் செய்கிறேன் - இவ்வகையான என் செயல்பாடு, போலித்தன்மையைக் குறிப்பிடுவதாக இல்லையா? என் தந்தை, நான் வழக்கறிஞராக வேண்டும் என்று விரும்புகிறார் - வழக்கறிஞராக வேண்டியது என் கடமையா? என் தந்தை, நான் ஒரு மத அமைப்பில் சேரவேண்டுமென்று விரும்புகிறார் - சேர வேண்டியது என் கடமையா?

கடமை என்பது அன்புடன் இணைந்து செல்வதா? எப்பொழுது அன்பு இல்லையோ, எப்பொழுது சுதந்திரம் இல்லையோ, அப்பொழுது தான் 'கடமை' என்ற சொல்லிற்கு, அதீத முக்கியத்துவம் கிடைத்து விடுகிறது. முக்கியத்துவம் பெற்ற கடமையானது, மரபு மற்றும் பாரம்பரியம் என்ற இடத்தை எடுத்துக் கொள்கிறது. நாம் இவ்வாறான நிலையில் தான் வாழ்கிறோம், அல்லவா? - நான் கடமையுணர்வுடையவனாக இருக்க வேண்டும் என்பது மரபு.

சமூகத்திற்காக நான் செய்ய வேண்டிய கடமை என்ன? எனக்காக நான் செய்து கொள்ள வேண்டிய கடமை என்ன? ஐயா, பல பெரிய விஷயங்களை உங்களிடமிருந்து சமூகம் கோருகிறது. நீங்கள் கீழ்படிந்து நடந்து கொள்ள வேண்டும், நீங்கள் சட்டத்தைப் பின்பற்ற வேண்டும், நீங்கள் குறிப்பிட்ட சடங்குகளைச் செய்ய வேண்டும், குறிப்பிட்ட நம்பிக்கை கொண்டிருக்க வேண்டும் என்றெல்லாம் சமூகம் கோருகிறது. குறிப்பிட்ட சிந்தனைகளுக்கும் நம்பிக்கைகளுக்கும் உங்களைக் கட்டுப்படுத்துகிறது. சமூகத்திற்காக நீங்கள் செய்ய வேண்டியவை பற்றியோ குறிப்பிட்ட ஒரு வழிமுறையை ஏற்றுக்கொள்வது பற்றியோ ஆய்வு செய்து, விடை கண்டுபிடிப்பதாக இல்லாமல், சத்தியம் என்றால் என்ன என்பதை கண்டுபிடிப்பதாக இருந்தால், நீங்கள் சுதந்திரமாக இருக்க வேண்டாமா?

சுதந்திரமாக இருப்பது என்றால், நீங்கள் சில வற்றைத் தூக்கியெறிய வேண்டுமென்றோ, எல்லாவற்றிற் கும் எதிர்ப்பு தெரிவிக்க வேண்டும் என்றோ, பொருளல்ல; சுதந்திரம் அது அல்ல. சுதந்திரம் குறிப்பாக உணர்த்துவது என்னவென்றால், எண்ணங்களைப் பற்றிய இடைவிடாத விழிப்புணர்வையே. விழிப்புணர்வு வெளிக்கொணரும் கடமை பற்றிய விளக்கங்களால், கடமையின் அர்த்தம் புரிகிறது; புரிந்துகொண்டதால், சுதந்திரம் மலர்கிறது. குறிப்பிட்ட ஒரு சுதந்திரத்தைத் தள்ளி வைப்பதால் கிடைப்பதாக, அந்தச் சுதந்திரம் இருப்பதில்லை. உங்களைக் குறிப்பிட்ட ஒரு மரபுடன் இணைத்துக் கொண்ட பிறகு, அனைத்து பாரம்பரிய மரபுகளையும் புரிந்துகொள்வது என்பது இயலாத காரியம். குறிப்பிட்ட ஒரு எண்ணத்துடனோ அல்லது கருத்துடனோ இணைத்துக் கொண்டு, உங்களை நீங்கள் அடையாளப்படுத்திக் கொண்டாலோ அல்லது மரபுகளை நியாயப்படுத்தினாலோ அல்லது கண்டனம் செய்தாலோ, உங்களால் மரபுகளின் முக்கியத் துவத்தை முழுமையாகப் புரிந்துகொள்ள முடியாது.

என் சொந்த கடமை பற்றியும், சமுதாயத்திற்கு நான் செய்ய வேண்டிய கடமை பற்றியும், ஆய்வு செய்ய முற்பட்டால், விடையை எப்படிக் கண்டுபிடிப்பது? எதை அளவுகோலாக, ஆதாரமாக எடுத்துக் கொள்வது? எதைத் திட்ட அளவாகக் கொள்வது? அல்லது, நாம் ஏன் இந்த வார்த்தைகளின் மேல் இந்த அளவிற்குச் சார்ந்திருக் கிறோம் என்று கண்டுபிடிக்கலாமா? புரிந்துகொள்வதற் காகத் தேடியலைந்து ஆய்வு செய்யும் மனம், எவ்வளவு சீக்கிரத்தில் 'கடமை' என்ற வார்த்தையின் பிடிப்பில் மாட்டிக்கொள்கிறது! வயோதிக தந்தை, மகனிடம், 'என்னை ஆதரிப்பது உன் கடமை' என்று சொல்கிறார். மகன், தந்தையைப் பேணிக் காப்பது, தன் கடமையாக

உணருகிறான். தான் விரும்பும் ஓவியக் கலைப் பணி, தன்னையும் தன் தந்தையையும் காப்பாற்ற போதுமான பணத்தை அளிக்காது என்ற காரணத்தால், அதை ஒதுக்கித் தள்ளி விட்டு, போதுமான பணம் சம்பாதிப்பது தனது கடமை என்று சொல்லிக் கொண்டு தனக்குப் பிடித்ததைச் செய்யாமல், பிடிக்காததைப் பணத்திற்காக வாழ்நாள் முழுவதும் செய்கிறான். அவனுக்கு வாழ்க்கை கசக்கிறது; கசந்த மனதுடன், வாழ்நாட்களைக் கடத்துகிறான். அவன், தன் பெற்றோர்களுக்குப் பணம் தருகிறான். இதுவாகத் தான், நம் வாழ்க்கை இருக்கிறது; நாம் கசப்பில் வாழ்கிறோம், கசப்பில் சாகிறோம்.

உண்மையில், அன்பும் சுதந்திரமும் நம்மிடம் இல்லாததால் நாம் வார்த்தைகளை உபயோகித்து, நம் எண்ணங்களைக் கட்டுப்படுத்துகிறோம், நமது உணர்வு களை வடிவமைக்கிறோம். இத்தகைய நம் செயல்பாடு, நமக்குத் திருப்தியை அளிக்கிறது. அன்பு ஒன்று மட்டுமே, புரட்சிக்கு வழிவகுக்கும். நம்மில் பலர், மாறுதல் எதுவாயிருப்பினும், அதற்கு மறுப்பு தெரிவிப் பார்கள். பொருளாதாரப் புரட்சியைப் போன்ற மேலோட்டமான மாறுதலாய் இருந்தாலும் சரி, அல்லது, மிகவும் முக்கியமான, ஆழமான முக்கியத்துவம் வாய்ந்த சிந்தனைப் புரட்சியோ, செயலாக்கப் புரட்சியோ எதுவாயிருப்பினும், நம்மில் பலர், புரட்சிகளை எதிர்ப்பார்கள். ஆழமான அடிப்படைப் புரட்சிக்கு எதிர்ப்பு தெரிவிப்பதால், இங்கொன்றும் அங்கொன்று மான வார்த்தைகள், மிரட்டல்கள், பேரவா என்று மேற்பரப்பில் மேலோட்டமாகச் சில சீர்திருத்தங்களைச் செய்கிறோம்.

கேள்வி கேட்டவர், 'என் கேள்விகளுக்கு நீங்கள் இன்னும் பதிலளிக்கவில்லை' என்று என்னை வினவ

லாம். நீங்கள் கேட்ட கடமை பற்றிய கேள்வி, தவறானது என்று நான் சொல்கிறேன். சுதந்திரமில்லாத, எழுச்சி யற்ற, அடிபணிந்த, அப்பிராணியான, அன்பு இல்லாத மனம் தொடுக்கும் கேள்வி இது. அடிபணிந்து எதையும் எளிதில் ஏற்றுக்கொள்ளும், அன்பு இல்லாமல், கசந்த வாழ்க்கை நடத்தும் மனதால், சமூகத்திற்கோ, இல்லை, தனக்கோ கடமையுணர்வுடன் எந்நாளிலாவது இருப்பது இயலுமா? புதிய உலகை, புதிய அமைப்பை, உருவாக்க அத்தகைய மனதால் முடியுமா?

முடியாது என்று நீங்கள் தலையை ஆட்டினால் மட்டும் போதாது. உங்கள் தேவை என்ன என்பது உங்களுக்குத் தெரியுமா? உங்களுக்குப் புரட்சி வேண்டாம்; மனப்புரட்சியும் தேவை இல்லை. நீங்கள் எப்படி வளர்க்கப்பட்டீர்களோ, அதே முறையில் உங்கள் பிள்ளை களையும் வளர்க்க விரும்புகிறீர்கள். மரபு முதலியவற்றால், உங்களைப் போன்றே அவர்களையும் தளைபடுத்த விரும்புகிறீர்கள். உங்கள் வழியிலேயே அவர்களும் சிந்திக்க வேண்டும் என்று எண்ணுகிறீர்கள். நீங்கள் நம்புவதையே அவர்களும் நம்பி, பூஜைகள் செய்து கொண்டு இருக்க வேண்டும் என்று ஆசைப்படு கிறீர்கள். ஆக, அவர்களாகவே எதையாவது கண்டு பிடிக்க, அவர்களுக்கு நீங்கள் ஊக்கம் அளிப்பதில்லை. நீங்கள் தளைபட்டு அழிவதைப் போலவே, மற்றவர் களும் அழிய வேண்டுமென்று விரும்புகிறீர்கள். ஆகவே, நமக்கிருக்கும் பிரச்சனை, கடமைகள் என்னென்ன என்று கண்டுபிடிப்பது அல்ல. அன்பையும் சுதந்திரத்தையும் எப்படிக் காண்பது, எப்படி விழித்தெழச் செய்வது என்பதுதான் பிரச்சனை. அன்பு இருக்கும் பட்சத்தில், நீங்கள் கடமையுணர்வு இல்லாமல் இருக்கக்கூடும்.

மிகவும் புரட்சிகரமானது அன்பு. மனதினால் அதைத் திட்டமிட முடியாது; அன்பை வளர்த்துக் கொள்ள

முடியாது. அது, அங்கு இருக்க வேண்டும்; உங்கள் வீட்டுக் கொல்லையில் வளர்க்கக்கூடிய ஒன்றல்ல அன்பு; உண்மையான விசாரணை, உண்மையான திருப்தியின்மை, கிளர்ச்சி, அதிகாரத்திற்கு அடிபணியாமை, அச்சமற்ற தன்மை ஆகியவைகளைக் கொண்டிருந்தால், அங்கு அன்பு தோன்றும். தவறுகள் செய்து, அதிலிருந்து விடையைக் கண்டுபிடிக்கும் ஆற்றலுடைய மனம், அச்சப்படுவதில்லை. அச்சமற்ற மனம், அற்பமாக இருப்பதில்லை; அது ஆழமாக எண்ணிப் பார்க்கும் ஆற்றலுடையது; அத்தகைய மனம், அன்பு என்றால் என்ன, சுதந்திரம் என்றால் என்ன என்பதையறியக் கூடும்.

**கேள்வி :** காலம், காலமற்றது என்று நீங்கள் குறிப்பிடுவதின் பொருளை, தயவுசெய்து, எங்களுக்கு விளக்கி கூறுங்கள். காலத்திலிருந்து எப்பொழுதாவது விடுதலை கிடைக்குமா?

**கிருஷ்ணமூர்த்தி :** விளக்கம் கூறுவது கொஞ்சம் எளிதான வேலை தான். வார்த்தைகளின் கூட்டமைப்பு, விளக்கமாகி விடுகிறது. விளக்கங்களும் தீர்மானங்களும் கிடைத்தாலே போதும், நாம் திருப்தியடைந்து விடுகிறோம். ஆனால், நிஜமாகவே அனுபவித்துணர்வதற்கு, எளிதில் ஒத்துக் கொள்ளாத, அசாதாரணமான மனம் தேவை. எனக்கு வார்த்தைகள் மட்டும் போதும் என்று நினைக்கும் மனதினால், அனுபவித்துணர முடியாது.

உண்மையில், மனம், காலத்தின்பாற்பட்டது; தாக்கத்தின் வாய்மொழியாக இருக்கும் எண்ணமும் காலத்தின்பாற்பட்டதே; வார்த்தைகளும் விளக்கங்களும் காலத்தின்பாற்பட்டதே. காலம், விளக்கங்கள் மற்றும் வார்த்தைகளால் திருப்தியடையும் மனம், காலத்திற்கு அப்பால் சென்று பார்க்க முயற்சிக்கிறது. விளக்கங்கள், வார்த்தைகள், அடையாளச் சின்னங்கள் மற்றும்

அமரத்துவ முத்திரை ஆகியவைகளின் மூலமாக, காலத்தைத் தாண்டிச் செல்ல முயற்சிக்கிறது. அடையாளச் சின்னங்களை உபயோகித்து அப்பால் செல்ல முயன்றாலும், அதுவும் காலவரம்பிற்குட்பட்டிருப்பது வெளிப்படை. காலம், ஞாபகங்களாக இருப்பதால், அது நேற்றைய நினைவுகளாகவும், அதே நினைவுகள் இன்றும் நாளையும் முன்நிறுத்தப்படும் கருத்துக்களாகவும், இருக்கிறது. நேற்று, இன்று, நாளை என்பது காலத்தின் செய்முறையாகவும், எண்ணங்களின் செய்முறையாகவும் இருக்கிறது.

காலம் என்பது வளர்ச்சியாக, குழந்தைப் பருவத்திலிருந்து வாலிப வயதிற்கும், வாலிபத்திலிருந்து வயோதிகம், மரணம் என்பதாக, வளர்ச்சியைக் குறிப்பதாகவும் உள்ளது. ''நான் எதிர்காலத்தில் அப்படி இருப்பேன் அல்லது அடுத்த ஜென்மத்தில் அப்படி இருப்பேன்; இப்பொழுது தான் குமாஸ்தாவாக இருக்கிறேன்; இன்னும் மூன்று வருடத்தில் நான் தலைமை அதிகாரி ஆகிவிடுவேன்'' என்று சொல்வதில், காலம், வளர்ச்சியைக் குறிப்பதாகவுள்ளது. நற்பண்புகளை வளர்த்துக் கொள்வதைக் குறிப்பதாகக் காலம் இருக்கிறது. ''நான் பயப்படுகிறேன், நான் வன்முறையாளனாக இருக்கிறேன்; நான் அஹிம்சாவாதியாக மாற, பண்புகளை வளர்த்துக் கொள்வேன்'' என்பதில் நற்பண்புகளை வளர்த்துக் கொள்ளும் விதத்தைக் குறிப்பதாக காலம் இருக்கிறது. நான் அஹிம்சை முறையை வளர்த்துக் கொள்வேன் என்பதெல்லாம் வெறும் தித்திக்கும் ஏமாற்று வேலை. எவ்வளவு தான் தீவிரமாகப் பயிற்சி மேற்கொண்டாலும், அஹிம்சை முறையை பயிற்சி செய்தாலும், வன்முறை கொண்ட மனம், மாறாது; கருணைமிக்க மனமாக ஆகாது. அஹிம்சா வழியைப் பின்பற்றுவதே, வன்முறையாகவுள்ளது. கவனமாகக் கேளுங்கள், ஐயா! புன்னகை செய்யாதீர்கள்!

'நான், எனது' என்றிருக்கும் அகந்தையைப் பலப் படுத்துவதாக, நற்பண்புகளைப் பயிற்சி செய்வது இருக்கிறது. பயிற்சி, காலத்தின்பாற்பட்டதாகவுள்ளது. காலத்தால் கட்டுண்ட மனம், ''காலத்திற்கு அப்பாற் பட்டது என்ன என்பதைத் தயவுசெய்து எடுத்துரையுங்கள்; 'நான், எனது' என்பதை தாண்டி, அப்பாலிருக்கும் ஒன்றை அனுபவித்துணர எனக்கு உதவுங்கள்'' என்று கேட்கிறது. மனதின் அடிப்படை சாராம்சம், கடந்த காலமாக இருக்கிறது; கடந்த காலம், எதிர்காலமாக இருக்கிறது, நிகழ்காலமாகவும் இருக்கிறது. காலத்திற்கு அப்பாற்பட்டதைக் கண்டுபிடிக்க, அடிப்படையில் காலமாக இருக்கும் மனம் முயற்சிக்கிறது. அப்படிப் பட்ட மனம், எதை முன்நிறுத்துகிறதோ, அதுவே அதன் கண்டுபிடிப்பாக இருக்கும்; காலத்திற்கு அப்பாற் பட்டதை, அதனால் கண்டுபிடிக்க முடியாது. ஏனெனில், கண்டுபிடிக்க உபயோகிக்கும் கருவியாக, காலமாகிய மனம் இருப்பதால், காலத்திற்கு அப்பாற்பட்டதைக் (Timeless) கண்டுபிடிக்க இயலாது.

காலத்திற்கு அப்பாற்பட்டதைப் பற்றி, மனம் உத்தேசமாக இப்படி இருக்கலாம் என்று ஊகிக்க முடியும், இப்படித்தான் இருக்கும் என்று வாதாடலாம், இப்படித்தான் இருக்க வேண்டும் என்று தன் கருத்தை முன் நிறுத்தலாம். ஆனால், ஒருநாளும் மனதினால் காலத்திற்கு அப்பாற்பட்டதை, அனுபவித்துணர முடியாது. அப்படியே சில கணநேரங்களுக்கு, அனுபவம் பெற்றாலும், உடனே அதை ஒப்புமைப்படுத்திப் பார்த்து, மனப்பதிவுகளாக்கி விடுகிறது. உதாரணமாக, ''சூரியாஸ் தமனத்தின் அழகை நேற்று நான் அனுபவித்தேன். அந்த அனுபவத்தை இன்றும் பெற்று விட வேண்டும்'' என்கிறோம். ஆக, வாழ்வின் விசேஷமான நிகழ்வுகளைக் கைப்பிடியில் சிக்க வைத்து, அதை அனுபவமாக்கி,

கடந்த காலத்தில் வைப்பதே மனதின் செயலாக இருக்கிறது.

தயவு செய்து கவனியுங்கள், ஐயா! காலத்திற்கு அப்பாற்பட்டது எது என்பதோ, அதை நாம் எப்படிக் கண்டுகொள்வது என்பதோ, மனம் எப்படிக் காலத்திற்கு அப்பாற்பட்டதை அறிந்துகொள்வது என்பதோ, இப்போது நமக்கிருக்கும் பிரச்சனை அல்ல; காலத்திற்கு அப்பாற்பட்டதை உணரக்கூடிய நிலை எது என்பதைக் கண்டுபிடிப்பதே, முக்கியமான விஷயம். மனம், காலத்திற்கு அப்பாற்பட்டதை மெய்மறந்து அனு பவிக்கும் நிலை, அனுபவத்திலிருந்து வேறுபட்டது. எனக்கு அத்தகைய அனுபவம் ஏற்பட்டது என்று உணரும் அக்கணமே, அது கடந்த காலத்தியதாகி விடுகிறது; குறிப்பிட்ட அந்த அனுபவம், கடந்த காலத்துடையதாகிறது.

நான் என்ன சொல்கிறேன் என்பதைக் கவனத்துடன் கேட்டீர்களானால், உங்களுக்குப் புரியும்; நான் சொல் வதில் பூடகமான இரகசியம் எதுவுமில்லை. இதைப் புரிந்து கொள்ள, துறவு, பூஜை, கடும்பயிற்சி ஆகியவை களைச் செய்து, ஆழ்ந்த மயக்கத்தில் இருக்க வேண்டும் என்றில்லை; செய்ய வேண்டியதெல்லாம் மனம் மற்றும் எண்ணம் ஆகியவற்றின் இயல்பையும் இயக்கத்தையும் புரிந்து கொள்ள வேண்டும், அவ்வளவே. மனதையும் எண்ணத்தையும் புரிந்து கொள்வதால், காலத்தால் எப்படி அது சிறைபட்டிருக்கிறது என்பதை மனம் அறிகிறது. அறிந்த பிறகு, மனம், முழுவதுமாகக் குவிந்து நிலைக் கிறது. கவனம் என்று மனதிலிருந்து வேறுபட்டு நிற்காமல், மனமே கவனமாகிறது. உணர்வுகளின் நடமாட்டமும், அந்தக் கவனத்தில் இருக்கிறது; ரயிலின் ஓசைக்கு எதிர்விளைவாக, அங்கு உணர்ச்சிகள் தோன்று கின்றன. அந்த எதிர்விளைவுகள், மனப்பதிவுகளிலிருந்து

எழுந்தவை. மனம், ஒருமுகப்பட்டு, குறிப்பிட்ட ஒன்றின் மேல் கவனம் செலுத்துவதாக அங்கு இல்லை. ஒரு முகப்படுதலை, எந்தவொரு விருப்பத்தாலோ உறுதிப் பாட்டாலோ அடைந்ததாக இல்லாமல், மனம் முழுவது மாக ஒருமுகப்பட்டு குவிக்கப்பட்ட நிலையில், தன் இயக்கத்தைக் கண்காணிப்பதில், முழு கவனமும் செலுத்துவதாக இருக்கிறது; இத்தகைய உட்புற கண்காணித்தல், உள்வட்டத்தில் நடைபெற்றுக் கொண்டி ருக்கும்போதே, வெளிப்புறத்தில் வெளிவட்டத்தில், கடந்துச் செல்லும் சம்பவங்களைப் பற்றியும், மனிதர்கள் பற்றியும், அபிப்பிராயங்களும் எதிர்விளைவுகளும் தோன்றி தொடர்கின்றன.

எண்ணத்தின் வேலை என்ன என்பதையும், காலத்தின் ஒட்டுமொத்த வழிமுறையையும், மனம் புரிந்து கொள்கிறது. புரிந்து கொண்ட நிலையில், அது ஒருமுகப்பட்டு முழுகவனத்துடனிருக்கிறது. குறிப்பிட்ட ஒன்றைக் கவனிப்பதாக இல்லாமல், கவனமே அதுவாக ஒருமுகப்பட்டு குவிகிறது; மனம், முழுமையாகச் சலனமற்று, அசையாமலிருக்கும்போது, அங்குக் காலத்திற்கு அப்பாற்பட்டது இருக்கிறது. பயிற்சிகளால் மனதை அசைவற்று இருக்கச் செய்பவர், காலத்தின் வலையில் சிக்கிக் கொள்கிறார். அவரால் காலத்திற்கு அப்பாற்பட்டதை உணரமுடியாது. ஆகவே, சலனமற்று இருப்பதற்கு, மிகுந்த கவனம் தேவை. அந்த நிலைப் பாட்டில், அனுபவித்தல் இருக்கிறது. அனுபவிப்பவர், அனுபவிப்பதாக இல்லாமல், அனுபவித்தல் மட்டுமே உள்ளது. அனுபவிக்கும் அந்தக் கணத்தில், அனுபவிப் பவர், அனுபவித்தல் என்ற இருமையில்லாமல், அனு பவித்தல் (experiencing) மட்டுமே இருக்கிறது; அடுத்த கணம், அது அனுபவிப்பவராக மாறி, நாம் காலத்தின் பிடியில் சிக்கிக் கொள்கிறோம்.

கடந்த கால அனுபவங்களோடு ஒப்புமை செய்து அனுபவிப்பராக ஒன்றை அனுபவிப்பது, அனுபவித்ததை ஞாபகங்களாகச் சேகரித்தல் என்ற வழிமுறை, நாம் அறிந்த ஒன்று. அனுபவித்தல் என்ற நிலையில் மட்டுமே இருக்க, மனதால் இயலுமா? நீங்கள் இந்த வினாவை எழுப்பி, அதை உன்னிப்பாகக் கேளுங்கள்; அதற்கான விடையை நீங்களே கண்டுபிடிக்க முடியும். வார்த்தைகளால் நான் உங்களை வசியப்படுத்தவில்லை.

அனுபவித்தல் என்ற நிலையில் மட்டும் இருக்க மனதால் இயலுமா? காலத்திற்கு அப்பாற்பட்டதை உணரும் நிலை தான், அனுபவித்தல் மட்டும் இருக்கும் நிலை. அனுபவ சேகரிப்பு, விஷயஞான சேகரிப்பு, மற்றும் 'நான் அனுபவிக்கிறேன்' என்று சொல்லும் நபர் ஆகிய எதுவும், அனுபவித்தல் மட்டும் இருக்கும் நிலையில் இருப்பதில்லை. 'அனுபவிப்பவர்' (experiencer) என்று வரும் அக்கணத்திலேயே, அவர் 'காலத்தை' செயல்பாட்டில் கொண்டு வந்து விடுகிறார்.

கடவுளை உணரும் நிலையில், மனம் இருக்க முடியுமா? அந்த நிலை தான் தியானம். சொந்த விருப்பத்தைப் பின்தொடர்ந்து செல்லும் வேலையாக இல்லாமல், குறிப்பிட்ட ஒரு கருத்தாக இல்லாமல், பிறவற்றை ஒதுக்கி விட்டு, ஒன்றின் மீது கவனம் முழுவதையும் ஒருமுகப்படுத்துவதாக இல்லாமல் இருக்கும் தியானத்தில், அனுபவிப்பவர் என்று இல்லாமல், அனுபவித்தல் மட்டுமே உள்ளது. அவ்வாறு தியானித்தல் மிகவும் சிரமமான விஷயம் என்று உறுதியாக என்னால் சொல்ல முடியும். கண்களை மூடிக் கொண்டு, சப்பணமிட்டு உட்கார்ந்து ஏதோ சிலவித விநோதக் காட்சிகளைப் பார்த்து பரவசம் அடையும் வகையைச் சேர்ந்ததல்ல, அனுபவிப்பவர் இல்லாத, அனுபவித்தல் மட்டுமே இருக்கும் தியானம்.

சரியான முறையில் கேட்க எனக்குத் தெரிந்திருந் தால், எண்ணங்களுக்கு எப்படிச் செவிமடுப்பது என்று நான் அறிந்திருந்தால், அனுபவிப்பவர் இல்லாத நிலையை, எண்ணங்களே கொண்டு வருவது, நிச்சயம்; அதைத் தவிர்க்க முடியாது. அனுபவிப்பவர் இல்லாத தால், அங்கு அனுபவங்களைச் சேகரிப்பவருமில்லை, அதைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருப்பவருமில்லை. ஆகவே, அனுபவித்தல் என்பது நிரந்தரமான அறிந்திராத நிலை; ஆக, அதுவே, காலத்திற்கு அப்பாற்பட்டது, மனதினால் ஆக்கப்படாதது.

**கேள்வி :** ஆட்சியிலிருக்கும் அமெரிக்க அரசியல் தலைவர்கள் கைகளிலும், ரஷ்ய அரசியல் தலைவர்கள் கைகளிலும், நவீனகால விஞ்ஞானிகள், அழிவை உண்டாக்கும் சக்திகளைப் பெருமளவில் கொடுத்திருக் கின்றனர். மக்களிடையே, அன்பு கனிந்த உறவிற்கே இடமில்லையோ என்று தோன்றுகிறது. கொடூரம் தலை விரித்தாடும் இந்தக் கால கட்டத்தில், மனித வாழ்க்கையின் பொருள் என்ன?

**கிருஷ்ணமூர்த்தி :** கேள்வியைக் கேட்டவர், மக்களி டையே மனித நேயம் இல்லை, அன்பு கனிந்த உறவு இல்லை என்று சொல்கிறார். என்னிடமும் உங்களிடமும் அந்த எளிமையான அன்பு, கருணை இருக்கிறதா? நம்மிடம் அன்பும் கருணையும் இல்லாததால், அமெரிக்காவையும், ரஷ்யாவையும் நாம்தான் உருவாக்கி னோம். உங்களை, அமெரிக்காவிலிருந்தும், ரஷ்யாவி லிருந்தும் பிரித்துக் கொள்ளாதீர்கள். நமக்குள்ளும், அமெரிக்கர்களைப் போலவும், ரஷ்யர்களைப் போலவும், நடந்துக் கொள்ளக் கூடிய சக்தி இருக்கிறது. மனதளவில் நாமும் அவர்களைப் போன்றவர்களே. சுதந்திரத்தின் பெயரைச் சொல்லிக் கொண்டு நடிக்கிறோம்; சுதந்திரம்

வழங்கப்பட்டவுடன், கொடுங்கோலர்களாகி விடு கிறோம். உங்கள் வீட்டில் நீங்கள் கொடுங்கோலராக இல்லையா? உங்கள் பிள்ளைகள் மீது அதிகாரம் செலுத்தவில்லையா? உங்கள் அலுவலகத்தில், கருணை யில்லாமல் நடந்து கொள்வதில்லையா? நீங்கள், உங்கள் மனைவி மீதும், மனைவி உங்கள் மீதும், கொடுமையாக நடந்து கொள்வதில்லையா? (சிரிப்பு) ஆமாம் ஐயா! இந்த விஷயங்களை எவ்வளவு இலேசாக எடுத்துக் கொண்டு, நாம் சிரிக்கிறோம்!

அமெரிக்காவிற்கும் ரஷ்யாவிற்கும் ஆயிரக் கணக்கான மைல்கள் தள்ளி, நாம் இருக்கலாம். ஆனால், நீங்களும் நானும் சேர்ந்தே இந்த உலகை உருவாக்கி யுள்ளோம்; நம் பிரச்சனை என்பது உலகப் பிரச்சனை - ஏனென்றால் 'நீங்கள்' தான் உலகம் திரு. ஸ்மித் அவர்களே, திரு. ராவ் அவர்களே, நீங்கள் தாம் ரஷ்யா விலும், அமெரிக்காவிலும் வாழும் உலகம்; அவர்கள் துன்பம், நம் துன்பமாகிறது. நீங்கள் அவர்களிடமிருந்து பிரிந்து, தனிப்பட்டு இருக்க விரும்பலாம். அவர்களைக் கண்டனம் செய்யலாம்; அவர்கள், 'இந்த அரசியல் சித்தாந்தத்தைப் பின்பற்றுகிறார்கள் - அந்தச் சித்தாந்தத்தை பின்பற்றுகிறார்கள்' என்று குறை கூறலாம்; அவர்கள் 'இதை' உபயோகித்துக் கொள்ளப் பார்க்கிறார்கள் - 'அதை' உபயோகிக்கப் பார்க்கிறார்கள்' என்று குற்றம் சாட்டலாம்; செய்தித்தாள்கள் வளர்த்துவரும் பிரச்சாரங் கள் நீங்கள் அறிந்ததுதானே; இருப்பினும், நீங்களும் நானும் அமெரிக்கரும் ரஷ்யரும்தான், வேறுபட்டவர் அல்ல. அதிகாரம், பதவி, கௌரவம் ஆகியவற்றைப் பெற நாமெல்லோருமே விரும்புகிறோம். நாம் அனை வருமே கருணையில்லாதவர்கள்; நாம் அனைவருமே கர்வம் மிக்கவர்கள். நிலைமை இவ்வாறிருக்க, எப்படி நம்மால், கருணையோடும் களங்கமில்லாமலும்

சந்தேகிக்காமலும் இருக்க முடியும்? நம்மால் முடியாது. அமெரிக்காவையும், ரஷ்யாவையும் கண்டனத்திற்குட் படுத்துவது, உபயோகமற்ற செயல். அவர்களை எதிர்த்து போரிடுவதால், நாமும், அவர்களைப் போல் ஆகிறோம்.

நம் சிந்தனைப் போக்கில் புரட்சி ஏற்பட வேண்டும். இந்தியாவுடன் அடையாளப்படுத்திக் கொள்ளாமலும், அரசியல் கொள்கையுடனோ அல்லது மதக்கொள்கை யுடனோ சம்பந்தப்படுத்திக் கொள்ளாமலும், ஹிந்துக்கள் என்றோ, ரஷ்யர், ஜெர்மானியர், ஆங்கிலேயர், அமெரிக்கர், கிருஸ்துவர் என்றோ இன்னும் பல வேறாகவோ முத்திரைக் குத்திக்கொள்ளாமல், நாமெல் லோரும் பொதுவான மனித குலம் என்றிருந்தால் மட்டுமே, உலக அமைதி சாத்தியமாகும். ஸ்டாலின் வரலாம், போகலாம் - அவரைப்போல மற்றவர்களும் வந்து போகலாம். உண்மையானப் புரட்சி, நம் இதயங் களில் தோன்றும்வரை, போர்கள், சண்டைகள் நடந்து கொண்டுதானிருக்கும்.

பொருளாதாரப் புரட்சி மூலமாகவோ அல்லது மேற்பரப்பில் மேலோட்டமாகச் செய்யப்படும் மாற்றங்கள் மூலமாகவோ, உண்மையான புரட்சியைத் தோற்றுவிக்க முடியாது. ஏனென்றால், அத்தகைய மாற்றங்கள், திருத்தம் செய்யப்பட்டு தொடரப்படும் பழைய முறைகளே ஆகும். ஆனால், உண்மையான புரட்சியோ, அடிப்படையில் பூரண மாற்றம் அடைந்த புதிய சிந்தனை. எந்தவித நிர்பந்தத்தாலும், அடிப்படை புரட்சியைக் கொண்டு வரமுடியாது. இயற்கையாக நம்முள்ளிருந்து அது வரவேண்டும். அடிப்படை பரிபூரண புரட்சியை நாம் வேண்டுவதில்லை. பிரச்சனைகளை, போர் புரிந்து தீர்க்க முற்படுகிறோம், பல்வேறு சீர்திருத்தங்கள் செய்து பார்க்கிறோம். செயல் படுத்தப்பட்ட சீர்திருத்தங்களை, மேலும் சீர்திருத்த

வேண்டியிருப்பதால் அதைச் சீர்திருத்துகிறோம் - இப்படி முடிவேயில்லாமல் மேலோட்டமான மாறுதல்களைச் செய்து கொண்டு, பிரச்சனைகளின் பிடியில் சிக்கிக் கொண்டிருக்கிறோம்.

**கேள்வி :** கடவுள் என்றால் என்ன? அன்பு என்றால் என்ன? இறத்தல் என்றால் என்ன?

**கிருஷ்ணமூர்த்தி :** கடவுள், அன்பு, இறத்தல் ஆகியவை பற்றி ஆராய்ந்து பார்த்து, அறிந்து கொள்ள முடியும், அல்லவா? இக்கூட்டத்தில் அமர்ந்திருக்கும் போதே, நம்மால் அவைகளைப் பற்றிக் கண்டுபிடிக்க முடியாதா? நான் தரும் விளக்கங்களை மட்டும், வெறுமனே கேட்காதீர்கள். பசியோடு இருப்பவருக்கு, விளக்கங்கள் திருப்தியளிக்க முடியாது என்பதால் நான் விளக்கங்கள் தரப்போவதில்லை. நான் பசியுடன் இருக்கும்போது, உணவைப் பற்றிய விளக்கங்கள் என் பசியை தீர்க்காது, எனக்குத் திருப்தியளிக்காது.

கடவுள், அன்பு, இறத்தல் ஆகியவை பற்றி அறிந்து கொள்ள, நான் ஆவலுடன், பசியுடனிருப்பதால், என்னால் அவைகளைப் பற்றி அறிந்து கொள்ள முடியுமா? அறிந்தவைகளிலிருந்து என் மனம் முழுமையாக விடுதலை பெற்றால்தான், என்னால் அவற்றைப் பற்றி அறிந்து கொள்ள முடியும். பகவத் கீதையில் படித்ததையும், உபநிடதங்களில் சொல்லப்பட்டிருப்பவைகளையும், அனுபவித்த அசாதாரண உணர்வுகளையும், பாரம்பரியம், மரபு ஆகியவற்றால் அடைந்திருக்கும் தளைகளையும், மனம், ஒதுக்கித் தள்ள முடிந்தால் மட்டுமே, முழுமையாக விடுதலை பெற்ற நிலையில், மனதினால் கடவுள், அன்பு, இறப்பு பற்றி அறிந்து கொள்ள முடியும்.

இறத்தல் என்றால் என்ன என்பதை ஒருவரால் அறிந்து கொள்ள முடியுமா? இறத்தல் என்பது, அதைக் குறிக்கும் சொல் அல்ல, எரிக்க வேண்டி சாலையில் தூக்கிச் செல்லப்படும் சவம் அல்ல. 'நான், எனது' என்ற உணர்வு, முடிவுற்ற நிலை தான் இறத்தல். 'நான்' என்ற உணர்வு முடிவுற்ற நிலை, மனம் அறிந்திராதது. ஏனெனில், கடந்த காலமாகவே இருக்கும் மனம் அதன் இயல்பிற்கேற்பச் சேகரித்த விஷய ஞானம், அனுபவம், கணிப்புகள் போன்ற 'அறிந்தவைகளை' விடாமல் பிடித்துக்கொண்டு 'நான்' என்ற உணர்வைப் பலப் படுத்திக் கொண்டிருக்கிறது. அதனால் 'நான்' இல்லாத நிலையை, 'அறிந்திராத' இறத்தல் நிலையை, மனம் உணர முடியாது. 'நான், எனது' என்ற உணர்வு, தொடர்ந்து வருவது. அதன் தொடர்ச்சி, துண்டிக்கப்பட்டு 'நான்' என்பது மறையும் நிலையை, மனதால் அறிய முடிவ தில்லை. ஆக, இறப்பு என்பது மனம் அறிந்திராதது. இறப்பைப் பற்றி அறிய, இறப்பைப் பற்றி நாம் கற்றறிந்த குறிப்புகளையும், வாசகங்களையும், எவ்வித முயற்சியும் செய்யாமல், எதார்த்தமாக ஒதுக்கித் தள்ளி வைத்து விடவேண்டும்.

'அறிந்தவைகளை' தள்ளி வைத்துவிட்டு 'அறிந்திராத' நிலைக்கு முழுமையாக, உட்புக என்னால் முடியுமா? அப்படி உட்புகின், வாழ்ந்து கொண்டிருக்கும் போதே 'அறிந்திராத' இறத்தலும் கூடவே இருக்கிறது. ஆக, இறப்பைப் பற்றிய பயம் இல்லாதிருக்க வேண்டும் என்று பொருள்படுகிறது. தொடர்ச்சியாக வரும் இயல் புடைய 'நான், எனது' என்ற உணர்வும் 'அறிந்தவை' களும் மரணத்தில் முடிவுறுகின்றன. தொடர்ச்சி, வீழ்ச்சி யடையும்; முடிவுறுதல் தான் சிருஷ்டித் திறனுடையது. எண்ணங்கள் முடிவுற்ற நிலையில், நிச்சயமாக, இறப்பை நான் உணர முடியும்.

மனம் கண்டுபிடிக்கக் கூடிய விஷயமா, கடவுள்? கடவுள் காலத்தின்பாற்பட்டதல்ல. நான் எவ்வாறு வேண்டுமானாலும், கடவுளைப் பற்றிக் கற்பனை செய்யலாம். 'இதுதான் கடவுள்', 'அது கடவுள் இல்லை' என்றெல்லாம் நான் நினைக்கலாம். ஆனால், கடவுள் என்றால் என்ன என்று எனக்குத் தெரியாது. 'கடவுள்' என்ற சொல், கடவுள் அல்ல. 'நான்' என்ற உணர்வு, முடிவுற்ற நிலையில், அங்கு, மனப்பதிவுகள் இல்லை - அதனால் முடிவுறுதலும் இல்லை. மனம், முற்றிலுமாக எண்ணங்களற்ற வெறுமையிலும், சலனமற்றும், கொள்கைபிடிப்பு எதுவுமில்லாமலும், அடைந்து விடுவோம் என்ற நம்பிக்கை கொள்ளாமலும் கள்ளங் கபடமற்றும், உரிமை கோராமலும், வேண்டும் என்று கேட்காமலும் இருக்க முடியுமா? அத்தகைய நிலையை, மனம், கவனித்தறிதலால் அடைய முடியுமே தவிர, கேட்டுப் பெற முடியாது. நீங்கள் கேட்ட அந்தக் கணமே, உங்களுக்கு அத்தகைய நிலையை அடைவதற்கான வழி கொடுக்கப்படுகிறது. ஆனால், அந்த வழி, உங்களைப் பின்நோக்கிச் செல்ல வைப்பதாகவே இருக்கும். உதவியைப் பெறுவது, சாபக்கேடாக முடியும். ஆகவே, கேட்காமலும், எதிர்பார்க்காமலும், அசைவற்று இருந்துகொண்டு, கவனித்துக் கொண்டிருக்க மனதால் முடியுமா?

அன்பும் மனதால் உருவாக்கப்படாத ஒன்றல்லவா? அன்பு செலுத்துகிறோம் என்று மனம் உணர்ந்த அக்கணத்திலேயே, அது அன்பாக இருப்பதில்லை, அல்லவா? ஒரு நொடிப் பொழுதேனும், அசைவற்ற மனதினுள், கடவுள் என்ற வார்த்தைக்கு அப்பால் சென்று, எதையும் அறிந்திராத நிலையைப் பார்க்கவும் அனுபவிக்கவும் கூடுமா? அந்நிலையே இறப்பு. மனதினால் உண்டாக்கப்படாததும், காலத்தின் வரம்பிற்

குட்படாததாகவும் இருக்கும் அன்பினை, அசைவற்ற மோனத்திலிருக்கும் மனதால் உணர முடியுமா? அடையாளப்படுத்தப்படாமல், உணர்வதாக இருத்தல் வேண்டும். ஏனெனில், அடையாளப்படுத்தப்படும் அக்கணமே, அது காலத்தின் வரம்பிற்குட்பட்டு விடுகிறது. ஆகவே, அடையாளப்படுத்துதல் இல்லாத (non-recognition), அனுபவிப்பவர், அனுபவம் என்ற இருமை நிலையற்ற, அனுபவம் மட்டுமே இருக்கும் நிலை தோன்றுதல் வேண்டும்; அத்தகைய உண்மையான, அசைவற்ற மோனத்தில், அறிய முடியாதது மலர்கிறது.

மார்ச் 8, 1953
மும்பை



# 10

# மலர்ச்சியுறுதல்

எவ்வளவு விரைவில் மனம் சீர்குலைந்து போய் விடுகிறது என்பது பற்றியும், மந்தமாகவும் நுண்ணுணர்வு அற்றும் மற்றும் அவசரபுத்தியோடும் இருப்பதற்கு முக்கியமான காரணங்கள் என்ன என்பது பற்றியும், ஆராய்ந்து பார்ப்பது உபயோகமானதாக இருக்கும் என்று நான் கருதுகிறேன். ஆய்வின் மூலம், மனம் ஏன் சீர்குலைந்து போகிறது என்பதைப் புரிந்து கொள்ள முடிந்தால், உண்மையாகவே எளிமையான வாழ்க்கை என்றால் என்ன என்பதை நம்மால் கண்டுபிடிக்க முடியலாம்.

துஷ்பிரயோகம் செய்யப்பட்ட மனம், நாளடைவில் சீர்குலைந்து சின்னாபின்னமாகிறது. விஷயங்களைப் புரிந்துகொள்வதற்கும், பிரச்சனைகளை அலசி ஆராய் வதற்கும், விசாரணை செய்வதற்கும், கேள்வி கேட்பதற் கும், கண்டுபிடிப்பதற்கும் நாம் மனதைக் கருவியாக உபயோகிக்கிறோம். சரியாக உபயோகப்படுத்தப்படா விட்டால், அது சீர்குலைந்து விடுகிறது. தெரிவு செய்தல், தேர்ந்தெடுத்தல் ஆகிய வழிமுறைகள் தான், மனம் சீர்குலைவதற்கு முக்கிய காரணமாக இருப்பதாக நான் கருதுகிறேன்.

நம் ஒட்டுமொத்த வாழ்க்கை, தேர்ந்தெடுத்தல் என்ற அஸ்திவாரத்தில் அமைந்திருக்கிறது. வாழ்க்கையின் பல்வேறு கட்டங்களில், நாம் தெரிவு செய்கிறோம். வெள்ளை நிறமா அல்லது நீல நிறமா என்று பார்த்து, நமக்கு வேண்டியதைத் தேர்ந்தெடுக்கிறோம். ஒரு மலருக்கும் வேறொரு மலருக்கும் இருக்கும் வண்ணம், வாசனை போன்றவற்றைச் சீர்தூக்கிப் பார்த்து நமக்குப் பிடித்ததைத் தெரிவு செய்கிறோம். விருப்பு, வெறுப்பு போன்ற உணர்வுகளிலும், கொள்கைகளிலும் நம்பிக்கை களிலும் சிலவற்றை ஏற்றுக்கொண்டு, மற்றவற்றை ஒதுக்கித் தள்ளுகிறோம். ஆக, தேர்ந்தெடுக்கும் வழிமுறையை ஆதாரமாகக் கொண்டு, நம் மனம் அமைந்துள்ளது. சீர்தூக்கிப் பார்ப்பதற்கும், தேர்ந்தெடுப் பதற்கும், ஏற்றுக் கொள்வதற்கும், ஏற்றுக் கொள்ள மறுப்பதற்கும், இடைவிடாத முயற்சி எடுத்துக் கொண்டு மனம் இயங்குகிறது. இத்தகைய வழிமுறையில், ஓயாத போராட்டங்களும், இடைவிடாத முயற்சியும் உள்ளது. நேரடியாக உடனே புரிந்து கொள்வதாக, தெரிவு செய்யும் வழிமுறை இல்லை. விஷய ஞானத்தைச் சேகரித்து, ஞாபகங்களாகப் பதிவு செய்து, அந்த ஞாபகங்களின் துணையுடன் சீர்தூக்கிப் பார்த்து, தராதரம் கண்டுபிடித்து, அதன் அடிப்படையில் தேர்ந்தெடுப்பதாக, சலிப்பூட்டும் வகையில் சுற்றி வளைத்த நீண்ட வழிமுறையாக, தெரிவு செய்யும் வழிமுறையுள்ளது. தேர்ந்தெடுப்பதின் மூலமாக, ஓயாமல் முயற்சி செய்யவேண்டியிருக்கிறது.

தேர்ந்தெடுத்தல் என்பது, புகழ் முதலியவற்றை அடைய வேண்டும் என்ற பேரவாவின் விளைவால் வந்ததல்லவா? நமது வாழ்க்கையே பேரவாதான். குறிப்பிடத்தகுந்த நபராக நாமிருக்க வேண்டுகிறோம். நம்மைப் பற்றி எல்லோரும் நல்லவிதமாக எண்ண வேண்டும் என்று விரும்புகிறோம், இலக்கினை எட்ட

ஆசைப்படுகிறோம். தற்சமயம் நான் மேதையாக இல்லா விட்டால், மேதையாகிவிட விரும்புகிறேன். தற்சமயம் நான் வன்முறையாளனாக இருந்தால், அஹிம்சாவாதி யாகிவிட விரும்புகிறேன். 'ஆகி விடுதல்' (becoming) என்பது பேரவாவின் செயல் வழியாக இருக்கிறது. நான் மிகப்பெரிய அரசியல் தலைவராக ஆகவேண்டும் என்று விரும்பினாலும் சரி, அல்லது மிகவும் உன்னதமான ரிஷியாக ஆக வேண்டும் என்று விரும்பினாலும் சரி, எதுவானாலும், அதிலிருக்கும் பேரவா, உந்துதல், 'ஆகி விடவேண்டும்' என்ற தூண்டுதல் ஆகியவை, தேர்ந் தெடுத்தல் என்பதின் செய்முறையாக, தேர்ந்தெடுத்தல் என்பதை அடிப்படையாகக் கொண்ட பேரவாவின் செய்முறையாகவே இருக்கிறது.

ஆக, நம் வாழ்க்கை என்பது போராட்டங்களின் தொடராக இருக்கிறது. ஒரு வகையான கொள்கை நெறி முறைகள், இலக்கணங்கள், விருப்பங்கள் ஆகியவற்றி லிருந்து மற்றொரு வகை கொள்கை நெறிமுறைகளுக்குத் தாவிச் செல்லும் இயக்கமாக, நம் வாழ்க்கை இருக்கிறது. இவ்வகையான செயல்வழியால், மற்றொன்றாக ஆதல் என்ற செயல்முறையால், போராட்டங்களால், மனம், சீர்கெடுகிறது. சீர்கேட்டின் இயல்பாகத் தேர்ந்தெடுத்தல் இருக்கிறது. தேர்வுரிமை, தேர்ந்தெடுத்தல் நமக்கு மிகவும் இன்றியமையாதது என்று நாம் கருதுகிறோம். தேர்வுரிமையிலிருந்து பேரவா ஊற்றிடுகிறது.

பேரவாவினை அடித்தளமாகக் கொண்டிராத ஒரு வாழ்க்கை முறையை, நம்மால் கண்டுபிடிக்க முடியுமா? தெரிவு செய்ததால் கிடைக்கப் பெறாத, பலனை எதிர் பார்க்காத, வாழ்க்கை முறையை நம்மால் கண்டுபிடிக்க முடியுமா? நாம் அறிந்ததெல்லாம் தொடர்ச்சியான போராட்டங்கள், அதன் விளைவுகள், விளைவுகளில்

முடிவுறும் போராட்டங்கள் என்பதாகவும், அந்த விளைவுகள், இன்னும் மேம்பட்ட விளைவுகளுக்காகத் தூக்கியெறியப்பட்டு, மேம்பட்ட அந்த விளைவுகளுக் காக மீண்டும் தொடரும் போராட்டம் என்பதாகவும் உள்ளது. நமக்குத் தெரிந்தது இவ்வளவே.

குகைக்குள் தனியாக அமர்ந்திருக்கும் மனிதர், தன்னை முழு நிறைவானவராக மேம்படுத்த முயற்சி செய்கிறார். அவர் மேற்கொள்ளும் செயல்முறையில், தேர்ந்தெடுத்தல் இருக்கிறது - தேர்ந்தெடுத்தல் என்பது பேரவா ஆகும். கோபாவேசமிக்க ஒருவர், சாந்தமான வராக ஆகி விட முயற்சிக்கிறார்; 'ஆகி விட வேண்டும்' என்பதே பேரவா தான். பேரவா, சரியானதா, இல்லை, தவறானதா, வாழ்க்கைக்குப் பேரவா மிகவும் அவசிய மானதா என்பதைப் பற்றியெல்லாம் இங்கே ஆராயப் போவதில்லை. ஆனால், எளிமையான வாழ்க்கை முறைக்கு, பேரவா, உகந்ததுதானா என்பதைப் பற்றி ஆராய இருக்கிறோம். எளிமை என்பதின் பொருளாக, எண்ணிக்கையில் ஒன்றோ இரண்டோ உடைகள் வைத்திருப்பது போன்றவற்றை நான் குறிப்பிடவில்லை; அது எளிமையான வாழ்க்கையல்ல. கோவணம் கட்டி யிருப்பதால், அந்த மனிதர் எளிமையானவர் என்று சொல்ல முடியாது; மாறாக, உலகாயத பொருட்களைத் துறப்பதால், மனம் மற்றதில் பேரவா மிக்கதாய் ஆகி விடக்கூடும். ஏனெனில், அது, தன்னால் முன்நிறுத்தப் பட்டதும் மற்றும் தன்னால் உருவாக்கப்பட்டதுமான சொந்த கொள்கைகளை மிகவும் உறுதியாகப் பிடித்து வைத்துக் கொள்ளும் பேரவாமிக்கதாய் ஆகிவிடுகிறது.

நம் எண்ணவோட்டத்தைப் பற்றி நாம் கவனித்துப் பார்க்கும்போது, பேரவாவைப் பற்றிய விஷயங்களையும் விசாரணை செய்வது அவசியமல்லவா? பேரவா,

போட்டி மனப்பான்மையை வளர்ப்பதை நாம் காண்கிறோம். ஏற்கனவே எட்டப்பட்ட சாதனையை முறியடிப்பதையே, பள்ளிக் குழந்தைகளிலிருந்து பெரும் அரசியல் தலைவர்கள் வரை, இலட்சியமாகக் கொண் டுள்ளனர். இத்தகைய போட்டி மனப்பான்மை கொண்ட பேரவாவினால், தொழில்ரீதியான நன்மைகள் சில உண்டாகின்றன. ஆனால், பேரவா விழித்தெழும் போது, மனதில் இருள் கவ்விக் கொள்கிறது; தொழில் நுட்ப அறிவால், மனம், தளைபடுகிறது. இதன் காரணமாக, மனம், தனது நெகிழ்வுத் தன்மையை இழக்கிறது, மற்றும் அதன் எளிமையை இழக்கிறது. நெகிழ்வையும் எளிமை யையும் இழந்த மனதால், எதையும் நேரடியாக அனுபவிக்க முடியாது. ஒரு கூட்டம் ஆராய்வதாக இல்லாமல், தனி மனிதர்களாக, நீங்களும் நானும் பேரவாவைப் பற்றி விசாரணை செய்வது அவசிய மல்லவா? பேரவா என்றால் என்ன, நம் வாழ்வில் அது இருப்பதை நாம் சற்றேனும் விழிப்புணர்வோடு உணர்ந்திருக்கிறோமா என்பதைப் பற்றி நாம் ஆய்வு செய்வது அவசியமல்லவா?

தேச நன்மைக்காக நம்மை அர்ப்பணித்துக் கொள்ளும் அந்த மேன்மையான செயலில், பேரவாவின் அடிப்படை ஆதாரப் பொருள் இடம் பெற்றிருக்கிற தல்லவா? தேர்ந்தெடுத்தல் எனும் பேரவாவின் ஆதாரப் பொருள், அச்செயலில் இருக்கிறதல்லவா? மலர்ச்சியுறு தலைத் தடுக்கும் தேர்ந்தெடுத்தல் வழிமுறை, நம் வாழ்வில் ஒரு மாசு விளைவிக்கும் தூண்டும் சக்தியாக அல்லவா இருக்கிறது? 'மலர்ச்சியுறும்' (flowering) மனிதன், இயல்பாக, அவன் அவனாக இருப்பான் - அப்படியிருத்தல் 'ஆகி விடுதல்' (becoming) என்ப தாகாது.

'மலர்ச்சியுறும்' மனதிற்கும், வேறொன்றாக 'ஆகி விடும்' மனதிற்கும், வேறுபாடுகள் இருக்கிறதல்லவா? 'ஆகி விடும்' மனம் என்பது ஓயாமல் வளர்ந்து கொண்டும், ஆகிக் கொண்டும், விரிந்து பரந்தும், அனுபவங்களை விஷயஞானமாகத் திரட்டிக் கொண்டும் இருக்கிறது. நம் அன்றாட வாழ்க்கையில் நிகழும் இந்த நடைமுறையை நாம் நன்றாக அறிவோம். இந்த வழி முறையால் உண்டாகும் விளைவுகள், முரண்பாடுகள், துயரங்கள், சண்டைகள் எல்லாம் நாம் அறிந்ததே. மலர்ச்சியுறும் வாழ்க்கையைப் பற்றி நமக்குத் தெரியாது. மலர்ச்சியுறும் வாழ்க்கைக்கும் 'ஆகி விடும்' வாழ்க்கைக் கும் உள்ள வேறுபாடுகளை நாம் கண்டறிய வேண்டும். இரண்டையும் பிரித்து அவைகளுக்கான எல்லைகளை நிர்ணயம் செய்து அறிய முயற்சிக்காமல், நம் வாழ்க்கை முறையிலிருந்தே கண்டறிய வேண்டும். அப்படிக் கண்டறியும்போது, நம்மால் பேரவாவினைத் தள்ளி வைத்துவிட முடியலாம்; தேர்ந்தெடுத்தலை ஒதுக்கி வைக்க முடியலாம். வாழ்வு நெறியாக இருக்க வேண்டிய மலர்ச்சியுறுதல் என்பதை, நாம் அப்போது கண்டு கொள்ள முடியலாம் - அப்படியறிதலே உண்மையான செயலாகும்.

பேரவாவுடன் இருக்கக்கூடாது என்று 'மலர்ச்சி யுறுதலை' பற்றி கண்டுபிடிக்காமல் சொல்வதினால், நன்மை விளைவதில்லை. புரிதல் இல்லாமல் பேரவா வினைக் கொல்வதால், மனமும் சேர்ந்து அழிந்து படுகிறது. தெரிவு செய்யப்பட்ட நோக்கமாகிய பேரவா வினைக் கொல்வதைச் செயல்படுத்துவதால், விளைவு அத்தகையதாக இருக்கிறது. ஆகவே, பேரவாவைப் பற்றிய உண்மைகளை நாம் ஒவ்வொருவரும் அறிந்து கொள்வது மிகவும் அவசியமாகிறதல்லவா? பேரவா வுடன் இருக்க வேண்டும் என்று நாம் அனைவரும்

ஊக்குவிக்கப்படுகிறோம்; நமது சமுதாயம் பேரவாவின் அடிப்படையில், பலனை அடைவதற்கான பலமுடைய தூண்டும் சக்தியை, ஆதாரமாகக் கொண்டு அமைந்திருக் கிறது. தூண்டும் சக்தி எல்லோருக்கும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை, அதில் ஏற்றத் தாழ்வுகள் இருக்கக் கூடும். ஏற்றத் தாழ்வுகளை, சரிகட்டும் விதமாகவும், மாற்றி அமைக்கும் விதமாகவும், சட்டங்கள் இயற்றப்படு கின்றன. இவ்விதமான அணுகுமுறை, அடிப்படை யிலேயே தவறானதாக உள்ளது. மலர்ச்சியுறும்விதமாக இருக்கும், வேறொரு விதமான அணுகுமுறை இருக்க லாம்; அது விஷயஞான சேகரித்தல் எதுவுமில்லாமல் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளக்கூடும். ஒன்றை அடைவதற்காகக் கடும் முயற்சி செய்வதும் சிறப்பு மிக்கவராக உயர உழைப்பதும், நாம் அறிந்ததே; பலனை எதிர்பார்த்து செய்யப்படுபவை, பேரவாவின் பாற்பட்ட தாகும்.

'நான், எனது' என்ற பின்புலம் இல்லாத, சேகரிப்பு என்ற செயல்முறை இல்லாமல் இருக்கும் ஒரு சக்தி, ஒரு வலிமை, இருக்கிறது; அதுதான் படைப்பாற்றல் (creativity). அந்தச் சக்தியைப் புரிந்துகொள்ளாமல், அதை உண்மையிலேயே உணராமல் இருந்தால், நமது வாழ்க்கை மிகவும் சலிப்பூட்டுவதாக இருக்கிறது; நமது வாழ்க்கை, படைப்பாற்றல் இல்லாத, மகிழ்ச்சியற்ற, ஓயாத போராட்டங்களின் தொடர் நிகழ்ச்சியாக இருக்கிறது. பேரவாவின் வழிகளைக் கவனித்து அதைப் பற்றிப் புரிந்துகொள்வதால், படைப்பாற்றல் நிலையை நம்மால் அடையக் கூடும். மனதில் ஒளிவுமறைவு இல்லாமல், பேரவாவின் உண்மை நிலைப்பாட்டை கவனித்தறிந்து, அதன் வழிகளைக் கவனத்துடன் பார்ப்பதால், பேரவாவைப் பற்றிப் புரிந்துகொள்ள முடியும். அந்நிலையில் தன்னிறைவின் குரலாக

இல்லாமல், 'நான், எனது' என்ற வரையறைக்குட்படாத, சக்தியின் நிலைத்த குரலாக இருக்கும் படைப்பாற்றலை நாம் பெறுவது சாத்தியமாகலாம்.

**கேள்வி :** வாழ்வில் துயரங்கள் மிகுந்திருக்கும் போது, பெரும்பாலானோர், காலம் ஒரு நாள் மாறும் என்ற நம்பிக்கையில்தான் வாழ்கிறார்கள். நம்பிக்கை இல்லாத வாழ்க்கை, அச்சமூட்டுவதாக இருக்கிறது. பல நேரங்களில் நம்பிக்கை, வெறும் கானல்நீராகவே இருக்கிறது. வாழ்க்கைக்கு நம்பிக்கை ஏன் தவிர்க்க முடியாததாக இருக்கிறது என்பதை நீங்கள் விளக்கிச் சொல்ல முடியுமா?

**கிருஷ்ணமூர்த்தி :** மனதின் இயல்பே மாயத் தோற்றங்களைத் தோற்றுவிப்பதுதான், அல்லவா? ஞாபகங்களின் துணையோடு சிந்தித்து, சிந்தனைகளைக் கருத்துகளாக்கி, அடையாளச் சின்னங்களாக்கி, மனம், தானே சமைத்த அடையாளச் சின்னங்களைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டிருப்பதுதானே சிந்தனையின் செயல்பாட்டு முறையாக உள்ளது, இல்லையா?

நான் நம்பிக்கையிழந்து கலக்கமுற்று இருக்கிறேன்; நான் துக்கத்திலிருக்கிறேன்; என் கஷ்டங்களைத் தீர்ப்பதற்கு வழியேதுமில்லை; என் துயரங்களை எவ்விதத்தில் அகற்றுவது என்று தீர்மானிக்க முடியவில்லை. என்னால் அப்படித் தீர்மானிக்க முடிந்தால், நம்பிக்கைக்குத் தேவை இருக்காது. குறிப்பிட்ட ஒரு பிரச்சனையை எவ்வாறு முடிவிற்குக் கொண்டு வருவது என்ற தீர்மானம் எனக்கு இல்லாதிருக்கும்போதுதான், நான் மாயத் தோற்றங்களையும் நம்பிக்கைகளையும் சார்ந்து, அவற்றை நம்பி வாழ முற்படுகிறேன். நிம்மதியில்லாமலும், குழப்பத்திலும், கஷ்டத்திலும் நீங்கள் இருக்கும்போது, அவற்றிலிருந்து வெளியேறிவிட

உங்கள் மனம் முயற்சி செய்வதை உங்களால் கவனித்து பார்த்து அறிந்து கொள்ள முடியும். பிரச்சனையிலிருந்து விலகிச் செல்லும் செயல்பாடு விளைவிப்பதுதான், நம்பிக்கை.

பிரச்சனையிலிருந்து விலகிச் செல்லும் மனம், பயத்தைத் தோற்றுவிக்கிறது; விலகிச் செல்லும் செயலே, பயம்தான். தவறிழைத்து விட்டேன் அல்லது துயரத்திற்கு ஆளாகிவிட்டேன் அல்லது பயங்கர தீமை புரிந்து விட்டேன் அல்லது என் மகன் இறந்துவிட்டான் அல்லது சாப்பிட சிறிதளவு உணவே என்னிடம் இருக்கிறது என்பது போன்ற காரணங்களால், நான் நம்பிக்கையிழந்து கலங்கிப்போயிருக்கிறேன். என் மனதிற்கு என் பிரச்சனையைத் தீர்த்து வைக்க மனோதிடம் இல்லாத போது, நிச்சயத்தன்மையோடு கூடிய ஒன்றை அது உருவாக்குகிறது. கலக்கத்தில் துவளும் மனம், பற்றிக் கொள்ள ஏதுவாக கையில் செதுக்கப்பட்ட ஒன்றையோ அல்லது மனதால் செதுக்கப்பட்ட ஒன்றையோ உருவாக்கி விடுகிறது. அல்லது, குரு ஒருவரையோ புத்தகம் ஒன்றையோ கொள்கை ஒன்றையோ, மனம் பற்றிக் கொள்கிறது. என் சிரம காலங்களில், கஷ்ட நேரங்களில் என்னைத் தாங்கிப் பிடித்துக் கொள்பவை யாக அவை இருக்கின்றன. அதனால், அடுத்த ஜென்மத் தில் நல்ல நிலைமையில் இருப்பேன் என்பது போன்ற நம்பிக்கைகளை அவை எனக்குத் தருகின்றன.

என் பிரச்சனைகளைத் தீர்த்துக் கொள்ளும் ஆற்றல் எனக்கில்லாதவரை, நான் நம்பிக்கைகளைச் சார்ந்திருக்கி றேன்; அந்த நிலைமை தவிர்க்க முடியாதது. என் நம்பிக்கைகளுக்காக நான் சண்டை போடுகிறேன். என் நம்பிக்கையைக் குலைக்க எவரையும் நான் அனுமதிப்ப தில்லை. என் நம்பிக்கையை, அமைப்பு ஒன்றாக

நிர்மாணிக்கிறேன், அமைப்புடன் இணைந்து கொள் கிறேன். ஏனென்றால், அப்படிச் செய்வது எனக்குச் சந்தோஷத்தைத் தருகிறது. என்னை எதிர்நோக்கும் பிரச்சனைக்கு என்னால் தீர்வு காண முடியாததால், நம்பிக்கை வைப்பது எனக்கு இன்றியமையாத தேவையாக இருக்கிறது.

பிரச்சனையைத் தீர்க்க என்னால் முடியுமா? பிரச்சனையைப் புரிந்துகொள்ள முடிந்தால், நம்பிக்கை எனக்குத் தேவைப்படாது. நம்பிக்கை வைப்பது தேவைப் படாததால், ஒரு கொள்கையையோ அல்லது ஒரு விக்ரகத்தையோ அல்லது ஒரு மனிதரையோ நம்பி இருக்க வேண்டிய தேவையில்லை. சார்ந்திருப்பது என்பது நம்பிக்கை வைப்பதையும் சுகத்தையும் குறிப்பிடு வதாக இருக்கிறது. ஆக, நம்பிக்கை என்பது தவிர்க்க முடியாத ஒன்றா என்ற கேள்விக்கும், என்னால் என் பிரச்சனைகளுக்குத் தீர்வுகாண முடியுமா என்ற கேள்விக்கும், துக்கப்படாமலிருப்பது எப்படி என்பதை அறிய வழி இருக்கிறதா என்ற கேள்விக்கும் விடை கண்டுபிடிக்க வேண்டுமே தவிர, நம்பிக்கையை எப்படி கைவிடுவது என்பது விடை காணவேண்டிய கேள்வி அல்ல.

பிரச்சனையைப் புரிந்து கொள்ள மிகவும் தேவைப் படும் முக்கியமான காரணி (factor) என்ன? பிரச்சனையைப் புரிந்து கொள்ள வேண்டுமென்றால், அதைப் பற்றிய சூத்திரங்களோ, தீர்மானங்களோ, தீர்ப்புகளோ என்னிடம் இருக்கக் கூடாது என்பது வெளிப்படை. நம் மனதைக் கவனித்து பார்த்தால், அது சூத்திரங்களாலும் தீர்மானங்க ளாலும் நிரம்பி வழிவதைக் காண முடியும். அதன் காரணமாக, நம் தீர்மானங்களுக்கேற்ப, ஒன்றைச் சீர்தூக்கிப் பார்க்கிறோம், கண்டனம் செய்கிறோம்.

சூத்திரங்களும் தீர்மானங்களும் நிந்தனை செய்யும் மனோபாவமும் நமக்குள் இருக்கும் வரை, பிரச்சனையை நம்மால் அறிந்துகொள்ள முடியாது.

பிரச்சனையை விட, பிரச்சனையை நாம் எவ்வாறு அணுகுகிறோம் என்பது தான் முக்கியம். தன் சொந்த தீர்மானங்களும் சூத்திரங்களும், தீர்ப்புகளும், சிந்தனையில் எவ்விதம் இயங்குகிறது, குறிப்பிட்ட ஒன்றை ஆராயும்போது, எவ்வித தாக்கத்தை ஏற்படுத்துகின்றன என்பதைப் புரிந்துகொள்வதில், மனம், மிகவும் சிரத்தையுடன் இருக்கவேண்டும். பிரச்சனையைப் புரிந்துகொள்ள விழையும் மனம், பிரச்சனையை விட, தனது இயக்கத்தைப் புரிந்துகொள்வதில் அக்கறை காட்ட வேண்டும், புரிகிறதல்லவா?

நம்பிக்கை இல்லாவிட்டால், நான் தோல்வி அடைவேன் என்பதால் நம்பிக்கை மிகவும் இன்றியமையாததாகும் என்ற கருத்தை நிலைநிறுத்தி தொடங்குகிறேன். ஆகவே, என் மனதை நம்பிக்கையால் நிரப்பி விடுகிறேன். என் மனம், நம்பிக்கையால் ஆக்ரமிக்கப்படுகிறது. மனம், நம்பிக்கையால் ஆக்ரமிக்கப்பட்டிருப்பது என் பிரச்சனை அல்ல; துக்கம், வலி, தவறுகள் ஆகியவை என் பிரச்சனை. ஆனால், துக்கம் முதலியவற்றைக் கூட பிரச்சனைகளாக எடுத்துக் கொள்ள வேண்டுமா அல்லது பிரச்சனையை எப்படி அணுகுவது என்பதுதான் என் பிரச்சனையா? ஆகவே, பிரச்சனையை, மனம் எவ்வாறு கருதுகிறது என்பதுதான் மிகவும் முக்கியம்.

நம்பிக்கை, மாயத்தோற்றமாக, கற்பனையான ஒன்றாக இருப்பதால், நான் நம்பிக்கை வைப்பதிலிருந்து விலகித் தள்ளி வந்து விடுகிறேன். மனதால் உருவகிக்கப்பட்ட, நிஜத்தில் இல்லாத நம்பிக்கையை

கெட்டியாகப் பிடித்துக் கொள்ள என்னால் முடிவ தில்லை. துக்கம், கலக்கம், என் செயல்கள், மண்டிக் கிடக்கும் ஞாபகங்கள், வேதனைகள் என்பவைதாம் நிஜம். நிஜமாக இருக்கும் வேதனைகளையும் துக்கங் களையும் நான் எப்படி அணுகுகிறேன் என்பதுதான் முக்கியமே தவிர, நம்பிக்கை முக்கியமல்ல. நான் என் பிரச்சனைகளை அணுகும் முறையை அறிந்து கொண் டால், பிரச்சனைகளை எதிர்கொள்ளும் ஆற்றலுடன் அவற்றை நான் அணுக முடியும்.

கண்டனம் செய்தோ, ஆமோதித்தோ அல்லது அதை மாற்ற முயற்சித்தோ, என் தீர்மானத்திற்கேற்ப, நான், பிரச்சனைகளைப் பார்க்கிறேன். மற்றொரு வகையிலும் பார்க்கிறேன் - அதாவது, பகவத் கீதையில் சொல்லப் பட்டிருப்பவைகளின் மூலமாகவும் புத்தரும் ஏசு கிருஸ்துவும் சொல்லியவைகளின் மூலமாகவும் பிறர் என்ன சொல்லியிருக்கிறார்கள் என்ற திரையின் மூலமாகவும் சூத்திரங்கள் என்ற கண்ணாடி வழியாகவும், பிரச்சனைகளைப் பார்க்கிறேன். சூத்திரங்களாலும், தீர்ப்புகளாலும் மேற்கோள்களாலும் ஊனமுற்ற என் மனம், பிரச்சனைகளைப் புரிந்து கொள்வதில்லை. அவற்றைக் கவனத்துடன் பார்ப்பதில்லை. சேகரிக்கப் பட்டுக் குவிக்கப்பட்டுள்ள தீர்ப்புகளிலிருந்து, மேற்கோள்களிலிருந்து, மனம், தன்னை விடுவித்துக் கொள்ள முடியுமா?

தயவுசெய்து கவனித்துக் கொண்டு வாருங்கள் - என் வார்த்தைகளைச் சொல்லவில்லை, எப்படிப் பிரச்சனை களை நீங்கள் அணுகுகிறீர்கள் என்று கவனியுங்கள். நம்பிக்கையைப் பின் தொடர்ந்து செல்வதை நாம் சதா செய்து கொண்டிருக்கிறோம். மற்றும், நிரந்தரமாக ஏமாற்றத்தையும் எரிச்சலையும் அனுபவித்துக் கொண்டி

ருக்கிறோம். ஒன்றில் நம்பிக்கை வைத்து, தோல்வி கண்டால், வேறொன்றில் நம்பிக்கை வைக்கிறேன் - இது ஓயாமல் தொடருகிறது. பிரச்சனையை எப்படி அணுகுவது, எப்படிப் புரிந்துகொள்வது என்பதே அறிந்திராத நிலையில், பிரச்சனையிலிருந்து தப்பித்து ஓட பல்வேறு வழிகளை நாடுகிறேன். ஆனால், பிரச்சனையை எப்படி அணுகுவது என்று அறிந்திருந்தால், நம்பிக்கைக்கு அவசியமே இல்லை. ஆக, மனம், பிரச்சனையை எவ்வாறு கருதுகிறது என்பதை கண்டுபிடிப்பது மிகவும் அவசியம்.

உங்கள் மனம், ஒரு பிரச்சனையை நோக்குகிறது. நிந்தனை செய்யும் மனோபாவத்துடன் பார்ப்பது தெளிவாக தெரிகிறது. அதை, மற்றவற்றுடன் ஒப்பிட்டு, தராதரம் காண்கிறது. அதன் தாக்கத்திற்குள்ளாகிறது, அல்லது, அதை மாற்றி வேறொன்றாக்க முயற்சிக்கிறது. நீங்கள் வன்முறையாளனாக இருந்தால், அஹிம்சா வாதியாக மாற விரும்புகிறீர்கள். அஹிம்சை என்பது கற்பனை, உண்மைக்குப் புறம்பானது; எது உண்மை என்றால் வன்முறைதான் உண்மையாக உள்ளது. எவ்விதமான மனோபாவத்துடன் இந்தப் பிரச்சனையைக் காண்கிறீர்கள் என்பதைப் பார்க்க வேண்டும். வன்முறையை கண்டனம் செய்தோ அல்லது அதைப் பற்றி குருமார்கள் என்ன சொல்லியிருக்கிறார்கள் என்பது பற்றிய ஞாபகங்களின் மூலமாகவோ, பிரச்சனையைப் பார்க்கிறீர்களா என்பதை, உங்கள் மனோபாவத்தை, கண்டுபிடிப்பது மிகவும் அவசியம்.

கண்டனம் செய்து கொண்டும், ஞாபகங்களின் மூலம் பார்த்துக் கொண்டும் இருக்கின்ற நிலையை ஒழித்து விட்டு, இந்நிலையிலிருந்து விடுதலை பெற்று, மனதால் பிரச்சனையைப் பார்க்க முடியுமா? இந்நிலையி

லிருந்து விடுதலை பெற எத்தனிக்காமல் இருக்க மனதால் இயலுமா? எத்தனித்தால், அந்த முயற்சியிலிருந்து வேறொரு பிரச்சனை முளைத்துவிடும். ஆனால், கண்டனம் மற்றும் ஞாபகத்தின் வழியாகப் பிரச்ச னையைப் பார்ப்பது என்ற நிலை, பிரச்சனையைப் புரிந்து கொள்வதைத் தடை செய்கிறது என்பதை அறிந்து கொண்டவுடனே, அந்நிலைக்கு மதிப்பு ஒன்றுமில்லா மல் போய்விடுகிறது. பிரச்சனை, வேதனை, துயரம்தான் முக்கியமே தவிர, அவற்றைப் புரிந்துகொள்வதற்குத் தடையாக இருக்கும் நிலைக்கு மதிப்பேதுமில்லை. துயரத்தை, துயரத்தைப் பற்றிய கருத்து என்றழைத்து ஒதுக்கிவிட முடியாது. அது உணரும் வண்ணம் அங்கு இருக்கிறது.

ஆக, பிரச்சனையை உள்ளபடியே காண்பதற்கு மனம் வலிமை பெறாத வரையில், பிரச்சனைகளுக்குத் தீர்வு காண சக்தி இல்லாதவரையில், பிரச்சனைகளி லிருந்து தப்பிக்க, பல்வேறு தப்பித்தல் வழிகள் இருக்கும்; அந்த வழிகளே, நம்பிக்கைகள். நம்பிக்கைகள், தற்காப்பு கவசமாக உள்ளன.

மனம், தொடர்ந்து பிரச்சனைகளைத் தோற்றுவித்துக் கொண்டே இருக்கும். ஆனால், முக்கியமாகச் செய்ய வேண்டியது என்னவென்றால், நாம் தவறிழைக்கும் போது, நாம் வேதனைபட்டுக் கொண்டிருக்கும்போது, தவறுகளையும் வேதனைகளையும் கண்டனம் செய்யாமல், தீர்ப்பு வழங்காமல், அவற்றை எதிர்கொண்டு, அவற்றுடன் வாழ்ந்து, அவற்றைப் போகவிட அனுமதிப்பதே முக்கிய மாகும். இவ்வாறு எப்பொழுது நிகழும் என்றால், மனம், சூத்திரங்கள் எதுவுமில்லாமல், நிந்திக்கும் மனோ பாவத்தில் இல்லாதிருக்கும்போதுதான் நிகழும்; அதாவது, அடிப்படையில் அமைதியாகவும் சலனமில்லா

மலும் மனம் இருக்கும்போது, நம்பிக்கை தேவைப்படுவ தில்லை; அப்போது மட்டுமே, பிரச்சனையைப் புரிந்து கொள்ளுதல் நிகழும்.

**கேள்வி :** 'நமது தொழில்' என்ற சொற்களை நீங்கள் எந்த அர்த்தத்தில் குறிப்பிடுகிறீர்கள் என்று தயவுசெய்து எங்களுக்குச் சொல்லுங்கள். சாதாரணமாக அச்சொற்கள் உணர்த்தும் அர்த்தத்திலிருந்து வேறுபட்ட ஒன்றை, நீங்கள் குறிப்பிடுவதாக நான் எண்ணுகிறேன்.

**கிருஷ்ணமூர்த்தி :** வழக்கறிஞர், போர்வீரர், போலீஸ்காரர், வர்த்தகர் போன்று பல்வேறு விதமான தொழில்களை நாம் செய்கிறோம். சமூகத்திற்குத் தீங்கு விளைவிக்கும் தொழில்களாகச் சில இருக்கின்றன. உதாரணத்திற்கு, வழக்கறிஞர், போர்வீரர், போலீஸ்காரர் மற்றும் மற்றவர்களைத் தன்னளவிற்குச் செல்வந்தராக்காத தொழிலதிபர் போன்றவர்களைச் சொல்லலாம்.

குறிப்பிட்ட ஒரு தொழிலைத் தேர்ந்தெடுத்து, அதைச் செய்கிறோம். நம் பிள்ளைகளை, குறிப்பிட்ட தொழிலுக்குப் பயிற்றுவிக்கிறோம் - இதனால், சமூகத்தில், சச்சரவுகளை நாம் தோற்றுவிக்கிறோம், அல்லவா? நீங்கள் ஒரு தொழிலைத் தெரிவு செய்கிறீர்கள், நான் ஒன்றைத் தெரிவு செய்கிறேன் - இதனால் நமக்கிடையே சச்சரவு ஏற்படுகிறதல்லவா? இது தானே நடந்து கொண்டிருக்கிறது? நமது உண்மையான சீரிய வாழ்க்கைத் தொழில் என்ன என்று நாம் தெரிந்து கொள்ளாததே, சச்சரவுகளுக்குக் காரணம். சமூகத்தின் வரைமுறை களாலும், குறிப்பிட்ட பண்பாட்டினாலும், ஒரு சில துறைகளைச் சார்ந்த தொழில்களையே தேர்ந்தெடுக் கிறோம். அதனால், மக்களிடையே போட்டியும் வெறுப்பும் பெருகுகிறது. இவற்றை நாம்

அன்றாட வாழ்வில் பார்க்கிறோம்; இவற்றைப் பற்றி நாம் அறிவோம்.

உண்மையான சீரிய வாழ்க்கைத்தொழிலை, நாம் அனைவரும் செய்யும் வகையில் அமைந்திருக்கும், வேறு விதமான வாழ்க்கைமுறையென்று ஏதேனும் உள்ளதா? தயவுசெய்து கவனியுங்கள். ஐயா! மனிதன் செய்ய வேண்டிய வேலை ஒன்றுதானல்லவா? அல்லது, பல வகைப்பட்டதா? நாம் கணக்கிலடங்கா தொழில் வகைகளைப் பார்க்கிறோம். நீங்கள் ஒரு குமாஸ்தா, நான் காலணிகளுக்குப் பாலீஷ் போடுகிறேன், அவர் ஒரு பொறியாளர், இவர் ஒரு அரசியல்வாதி - இப்படிப் பல வகையாக இருக்கிறது. இவர்களுக்கிடையே சச்சரவு களும் வெறுப்பும் உள்ளது. இதை நாம் நன்கறிவோம். இது நமக்குப் பழக்கப்பட்ட ஒன்றுதான்.

மனிதனுடைய வாழ்க்கைத் தொழிலாக ஒன்று மட்டும் இருக்கிறதா என்று பார்ப்போம். அதை நம்மால் கண்டுபிடிக்க முடியுமேயானால், பல தரப்பட்ட செயல் திறனால் மனிதர்களுக்கிடையே தோன்றும் சச்சரவுகள் தோன்றாது. மனிதனுக்கு ஒரே ஒரு சீரிய தொழில் மட்டும் தான் உண்டு என்று நான் சொல்கிறேன். ஒரே ஒரு சீரிய தொழில் தான் உண்டு. செய்ய வேண்டிய தொழில் பல தரப்பட்டவை அல்ல. உண்மை என்றால் என்ன என்பதைக் கண்டுபிடிப்பது ஒன்றே மனிதனின் தொழிலாகும். இப்படிச் சொல்வது, ஏதோ பூடகமாக, புரிந்து கொள்ள முடியாதவாறு சொல்லப்படும் விஷயம் அல்ல.

நம் ஒரே சீரிய தொழிலாக இருக்கும், உண்மை என்றால் என்ன என்ற தேடுதலில், நீங்களும் நானும் ஈடுபடும்போது, நமக்கிடையே போட்டி இல்லை. இந்த தேடுதலில், நான் உங்களுடன் போட்டா போட்டி போட

மாட்டேன், உண்மை என்றால் என்ன என்று நான் சொல்வதிலிருந்து மாறுபட்டு நீங்கள் சொன்னாலும், நான் சண்டை போட மாட்டேன்; நீங்கள் பிரதம மந்திரியாக இருக்கலாம், நான் பேரவா கொண்டு, உங்கள் இடத்தை ஆக்ரமிக்க முயற்சிக்க மாட்டேன். ஏனென்றால், நானும் உங்களுடன் சரி நிகர் சமானமாக, உண்மை என்றால் என்ன என்ற தேடுதலில் ஈடுபட்டிருப்பதால், நமக்குள் போட்டி இல்லை. ஆகவே, நம் உண்மையான சீரிய தொழிலை நாம் கண்டுகொள்ளும்வரை, நம்மிடையே போட்டியும் வெறுப்பும் இருக்கும். இந்நிலையைச் சீர்திருத்த, எந்தவிதமான சட்டங்களைக் கொண்டு வந்தாலும் அச்சட்டங்கள், மேலும் குழப்பத்தையே விளைவிக்கும்.

முறையான கல்வி, மற்றும், தகுந்த ஆசிரியரின் உதவியோடு, உண்மை என்றால் என்ன என்று சுதந்திரமாக ஒரு மாணவன் கண்டுபிடிக்க உதவ முடியுமா? உண்மையை, கருத்துச்சுருக்கமாக இல்லாமல், உறவுகளிலுள்ள உண்மைகளையும் அறியும்வண்ணம் மாணவனுக்கு உதவ வேண்டும். இயந்திரங்களுடன் அவனுக்கிருக்கும் தொடர்பு, இயற்கையுடன் அவன் கொண்டிருக்கும் உறவு, பணத்திற்கும் அவனுக்கும் உள்ள உறவு, சமூகத்துடன் கொண்டுள்ள உறவு, மற்றும் அரசாங்கத்துடனிருக்கும் தொடர்பு என்பது போன்ற அவனுடைய உறவுமுறைகள் பலவற்றின் உண்மையை, சுதந்திரமாக அறியும் வண்ணம், அவனுக்கு, அவன் பெறும் கல்வியும் ஆசிரியரும் உதவ வேண்டும். இவ்வாறு உதவக் கூடிய ஆசிரியர், நடைமுறையில் உள்ள ஆசிரியர்கள் போலில்லாமல், வேறுபட்டவராக இருக்க வேண்டும், அல்லவா? மாணவனுக்குச் சுதந்திரம் அளிப்பதில் அவர் அக்கறையுடையவராக இருக்க வேண்டும். அப்படிப்பட்ட நிலையில், மாணவன்

விவேகத்தை வளர்த்துக் கொள்வதுபற்றி ஆராய முற்படுவான். படிப்படியாகத் தரம் குறைந்து வரும் சமூகத்தினால், விவேகத்தைத் தளையிட முடியாது.

மனிதன் செய்ய வேண்டிய சீரிய தொழில் என்று ஒன்று இருக்கிறதா? மனிதன் தனிப்பட்டு வாழ முடியாது; உறவுமுறைகளின் தொடர்போடு அவன் வாழ்கிறான். உண்மையையும், உறவுமுறைகளின் உண்மையையும், அந்தத் தொடர்பில் அவனால் கண்டுகொள்ள முடியா விட்டால், அங்குச் சச்சரவுகள் தோன்றுகின்றன.

உங்களுக்கும் எனக்கும் உள்ள சீரிய தொழில் ஒன்றே ஒன்று தான். உண்மையைத் தேடுதலில் அதன் வெளிப்பாடு இருக்கும். அதில், நாம் ஒருவரை யொருவர் அழித்துக் கொள்ள மாட்டோம், சண்டை போட மாட்டோம். சரியான கல்விமுறை மற்றும் தகுந்த ஆசிரியர் மூலமாகத்தான், முதலில் தொடங்க வேண்டும். ஆசிரியருக்கும் தகுந்த கல்வி தேவை. அடிப்படையில் ஆசிரியர், தகவல்களைத் தருபவர் மட்டுமல்ல, மாணவனுக்குள் சுதந்திரத்தையும், உண்மை என்றால் என்ன என்று கண்டுபிடிக்கவேண்டும் என்ற உத்வேகத்தை யும் கொண்டு வருபவராக இருக்கிறார்.

**கேள்வி :** எங்கள் கேள்விகளுக்கு நீங்கள் பதில் அளிக்கும்போது, உங்களின் ஞாபகங்கள் செயல்படு கிறதா அல்லது உங்கள் விஷய ஞானம் செயல்படுகிறதா?

**கிருஷ்ணமூர்த்தி :** இது உண்மையிலேயே மிகவும் சுவாரஸ்யமான கேள்வி, இல்லையா? விடையை கண்டுபிடிக்கப் பார்ப்போம்.

ஞாபகங்களும் விஷய ஞானமும் ஒன்றே, சரிதானே? விஷய ஞானம் இல்லாமல், விஷய ஞானத்தின் சேகரிப்

பாகிய ஞாபகம் இல்லாமல், உங்களால் பதிலளிக்க முடியுமா? கேள்வியின் எதிர்வினை (reaction) யின் வாய்மொழிவடிவம்தான் பதில், இல்லையா? கேட்கப் பட்ட கேள்வி : செயல்படுவது ஞாபகமா அல்லது விஷயஞானமா என்பது. அடிப்படையில், ஞாபகமும் விஷய ஞானமும் ஒன்று தான். ஏனென்றால், உங்கள் விஷய ஞானத்தை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளா விட்டால், அதனால் எந்த உபயோகமும் இல்லை, அதற்கு மதிப்பு இல்லாமல் போய்விடுகிறது.

விஷய ஞானம் செயல்படுகிறதா அல்லது ஞாபகம் செயல்படுகிறதா என்று வினவுகிறீர்கள். நம்மில் பெரும் பாலானோருக்கு எது செயல்படுகிறது? ஒரு கேள்வியைக் கேட்கும்போது, எது செயல்படுகிறது? விஷயஞானம் தான் செயல்படுகிறது என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. உங்கள் இல்லத்திற்குச் செல்ல வழி கேட்டால், விஷய ஞானமும் செயல்படுகிறது, ஞாபகமும் செயல்படுகிறது. நாம் பகவத் கீதையிலிருந் தும், உபநிடதங்களிலிருந்தும், விஷய ஞானத்தைச் சேகரித்து வைத்துக் கொள்கிறோம். மார்க்ஸ், ஸ்டாலின், மற்றும் நாம் விரும்பும் குருநாதர் என்ன சொல்கிறார் என்பதையும் திரட்டி வைத்துக் கொள்கிறோம். நமது அனுபவங்களும், தாக்கங்களும் மனதில் பதிவு செய்யப் படுகிறது. ஆக, இந்தச் சேகரிப்புகளும் மனப் பதிவுகளும் பின்புலத்திலிருந்துகொண்டு, கேள்விக்கான பதிலை வெளிப்படுத்துகிறது. இந்தச் செயல்முறை மட்டும்தான் நமக்குத் தெரியும். இதுதான் உண்மை. விஷயஞானமும் ஞாபகமும் தான் நீங்கள் வியாபாரம் செய்யும்போதும் செயல்படுகிறது, பாலங்கள் கட்டும்போதும் செயல்படு கிறது.

நீங்கள் கவிதை எழுதும்போது, அங்கு வாய்மொழி படுத்துதல், ஞாபகம், படைப்பதற்கான உந்துதல் என்பன

செயல்படுகின்றன; புதிதாகச் சிருஷ்டிக்க தோன்றும் உந்துதல் என்பது ஞாபகம் அல்ல. ஆனால், அதை சொல்லும்போது, அது, ஞாபகமாகி விடுகிறது.

ஆகவே, ஞாபகம், வாய்மொழியாக்கல், மொழி யாக்கச் செய்முறை ஆகியவை இல்லாமல், தொடர்பு கொள்வது இயலாத காரியம். நான் ஆங்கில வார்த்தைகளைப் பயன்படுத்திப் பேசாவிட்டால் உங்களுடன் பேச்சுத் தொடர்பு கொள்ள முடியாது. பேசும் அந்தச் செயலே, ஞாபகத்தின் செயல்பாடுதான். பேச்சாளர் பதிலளிக்கும்போது, செயல்படுவது ஞாபகமா அல்லது வேறு ஏதாவதா? நான் சொற்களை உபயோ கித்துப் பதிலளிப்பதால், ஞாபகம் செயல்படுகிறது என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. ஆனால், அவ்வளவு மட்டும்தானா?

கடந்த இருபது ஆண்டுகளாகப் பேசியிருக்கும் கணக்கற்ற சொற்பொழிவுகளின் சேகரிப்பாக, கிராம போன் தட்டைப் போல், திரும்பத் திரும்பச் சொல்லப் படுபவைகளின் சேகரிப்பாக இருக்கும் ஞாபகத்தி லிருந்தா நான் பதிலளிக்கிறேன்? நம்மில் பலர் அப்படித்தான் இருக்கிறோம். நமக்கென்று குறிப்பிட்ட செயல்கள், குறிப்பிட்ட எண்ண வகைகள் இருக்கிறது; அதையே நாம் மறுபடியும் மறுபடியும் செய்கிறோம். ஆனால் வார்த்தைகளைத் திரும்பச் சொல்வது என்பது வேறுபட்டது. ஏனென்றால், தகவல் தொடர்பிற்கு, வார்த்தைகள், பாதையாக அமைகிறது. திரும்பத் திரும்ப ஏற்படும் அனுபவங்களை நான் சேகரித்து, சேமித்து வைத்து, அந்தச் சேகரிப்பு கிடங்கிலிருந்து, இயந்திர கதியாக எடுத்துக் கொண்டு, மீண்டும் அதைச் செய்கிறேன். இந்தச் செயல்பாட்டில், ஞாபகம் செயல்படுகிறது.

என் முந்தைய அனுபவங்களிலிருந்து பதிலளிக்காமல், நான் பதில் சொல்லும் அத்தருணத்தில் உண்மையாகவே உணர்ந்து பதிலளிப்பது சாத்தியமாகுமா என்று கேட்கிறீர்கள். மறு அனுபவத்திற்கும், சுதந்திரமாக அனுபவித்தலுக்கும், நிச்சயமாக வித்தியாசம் இருக்கிறது. அனுபவித்தலை வாய்மொழிப்படுத்தி, ஞாபகமாக வெளியிடுகிறோம். இதைப் புரிந்துகொள்வது கடினமல்ல. தயவுசெய்து கவனியுங்கள்.

பேரவா என்றால் என்ன என்பதையும், மேலும், குறிப்பால் அது உணர்த்தும் அனைத்து விஷயங்களையும், நான் கண்டுபிடிக்க விரும்புகிறேன். இப்பொழுது நான் பேசிக் கொண்டிருக்கும் போதே, பேரவாவின் முழுமையான செய்முறையைப் பற்றி, முதல் முறையாய் ஆராய்வதுபோல், புதிதாக ஆராய முடியுமா? அல்லது, நேற்று பேரவாவைப் பற்றிச் செய்த ஆய்வின் முடிவை, இப்போது மறுபடியும் சொன்னால், அது திரும்பச் சொல்லுதல் ஆகும். நேற்றைய அனுபவம், குறிப்பிட்ட விஷயத்தைப் பற்றிய ஞாபகம், அதைப் பற்றிய குறிப்புகள் ஆகியவற்றின் மீது சார்ந்திராமல், புதியதாய் ஆய்வு செய்வதும், எப்பொழுதும் புதியதாய் அனுபவித்தலும், உணருதலும் செய்யக்கூடிய காரியம்தான், அல்லவா? தொடர்பு கொள்ள வேண்டி, நான் வார்த்தைகளை உபயோகித்தாலும், நான் பேசிக் கொண்டிருக்கும் இவ்வேளையில் நேற்றைய அனுபவங்களையே மீண்டும் பெறுவதாக இல்லாமல், புதியதாய் மலர்ச்சியுற்று, ஜீவனுடன் எந்நேரமும் இருத்தல் கூடுமா?

நான் பேசிக் கொண்டிருக்கும்போது செயல்படுவது எது என்பது உங்கள் கேள்வியாக உள்ளது. பத்து நாட்களுக்கு முன் சொன்னதையே, இப்போது நான் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தால், அதற்கு மிகக்

குறைந்த மதிப்பேயாகும். கற்பனையாக இல்லாமல், நிஜமாகவே, பேசும்போதே அனுபவித்து பேசினால், அப்பொழுது செயல்படுவது எது? அப்பொழுது செயல் படுவது, மலர்ச்சியுறுதலாகும். 'நான், தான்' என்ற உணர்வின் மூலமாக இல்லாமல், உள்ளக் கருத்தைத் தெரிவிப்பதாக இல்லாமல், ஞாபகத்தின் மூலமாகச் சொல்வதாக இல்லாமல், மலர்ச்சியுறுதல் மட்டுமே அங்குச் செயல்படுகிறது.

கடந்த காலத்தின் கிடங்காக இல்லாமல், நம் மனதை வைத்திருக்க முடியுமா என்பது பற்றியும் வாழ்க்கை என்னும் நீர்ப்பரப்பில், ஆடாது அசையாது நிற்கும் திறனுடன் மனம் இருக்க முடியுமா என்பது பற்றியும், நாம் கண்டுபிடிக்கவேண்டியது மிகவும் அவசியம். மனம் என்னும் நீர்ப்பரப்பில் ஞாபகங்கள் மிதக்கட்டும், பரவாயில்லை, ஆனால், மனம் குறிப்பிட்ட ஒரு ஞாபகத்தை மட்டும் இறுகப் பற்றிக் கொள்ளக் கூடாது. ஒருவரோடு ஒருவர் தொடர்பு கொண்டு பேச வேண்டும்போது, ஞாபகத்தின் உதவியை நாடலாம், தவறில்லை. அதாவது, கடந்த காலத்தை இடைவிடாமல் மிதக்க அனுமதிக்கும் மனம், தன்னை கடந்த காலமாக அடையாளப்படுத்திக் கொள்ளாமல், கடந்த காலத்தால் ஆக்ரமிக்கப்படாமல் இருக்க வேண்டும் என்று பொருள்படுகிறது; அப்படி இருப்பதனால், மனம், உறுதியாகவும், நிலைத்த தன்மையுடனும் இருப்பதோடு, தொடர்ந்து அனுபவித்தலில் உறுதியாக இருக்கும்.

மேற்கூறிய வகையில் செயல்படுவதால், மனம், சீர் கெடுவதில்லை, இடைவிடாமல் புதுப்பித்துக் கொள்ள வும் செய்கிறது. ஞாபகங்களைச் சேகரித்து சேமிக்கும் மனம், நலிவுறுகிறது. ஆனால், ஞாபகங்களை இறுகப் பற்றிக் கொள்ளாமல் அவற்றைப் போக அனுமதித்து,

அனுபவித்தலில் உறுதியாக இருக்கும் மனம், எப்பொழுதுமே புத்துணர்ச்சியுடன் இருக்கும். அது, எல்லாவற்றையும் புத்தம் புதியதாய்ப் பார்க்கும். மனம் மிகவும் அமைதியாக இருந்தால்தான், புத்தம் புதியதாய்ப் பார்க்கும் ஆற்றலைப் பெற முடியும். மனதின் அமைதியை, வரவழைக்க முடியாது, பயிற்சிகளின் மூலம் கொண்டுவர முடியாது, மற்றும் திடவுறுதியாலும் அடைய முடியாது. விஷய ஞான சேகரிப்பு, ஞாபகம், அனுபவம் ஆகியவற்றின் ஒட்டுமொத்த செய்முறையை, மனம் புரிந்து கொள்ளும் போது மட்டுமே, அது ஆழ்ந்த அமைதியில் இருக்கக் கூடும். இத்தகைய அமைதியோடு, ஜீவனுடன், துடிப்புடன் ஓடும் வாழ்க்கையெனும் நதியில், மனம், தன்னை நிலைநாட்டிக் கொள்கிறது.

**கேள்வி :** எவ்வகையான விஷயங்களில், மனதை ஈடுபடுத்தி, அதை ஒருமுகப்படுத்த வேண்டும்? நான் தியானம் செய்ய விரும்புகிறேன். எதன்மீது மனதை ஒருமுகப்படுத்தி, தியானம் செய்ய வேண்டும் என்று, தயவுசெய்து, எனக்குச் சொல்லுங்கள்.

**கிருஷ்ணமூர்த்தி :** தியானம் என்றால் என்ன என்பதைப் பற்றி இப்பொழுது பார்க்கலாம். நீங்களும் நானும் சேர்ந்து இதைக் கண்டுபிடிக்கப் போகிறோம். தியானம் என்றால் என்ன என்று நான் உங்களுக்குச் சொல்லப் போவதில்லை. நாமிருவரும் சேர்ந்து, தியானத்தைப் பற்றிப் புதிதாக எண்ணிப் பார்த்து, கண்டு பிடிக்கப் போகிறோம்.

தியானம் செய்ய கற்றுக் கொண்ட மனதினால், தியானம் செய்ய முடியாது. குறிப்பிட்ட ஒன்றின்மேல் சிந்தனையை ஒருமுகப்படுத்தி, மற்ற எண்ணங்களைத் தவிர்த்து, மன ஒருமைநிலையைக் கொண்டு வரும் வழிமுறையைக் கற்றுக் கொண்ட மனதினால், தியானம்

செய்ய முடியாது. ஆனால், ஒருமுகப்படுத்துதலையும், மற்ற எண்ணங்களை அகற்றி, ஒன்றின் மேல் மனதை நிலை கொள்ள வைப்பதையுமே, நாம் தியானம் என்று சொல்கிறோம். அதைக் கற்றுக்கொள்ள வேண்டும் என்று விரும்புகிறோம். ஆனால், தியானம் அதுவல்ல. அதிலிருந்து முற்றிலும் வேறுபட்டது தியானம். அதை நாம் இப்பொழுது கண்டறியப் போகிறோம்.

இங்கு முதல் கேள்வியாக எழுவது : மனம் ஏன் எதிலாவது எந்நேரமும் ஈடுபட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்று கட்டளை இடுகிறது என்பதே. ''நான் எதிலாவது ஈடுபட்டுக் கொண்டிருக்க வேண்டும், கவலைகளோ ஞாபகங்களோ அல்லது தீவிர நாட்டமோ எனக்குள் இருக்க வேண்டும்; அல்லது எப்படிப் பேரவாவுடன் இல்லாமல் இருப்பது, எவ்வாறு ஒன்றிலிருந்து விடுபடுவது அல்லது பாலம் கட்ட உதவும் தொழில் நுட்பத்தை எப்படிக் கண்டுபிடிப்பது என்பது போன்ற விஷயங்களிலாவது என்னை நான் ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும்'' என்று என் மனம் சொல்கிறது. ஆக, மனம், இடைவிடாத ஈடுபாட்டைத் தரக் கோருகிறது என்பதை நம்மால் காண முடிகிறது, இல்லையா? 'என் மனம் 'ஓம்' என்ற சொல்லில் லயித்திருக்க வேண்டும்' என்று இடைவிடாத ஈடுபாட்டைக் கோரும் மனம், உங்களைச் சொல்ல வைக்கிறது. அல்லது, 'ராம், ராம்' என்று நீங்கள் ஜபிக்கிறீர்கள் அல்லது நீங்கள் குடிப்பதில் மூழ்கி விடுகிறீர்கள். ஓம், ராம், குடித்தல் எல்லாம் ஒரே வகையானவையே. ஏனென்றால், அவை அனைத்துமே, மனம் தன்னை ஈடுபடுத்திக் கொள்ள எடுத்துக் கொள்ளும் விஷயமாக உள்ளது. எதிலும் ஈடுபடாமலிருந்தால், விஷமங்கள் செய்யக் கூடும், திசை மாறி அடித்துச் செல்லப்படக்கூடும் என்று மனம் சொல்கிறது. மனம் எதிலும் ஈடுபாடு கொள்ளாவிட்டால், வாழ்வின் நோக்கம்

தான் என்ன? அதனால், சிறப்பு மிக்கது என்றோ, இழிவானது என்றோ, அல்லது, எல்லாவற்றையும் விட மேன்மையானது என்றோ, வாழ்க்கையின் நோக்கத்தை நீங்கள் உருவாக்குகிறீர்கள். நீங்கள் உருவாக்கிய நோக்கத்துடன், ஒட்டிக் கொள்கிறீர்கள். அதில் தீவிர ஈடுபாடு கொள்கிறீர்கள். ஆன்மீக விஷயத்தில் கொண்டு இருக்கும் ஈடுபாடும் வியாபாரத்தில் கொண்டிருக்கும் ஈடுபாடும், ஒரே மாதிரியானவையே, அதில் வேறுபாடு எதுவுமில்லை. ஏனெனில், உணர்வுப்பூர்வமாகவோ அல்லது உள்ளாழ் மனநிலையிலோ, அது எதிலாவது ஈடுபட்டுக் கொண்டிருக்க வேண்டும் என்று மனம் விரும்புவதால், கடவுள் மீது கொண்டிருக்கும் ஈடுபாடும், வியாபாரத்தில் கொண்டிருக்கும் ஈடுபாடும் ஒன்றாகவே இருக்கிறது.

மனம், ஏன் சதா வேலையில் தன்னை ஈடுபடுத்திக் கொள்கிறது? தயவுசெய்து கவனியுங்கள். நாம் இப்பொழுது தியானம் செய்து கொண்டிருக்கிறோம். இதுதான் தியானம். இறுதியாகப் பெறும் நிலை அல்ல தியானம். சுதந்திரத்தை இறுதியில் பெறுவதாக இருக்கக் கூடாது; சுதந்திரம், தொடக்கத்திலேயே இருக்க வேண்டும். தொடக்கத்தில் சுதந்திரம் இல்லையென்றால், இறுதியிலும் உங்களுக்குச் சுதந்திரம் இல்லை. இப்பொழுது உங்களிடம் அன்பு இல்லையென்றால், பத்து வருடங்கள் கழித்தும் உங்களிடம் அன்பு இருக்காது. ஆகவே, தியானம் என்றால் என்ன என்பதை இப்பொழுதே நாம் கண்டுபிடிக்க முனைகிறோம். இந்த விசாரணையே தியானம் ஆகிறது.

''கடவுளிடம், நற்பண்புகளுடன், கவலைகளுடன் அல்லது என் வியாபார விஷயங்களுடன், நான் இடை விடாமல் ஈடுபட்டுக் கொண்டிருக்க வேண்டும்'' என்று

என் மனம் சொல்கிறது. அதனால் ஓயாமல் அத்தகைய செயல்களில் மும்முரமாக ஈடுபடுகிறது. சுறுசுறுப்புடன் தனக்கு விருப்பமானவற்றில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் வரை, தன்னை, தான் செய்யும் வேலைகளால் உணரும்வரை மட்டுமே, மனம் நிலைத்திருக்க முடியும். தான் ஈடுபட்டிருக்கும் வேளைகளிலும், தான் செயல் படும்போதும், பலனை அனுபவிக்கும் போதும், மனம் தன்னைக் காண்கிறது. அது, பலனை எதிர்பார்ப்ப தாகவோ, கொள்கைகளை ஆதரிக்கும் வண்ணமோ, கொள்கைகளை எதிர்க்கும் வண்ணமோ இயங்கும்போது, மனம், தான் இருத்தலை உணர்கிறது.

என்னுடைய பதில்களை, எனது தாக்கங்களை, எனது ஞாபகங்களை வெளியே விட்டும், அவ்வகையான வைகளை மீண்டும் சேகரித்தும், என் பிரக்ஞை உள்முக மாகவும் வெளியிலும் செயல்படும்போது, என் இருத்தலை, நான் உணருகிறேன். வந்து கொண்டும் வெளியே சென்று கொண்டும் நடமாட்டம் இருந்தால் தான், என்னை உணர்கிறேன். நான் சிந்திக்கும் போதும், ஒன்றோடு முரண்படும்போதும், துன்பப்படும்போதும், ஈடுபட்டிருக்கும்போதும், முறிந்த உறவுகளாலும், தெரிவு செய்ய வழி இருக்கும்போதும் மட்டுமே, என் மனம், மற்றும் 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வு இருக்கிறது.

ஆக, பேரவா கொண்டு இலக்கினை நோக்கி பயணிக்கும்போது, மனம், இருத்தலை அறிகிறது. பேரவா சலிப்பூட்டுவதாக இருப்பதால், 'நான் கடவுள் பற்றிய சிந்தனையில் என்னை ஈடுபடுத்திக் கொள்வேன்' என்று மனம் சொல்கிறது. கடவுளிடத்தில் கொண்டி ருக்கும் ஈடுபாடும், பணத்திடம் கொண்டிருக்கும் ஈடு பாடும், ஒரே தன்மையுடையவே. கடவுளிடம் ஈடுபாடு கொண்டவர், பணத்திடம் ஈடுபாடு கொண்டவரை விட,

மிகவும் புனிதமானவர் என்று நினைக்கிறோம். ஆனால், உண்மையில் அவர்கள் இருவரும் ஒரே மாதிரியான வர்களே; இருவரும் பலனை எதிர்பார்க்கிறார்கள். இருவரும் ஏதோவொன்றில் ஈடுபட விரும்புகிறார்கள். ஆகவே, எதிலும் ஈடுபடாமல், மனம்,இருக்க முடியுமா? இது தான் பிரச்சனை.

ஒப்பிடுதல் இல்லாவிட்டால், மனம், வெறிச் சோடிப் போகிறது. 'இன்னும் அதிகமாக / குறைவாக' என்பது போன்ற ஒப்பிடுதலில், மனம், தன் இருத்தலை உணர்கிறது, அல்லவா? 'நான்' என்ற உணர்வுடன் இருக்கும் மனம், 'உள்ளதை' கொண்டு எப்பொழுதுமே திருப்தி அடைவதில்லை; சேகரித்தல், ஒப்பிடுதல், கண்டனம் செய்தல், இன்னும் அதிகம் வேண்டும் என்று கோரிக்கை விடுத்தல் என்பதாக, சதா செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. இவ்வாறான கோரிக்கைகளாலும், 'இன்னும் அதிகம்' என்பதான ஒப்பிடுதல்களாலும், மனம், தன் இருத்தலை உணர்கிறது - இதையே நாம் தன்னுணர்வு என்று கூறுகிறோம். பிரக்ஞையாகப் புறத்திலும், உள்ளாழ் மனமாக உள்முகத்திலும் இருப்பது தன்னுணர்வு. இதுதான் நம் வாழ்க்கை. இதுதான் நம் அன்றாட வாழ்க்கைமுறை.

தியானம் என்றால் என்ன என்று அறிய விரும்பு கிறேன். அதனால், தியானத்தில் ஈடுபட விழைகிறேன். தியானத்தைப் பற்றி அறிய விரும்புவதால், என் மனம், தியானம் பற்றிய விஷயங்களால் ஆக்ரமிக்கப் படுகிறது. இப்படி விஷயஞானத்தால் நிரப்பப்பட்ட மனதினால், தியானம் செய்ய முடியுமா? தியானம் என்பது, மனதின் வழிமுறைகளைப் புரிந்துகொள்வதேயாகும். என் சிந்தனை எவ்வாறு இயங்குகிறது, வேலை செய்கிறது என்பதைப் பற்றி எனக்குப் புரிதல் இல்லையென்றால்,

என்னால் எப்படித் தியானம் செய்ய முடியும்? சத்தியம் என்றால் என்ன என்பதை, உண்மையில் எப்படி என்னால் கண்டுபிடிக்க முடியும்? ஆகவே, எவ்வாறு ஆக்ரமிக்கப்பட்டிருக்கிறது, எதனால் நிரப்பப்பட்டிருக் கிறது என்பதை மனம் கண்டுபிடிக்க வேண்டும். அதைப் புரிந்து கொள்வதால், எல்லாவகை ஈடுபாடுகளும் ஒன்றே என்பதை மனம் அறிகிறது. சொற்களாலும், கொள்கை களாலும் ஓயாமல் தன்னை நிரப்பிக் கொள்ளும் மனதில், அமைதி என்றுமே இருப்பதில்லை.

அன்பு என்றால் என்ன என்பதைக் கண்டுபிடிக்க மேற்கொள்ளும் முயற்சிகளும், மனதின் ஈடுபாடாக, அதை ஆக்ரமிக்கும் விஷயங்களாகவே உள்ளது, இல்லையா? வெறித்தனமான பேரார்வத்துடன் இருக்கும் ஒருவரோடு அத்தகைய மனதை ஒப்பிடலாம்.

சத்தியத்தைக் கண்டுபிடிக்க வேண்டும் என்று நீங்கள் சொல்லும்போது, உங்களால் அதைக் கண்டுபிடிக்க முடியுமா? அல்லது, மனம் நிரப்பப்படாமல், ஒன்றைப் பெறும் வண்ணம் காலியாக இருக்கும்போதும் மற்றும் எதையும் சேகரிக்காமல் இருக்கும்போதும் மட்டுமே, சத்தியம் வெளிப்படுமா? சத்தியத்தைப் பெறுவது என்பது ஒரே ஒரு முறை மட்டுமே. ஆனால், பெற்றுக் கொண்டதை ஞாபகங்களாக்கி, அந்த ஞாபகங்களில் சதா ஈடுபட்டுக் கொண்டிருந்தால், நீங்கள் ஒருகாலும் அதைத் திரும்பப் பெற முடியாது. ஏனெனில், சத்தியத்தின் தரிசனம், கணத்திற்குக் கணம் நிகழ்வதாகும். ஆகவே, அது காலவரம்பிற்கு அப்பாற்பட்டதாக உள்ளது.

காலத்தின்பாற்பட்ட மனதால், காலமற்றதைப் பெற்றுக் கொள்ள முடியாது. ஆகவே, மனம் முழுமை யான மோனத்தில், சலனமற்று, வெறுமையில், எந்த வொரு திசையிலும் எந்தவொரு இயக்கமும் இல்லாமல்

மௌனத்தில் இருக்க வேண்டும். இந்நிலை எப்பொழுது வருமென்றால், மனம், எதனாலும் நிரப்பப்படாம லிருக்கும்போதுதான், வரும். 'இன்னும் அதிகம்' போன்ற ஒப்பிடுதலில் ஈடுபடாமலிருக்கும் போதும், பிரச்சனை கள், கவலைகள், தப்பித்தல் வழிகளில் மனம் ஈடுபடாமல் இருக்கும்போதும் சலனமற்ற நிலை ஏற்படும். எந்தவொரு நம்பிக்கையாலும், எந்தவொரு உருவகத்தாலும், எந்தவொரு அனுபவத்தாலும், மனம் தளைபடாமல் இருப்பதும் அந்த நிலை பெறுவதற்கு மிகவும் அவசியம். மனம் முற்றிலுமாக விடுதலை பெற்ற நிலையில் தான், ஆழ்ந்த மோனநிலை தோன்ற வாய்ப் புள்ளது. ஆழ்ந்த மோனத்தில், நிலைபேறுடையது (eternal) வெளிப்படுகிறது. அதுவே தியானம் ஆகும்.

மார்ச் 11, 1953
மும்பை.



# கேள்விகள் அட்டவணை

## அத்தியாயம் ஒன்று

1. நாட்டில் பஞ்சம் நிலவுகிறது. மக்கள் பட்டினியால் வாடுகிறார்கள். நீங்கள் இங்கே உட்கார்ந்து கொண்டு பேசிக் கொண்டிருக்கும் விஷயங்கள், காலி வயிற்றை நிரப்பாது. பட்டினியால் வாடும் அண்டை வீட்டுக் காரருக்கு உதவ வேண்டிய பொறுப்புணர்வை நாங்கள் இழப்பதற்கு, உங்கள் பேச்சு காரணமாக இருக்காதா?

– பக்க எண். 27

2. உங்கள் சொற்பொழிவுகளை நாங்கள் பல வருடங் களாகக் கேட்டு வருகிறோம். இருந்தும், அற்பத்தன மானவர்களாக, விகார புத்தி கொண்டவர்களாக, குரோதம் கொண்டவர்களாகவே இன்னும் இருக்கிறோம். பல சமயங்களில், உங்களால் கைவிடப்பட்டவர்கள் போல உணர்கிறோம். எங்களைச் சீடர்களாக, நீங்கள் ஏற்றுக்கொள்ள வில்லை என்று தெரியும். இருந்தாலும், எங்களை முன்னேற்ற வேண்டிய உங்கள் பொறுப்பை, நீங்கள் தட்டிக் கழிக்கலாமா? நீங்கள் எங்களைக் கரையேற்ற வேண்டாமா?

– பக்க எண். 30

3. நீங்கள் உன்னதமான கருத்துகளை வழங்குகிறீர்கள். அப்படி வழங்க, முறை எதையாவது பின்பற்று கிறீர்களா? எடுத்துரைக்கும் முறை என்று ஏதாவது உங்களிடமிருந்தால், அதை, நான் உங்களிடமிருந்து கற்றுக் கொண்டு, துயரத்திலிருக்கும் பலருக்கும், உங்கள் போதனைகளைக் கொண்டு சேர்ப்பேன்.

– பக்க எண். 36

## அத்தியாயம் இரண்டு

1. யார் உண்மையிலேயே சமயப்பற்றுள்ளவர்? அவருடைய எந்தச் செயலால் அவரை அறிந்து கொள்ள முடியும்?

– பக்க எண். 50

2. நான் ஒரு எழுத்தாளன், உங்கள் சொற்பொழிவைச் சில ஆண்டுகளுக்கு முன் கேட்டேன். அதிலிருந்து எழுத வேண்டும் என்ற ஆசையே இல்லாமல் போய் விட்டது. தன்னைப் பற்றிய ஞானம் கிடைத்து விட்டால், அதன் தவிர்க்க முடியாத விளைவாக, வெளிப்படையான வாய்மொழிக்குப் பஞ்சம் வந்து விடுமா?

– பக்க எண். 54

3. தன் இயற்கையான சுபாவத்தின்படி, மனிதன் செயல்படுகிறான். அவன் விரும்பாவிட்டாலும், பாவங்களைச் செய்வதற்கு அவன் கட்டாயப்படுத்தப் படுவது போலத் தோன்றுகிறது. அவனை, தவறான செயல்களைச் செய்யத் தூண்டுவது எது?

– பக்க எண். 57

4. நான் மரணத்தின் வாசலுக்கே சென்றிருக்கிறேன். தற்சமயத்திற்கு, ஆபத்து விலகியுள்ளது. ஆனால், மரணம் வந்தே தீரும் என்பதை நானறிவேன். மரணத்தை எப்படி எதிர்கொள்வது என்று எனக்குக் கற்றுக் கொடுங்கள்.

– பக்க எண். 60

## அத்தியாயம் மூன்று

1. என் உடலும், மனமும், ஆழமாக வேரூன்றி இருக்கும் வேட்கைகளாலும் அறிந்த பயங்களாலும் அறியாத பயங்களாலும் ஆனதாகத் தோன்றுகிறது. நான், என் மனதைக் கண்காணிக்கிறேன். ஆனால், அடிப்படையில் இருக்கும் பயங்கள் அடிக்கடி என்னை அடக்கி விடுகின்றன. என்னால் என்ன செய்யக்கூடும்?

– பக்க எண். 77

2. எனது வாழ்க்கை, என் கணவரோடும் மற்ற உறவினர்களோடும் சரிகட்டிக் கொண்டு இணங்கிப் போவதாகவே எப்பொழுதும் இருக்கிறது. நான் சந்தோஷமாக இருப்பதாகவே இத்தனை நாட்களும் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால், உங்கள் சொற்பொழிவைக் கேட்டபிறகு, உற்சாகமற்ற என் வாழ்க்கையின் குறைபாடுகள் எனக்கு வெளிப்பட்டது. என்னுடைய அன்றாட வாழ்க்கைக்கு, உங்கள் போதனைகள், ஒளியூட்டவில்லையென்றால், நான், உங்கள் சொற்பொழிவைக் கேட்பதில் என்ன பலன் இருக்கிறது?

– பக்க எண். 86

3. உங்கள் சொற்பொழிவைக் கேட்கிறேன். சில சமயங்களில், உங்கள் பேச்சு எனக்குப் புரிவதாக உணர்கிறேன். உங்கள் சொற்களை, வேறொருவர் சொல்கிறார். ஆனால், அங்குப் புரிதல் இல்லை. புரிந்து கொள்ளப்பட்டது என்ன?

– பக்க எண். 90

4. உள்ளாழ் மனப்புரட்சி பற்றி நீங்கள் பேசுகிறீர்கள், உள்ளாழ் மனதைப் பற்றி, எண்ணங்கள் அறிய முடியாது. எண்ணத்தின் துணையில்லாமல், என்னால் எப்படி உள்ளாழ் மனதில் புரட்சி ஏற்பட்டுள்ளதா என்பதை அறிந்து கொள்ள முடியும்? எங்களை வசியம் செய்து, அத்தகைய புரட்சி தோன்றுவதாக எங்களைக் கற்பனை செய்ய வைப்பதற்காக, அம்மாதிரியான வார்த்தைகளை உபயோகிக்கிறீர்களா?

– பக்க எண். 94

## அத்தியாயம் நான்கு

1. எனக்குத் தற்கொலை செய்துகொண்டு விடலாம் போலிருக்கிறது; என்னைப் பொறுத்தவரை, வாழ்க்கையில், ஒரு இலட்சியமும் இல்லை, அர்த்தமுமில்லை. எங்குத் திரும்பினாலும், கலக்கமும், கஷ்டங்களும், வெறுப்பும் தான் தாண்டவமாடுகிறது. இந்தப் பயங்கரமான உலகத்தில், நான் எதற்குத் தொடர்ந்து வாழ வேண்டும்?

– பக்க எண். 112

2. சில நேரங்களில், அமைதியான மனநிலையில் இருந்திருக்கிறேன். மனம், சாந்தமாக, சமநிலையில்

இருந்திருக்கிறது. ஆனால், அத்தகைய நிலை, வெகு சீக்கிரமே மறைந்து விடுகிறது. எப்படிச் சீரான சமநிலையை தக்க வைத்துக் கொள்வது?

– பக்க எண். 117

3. நம் சிந்தனையில் புரட்சி ஏற்பட வேண்டியதின் அவசியத்தை, நீங்கள் வலியுறுத்திக் கூறுவது எனக்குப் புரிகிறது. வெற்றுக் கருத்துகளை ஆதரிக்க கட்டாயமாக மறுக்கும், உங்கள் நோக்கமும் புரிகிறது; ஆனால், நமது சிந்தனை, நாம் வாழும் முறைக்கேற்ப அமைகிறது. நிலத்தையும் செல்வங்களையும் தன்னார்வத்துடன் எல்லோருக்கும் பகிர்ந்தளிக்குமாறு பரிந்துரைத்து நீங்கள் ஏன் பிரச்சாரம் செய்யக் கூடாது? பகிர்ந்தளிப்பதால், எல்லோருக்கும் எல்லாமும் கிடைப்பதால், உங்கள் போதனைகளைப் புரிந்து கொள்ள சரியான சூழ்நிலை ஏற்படும்; சாதாரண மக்களும், நீங்கள் சொல்வதைப் புரிந்து கொள்வார்கள். சத்தியத்தைத் தேடுபவர் நிறைவேற்ற வேண்டிய குறைந்த பட்ச நிபந்தனைகளை, நீங்கள் ஏன் விதிக்கக் கூடாது?

– பக்க எண். 119

## அத்தியாயம் ஐந்து

1. அழகைப் பற்றி நிறைய பேசியுள்ளீர்கள். இப்போது அவலட்சணத்தைப் பற்றி எங்களுக்குச் சொல்லுங்கள்.

– பக்க எண். 135

2. பொறாமை உணர்விலிருந்து எப்படி நான் விடுபடுவது?

– பக்க எண். 141

3. நீங்கள் அடையாளப்படுத்தாமலிருக்கும் நிலையைப் பற்றிப் பேசியிருக்கிறீர்கள். அந்த நிலை எப்பொழுது வரும்?

– பக்க எண். 145

## அத்தியாயம் ஆறு

1. நீங்கள் யார்? நான் கேட்டுக் கொண்டு இருப்பது யாருடைய உரையை? 'எந்தக் குருவையும் சார்ந்து இருக்காதீர்கள்' என்று சொல்கிறீர்கள்; 'நான் சொல்வதைக் கேளுங்கள்' என்றும் சொல்கிறீர்கள்; உங்கள் உரையைக் கேட்பது என்பது எல்லோரையும் விட மிகவும் மேன்மையான குருவின் உரையைக் கேட்பதாகும். எனக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது. நான் என்ன செய்ய?

– பக்க எண். 158

2. மகிழ்ச்சி என்றால் என்ன? புதிய அனுபவங்களுக்காக மனம் ஏங்குவது, மகிழ்ச்சியைத் தேடிப் போவதால் தானே? மனவெளிக்கு அப்பால் இருக்கும் மகிழ்ச்சி நிலை என்று ஏதாவது இருக்கிறதா?

– பக்க எண். 165

3. பேரறிவைப் பற்றி நீங்கள் நிறைய பேசியிருக்கிறீர்கள். பேரறிவுடன் இருப்பது என்றால் என்ன?

– பக்க எண். 170

4. பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று அனைத்து சமயங்களுமே வற்புறுத்துகின்றன. பிரார்த்தனையின் சக்தியைப் பற்றித் தயவுசெய்து நீங்கள் விளக்கிக் கூற வேண்டும். தியானத்திலிருந்து பிரார்த்தனை எப்படி வித்தியாசப்படுகிறது?

– பக்க எண். 174

## அத்தியாயம் ஏழு

1. நாற்பது நாள் குழந்தையாக இருந்த போதிலிருந்தே நான் ஊனமுற்றவனாக இருக்கிறேன். நீங்கள் பாதுகாப்புப் பற்றிப் பேசுகிறீர்கள். எனக்கு வீடு, நண்பர்கள், தொழில் என்று எதுவுமே கிடையாது. வாழ்க்கையை நான் எப்படி எதிர்கொள்வது?

– பக்க எண். 189

2. ஒரு எண்ணத்திற்கும் மற்றொரு எண்ணத்திற்கும் இடையே உள்ள இடைவேளை பற்றிச் சொல்லியிருக்கிறீர்கள். தயவு செய்து அதைப் பற்றி விளக்கமாக கூற வேண்டுகிறேன். பெரும்பாலான நம் எண்ணங்கள் முக்கியமற்றவை, அற்பமானவை. இந்த முக்கியமற்ற எண்ணங்களைப் பின்தொடர்ந்து சென்று பார்ப்பது அவசியம் தானா?

– பக்க எண். 192

3. மன்னிப்பு என்றால் என்ன? மன்னிப்பும் கருணையும் ஒத்திருப்பவையா? பிறரை மன்னிக்க முடியும். ஆனால், தன்னை மன்னிப்பதும் அவசியமல்லவா?

– பக்க எண். 197

4. கடந்த கால நினைவுகளிலிருந்து, நான் எப்படி விடுதலை பெறுவது?

– பக்க எண். 201

5. சுலபமாக மறுத்துவிடக் கூடிய விஷயமாகக் கடவுள் இல்லை. கடவுள் என்ற கருத்தினையே நீங்கள் சாடுகிறீர்கள். பிறகு, உலகத்திற்கு நீங்கள் வழங்கும் வழிதான் என்ன?

– பக்க எண். 204

## அத்தியாயம் எட்டு

1. ஒன்று கூடி செயல்புரிய வேண்டியிருக்கும் இந்த உலகத்தில், தனி மனிதனின் சுதந்திரத்தை நீங்கள் வலியுறுத்துவது ஏன்?

– பக்க எண். 217

2. உங்கள் முன் அமர்ந்து நீங்கள் பேசுவதைக் கேட்கும் பொழுது, அளவிடற்கரிய மோனக் கடலின் முன் அமர்ந்திருப்பதாக உணர்கிறேன். உங்கள் மேல், மரியாதையும் பயபக்தியும் எனக்கு உடனே தோன்று கிறது. எனக்கு அப்படி தோன்றுவதால் நான் உங்களைக் குருவாக ஏற்றுக் கொள்கிறேன் என்றா பொருள்படும், இல்லையல்லவா?

– பக்க எண். 223

3. என் எண்ணங்களையும், உணர்வுகளையும் நான் விழிப்புடன் நோக்கும் போது, அவை மறைந்து விடுகின்றன. எதிர்பாராத வேளையில் அவை மீண்டும் என்னைப் பிடித்து, நசுக்கி விடுகின்றன. என்னைத் தொந்தரவு செய்யும் எண்ணங்கள் எல்லாவற்றி லிருந்தும் விடுதலை பெற என்றாவது என்னால் முடியுமா? மனத் தளர்ச்சிக்கும் மனக் கிளர்ச்சிக்கும் இடையில் தான் எந்நாளும் நான் வாழ வேண்டுமா?

– பக்க எண். 225

4. தியானத்தைப் பற்றி எங்களுக்குச் சொல்லுங்கள்.

– பக்க எண். 232

## அத்தியாயம் ஒன்பது

1. சுதந்திரம் பற்றிப் பேசுகிறீர்கள். சுதந்திரம், கடமைகளை யாற்ற வலியுறுத்தவில்லையா? சமுதாயத்திற்கும், எனக்கும், நான் ஆற்ற வேண்டிய கடமை என்ன?

– பக்க எண். 246

2. காலம், காலமற்றது என்று நீங்கள் குறிப்பிடுவதின் பொருளை, தயவுசெய்து, எங்களுக்கு விளக்கி கூறுங்கள். காலத்திலிருந்து எப்பொழுதாவது விடுதலை கிடைக்குமா?

– பக்க எண். 251

3. ஆட்சியிலிருக்கும் அமெரிக்க அரசியல் தலைவர்கள் கைகளிலும், ரஷ்ய அரசியல் தலைவர்கள் கைகளிலும், நவீனகால விஞ்ஞானிகள் அழிவை உண்டாக்கும் சக்திகளைப் பெருமளவில்

கொடுத்திருக்கின்றனர். மக்களிடையே அன்பு கனிந்த உறவிற்கே இடமில்லையோ என்று தோன்றுகிறது. கொடூரம் தலை விரித்தாடும் இந்தக் கால கட்டத்தில், மனித வாழ்க்கையின் பொருள் என்ன?

– பக்க எண். 257

4. கடவுள் என்றால் என்ன? அன்பு என்றால் என்ன? இறத்தல் என்றால் என்ன?

– பக்க எண். 260

## அத்தியாயம் பத்து

1. வாழ்வில் துயரங்கள் மிகுந்திருக்கும்போது பெரும் பாலானோர், காலம் ஒரு நாள் மாறும் என்ற நம்பிக்கையில் தான் வாழ்கிறார்கள். நம்பிக்கை இல்லாத வாழ்க்கை, அச்சமூட்டுவதாக இருக்கிறது. பல நேரங்களில் நம்பிக்கை, வெறும் கானல் நீராகவே இருக்கிறது. வாழ்க்கைக்கு நம்பிக்கை ஏன் தவிர்க்க முடியாததாக இருக்கிறது என்பதை நீங்கள் விளக்கிச் சொல்ல முடியுமா?

– பக்க எண். 271

2. 'நமது தொழில்' என்ற சொற்களை நீங்கள் எந்த அர்த்தத்தில் குறிப்பிடுகிறீர்கள் என்று தயவுசெய்து எங்களுக்குச் சொல்லுங்கள். சாதாரணமாக அச்சொற்கள் உணர்த்தும் அர்த்தத்திலிருந்து வேறுபட்ட ஒன்றை நீங்கள் குறிப்பிடுவதாக நான் எண்ணுகிறேன்.

– பக்க எண். 278

3. எங்கள் கேள்விகளுக்கு நீங்கள் பதில் அளிக்கும் போது, உங்களது ஞாபகங்கள் செயல்படுகிறதா அல்லது உங்கள் விஷய ஞானம் செயல்படுகிறதா?

– பக்க எண். 281

4. எவ்வகையான விஷயங்களில், மனதை ஈடுபடுத்தி, அதை ஒருமுகப்படுத்த வேண்டும்? நான் தியானம் செய்ய விரும்புகிறேன். எதன்மீது மனதை ஒருமுகப்படுத்தி தியானம் செய்ய வேண்டும் என்று, தயவுசெய்து, எனக்குச் சொல்லுங்கள்.

– பக்க எண். 286



மேலோட்டமாக நிகழும் புரட்சி முக்கியமானதல்ல. ஆனால், உள்ளாழ் மனதில் ஏற்படும் புரட்சியே மிக முக்கியமானதாக நான் கருதுகிறேன்.

– ஜே. கிருஷ்ணமூர்த்தி

இந்நூலில் வெளியிடப்பட்டிருக்கும் ஜே. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் பத்து சொற்பொழிவுகள், அரை நூற்றாண்டுகளுக்கும் முன்பாக 1953–ஆம் ஆண்டில் அவர் ஆற்றியது. ஆயினும், இவை தற்காலத்திற்கும் ஏற்புடையதாகவுள்ளது. இதற்குக் காரணம், மனித இயல்பு பற்றியும், சமூகம் பற்றியும், தனிநபர் பிரச்சனைகளைப் பற்றியும் ஜே. கிருஷ்ணமூர்த்தியின் தெளிந்த புரிதலிலிருந்து பிறந்தவைகளாக இவை இருப்பதேயாகும்.

பிரச்சனைகளுக்கான அவருடைய பதில்கள், கால வரம்பிற்குட்படாத தீர்க்கதரிசனத்தில் வேரூன்றி இருப்பதால், அவை எக்காலத்திற்கும் பொருத்தமானவைகளாக உள்ளன.

மனித குலம் முழுமைக்கும் உள்ளாழ் மனநிலையில் தாக்கத்தை உண்டுபண்ணும் புரிதல்தான், மாற்றத்தைக் கொண்டுவரும் என்பதை அவர் போதனைகள் வலியுறுத்துகின்றன.

பொருளாதாரச் சீர்திருத்தம் மற்றும் சமூகச் சீர்திருத்தங்களால் மட்டும் புதியதோர் உலகைத் தோற்றுவிக்க முடியாது, பரிபூரண அடிப்படை மாற்றத்தை மனித மனம் அடைந்தால் மட்டுமே, அது சாத்தியமாகும் என்ற அவருடைய திட நம்பிக்கை, அவருடைய போதனைகளின் மையமாக இருக்கிறது.